உ

முருகக் கடவுள் துணை



# திருச்செந்திற் பிரபந்தம்

## பதிவுறில் உரையுடன் கூடிய

2-வது—சிலேடை வெண்பா

3-வது—திரிபந்தாதி

4-வது—யமகவந்தாதி

(இரண்டாம் பகுதி)

திருச்செந்தூர்

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தான

வெளியீடு

குருவே துணை

# திருச்செந்திற் பிரபந்தம் பதினாறில் 2-வது – சிலேடை வெண்பா

## முகவுரை.

தண்டபா ணிப்பெரியோன் சந்தவரைக் கந்தன்மிசை
விண்ட சிலேடையாம் வெண்பாநூல் – கண்டறியும்
அன்பர் புலவர் அரும்பெரிய செந்தமிழ்ச்சீர்
இன்பமடை வாரெனல்மெய் யே.

"சிலேடை" என்பது இரு பொருள்படக் குலவும் தன்மையது. சிந்தித்துப் பொருள் காணவும் மகிழவும் கூடிய சிறப்புடையது சிலேடைச் சொல். இருவித பொருள் தரும்சொற்களால் பல்நயமான கவிகளை எளிதிற் பாடவல்ல புலவர் பெருமக்கள் அன்று பலரிருந் தனர். காளமேகப் புலவர், இரட்டைப் புலவர் போன்ற வர்கள் இப்பாட்டு இயற்றுவதிற் சிறந்தவராவர். கலம் பகமென்ற நூலின் உறுப்பான குறம, மறம், களி, சித்து சம்பிரதம் போன்ற இடங்களில் இப்பாடல் முக்கிய இடம் பெறும். கலசைச் சிலேடைவெண்பா என்ற நூல் இந் நூலைப் போன்றதேயாம். வேறும் பலவுள.

இந்நூலில், முதலடியில் ஒருபொருளைக் குறிப்பிட்டு இரண்டாம் அடியில் இருபொருளுக்குமேற்ற இரு பொருள் தரும் சொற்களையமைத்து, மூன்று நான் காம் அடியில் செந்திற்பதியையும் பெருமானையும் அப் பொருளிலமைய அவனது தலம் இடம் இத்தகையது என்று அழகுபெறப் பாடப்பட்டிருக்கிறது. "எல்லாப் புலவர்க்கும் வெண்பா புலி" என்பது பழம் பாட்டு.

பொதுவாக வெண்பாப் பாடுவது அரியது என்ற போது இரு பொருள் கொண்டு சிலேடையில் நயமும் கருத்தும் பொருந்தப் பாடுவது எளிதன்றென்பது சொல்லாமலே தெரிகிறது.

இந்நூல் ஆசிரியரான வண்ணச்சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் அருட்டிரு தண்டபாணி சுவாமிகள். திருச்செந்திலாண்டவனைக் குறித்து இதனை யியற்றியுள்ளார். இவர் எவ்விதப் பாட்டாயினும், பனையேட்டில், ஒரே தடவையாகத் தாமே எழுது மியல்பினர்.

என்மனதில் ஒன்றெண்ண என்கைமற் றொருவண்ணம்
எழுதிடும் இயற்கை —என்று கூறுகின்றார் வேறு ஒரு நூலில். தான் எழுதக் கருதியதைவிட உயர்ந்த கருத்துடன் பாட்டெழுதப்பெறும் சிறப்பு இயல்பானது. அன்றியும், புலவர் புராணம் என்ற ஒரு வரலாற்று நூல் கூறத் தொடங்கிப் பொதுப்பாயிரம் பாடி முடித்த சமயம் அடுத்துக் கூற இருப்பது இது என்று முன்னேற்பாடோ திட்டமோ வகுத்துக்கொள்ளாமல் திருவருள் விளக்கி வைப்பதையே கூறுவேன் என்ற தம் குறிக்கோளை விளக்கி "வருசிறப்புப் பாயிரமென் றுன்னுகின்றேன் கவிதை—வந்தபின்பார்த் துவப்பதென்றன் வழக்கம்உலகீரே" என்று கூறுவதனால் நன்கறியலாம். மேலும் இதையடுத்த 8–வது நூற்பகுதியான அகப்பொருட் கோவை நூலின் பாயிரத்தில், "என்னோடு நீதுணையாவாய் வெண்டாமரை யேந்திழையே" என்று கூறுகின்றனர். முருகப்பெருமான் திருவருளைத் துணைகொண்டு நான் பாடுகின்றேன், நீ துணையாயிரு என்று கலைமகளை அழைப்பதால் இவர் தற்சுதந்தரமற்றுச் செயல் புரிகின்றார் என்பதை யறியலாம்.

வெண்பா நடை அரிதென்றாலும், சந்தக்கவி பாடும் பெரும்புலவர்கட்கு மிக எளியது என்பது இவர் கருத்து" "வெண்டளையின் மாண்பெல்லாம், அருமையாம் வண்ணம் கழிக்கும் ஆபாசம் என்பதை அறிகிலீர் போலும்"

என்று புலவர்கள் சிலரை முன்னிலையாக்கி ஒரு சமயம் கூறினர். எனவே, சந்தக்கவிகளைப் பெரிய நடையில், துறைகள் பல வமைத்துப் பாடும் இவரியல்பு பற்றி, உலகர் வண்ணச்சரபம், திருப்புகழ்ச்சுவாமிகள் என்றனர். இளமையிலேயே முருகன் வழிபாடும் அநுபூதியும் பெற்றதால், முருகதாச சுவாமிகள் என்றனர். வடிவத்தில் முழுநீறு, லங்கோடுகௌபீனம், தண்டு, பாதுகை, காவியுடை, அவிழ்ந்த சிகை, கண்டிகை பூண்ட இயல்பினுல் தண்டபாணி சுவாமிகள் என்று கூறலாயினர். இவருக்குத் தாய்தந்தை யிட்ட பெயர் சங்கரலிங்கம். அதுவும் இறைவன் அருளுரைப்படி ஏற்பட்டதேயாம்.

இதுவரை யாருமே கூருதிருந்த, 'வண்ணத்தியல்பு' என்ற சந்த இலக்கணம் இவர் செய்திருக்கின்ருர். "தொல்காப் பியனுதியர் தாமும் சொற்ருரிலர் அச் சூட்சம் இயல், நல்கார்வத்தால் நூல்பகரும் அதனைக்காணேன் நானிலத்தில், வில்சால் வேலனருட்டுணையால் யானே விதித்தேன்" என்று தமது வரலாற்றுக் குருபர தத்துவத்திற் கூறுகின்ருர். தத்த–தாத்த, தந்த–தாந்த, தன–தான, தன்ன–தய்ய" என்ற சந்தம் எட்டே என முடிவு கூறுகின்றனர். சுரங்கள் ஏழு. அது கொண்டு பல ராகம் ஏற்படுவது போல, இவ்வெட்டுச் சந்தங்களின் புணர்ப்பினுல் பலவிதப் பாடலமையும் என்கிருர். இது போன்ற செய்யுள் பலவாம்.

இந்நூல் தேவத்தான வெளியீட்டின் இரண்டாம் பகுதியாகும். பாடல்களில் அரிய கருத்துக்களை அன்பர்கள் ஆங்காங்கும் கண்டு களிப்பார்களென நம்புகிறேன். கருத்தையும் சிலேடையையும் குறிப்பின் மூலம் காணலாம். இரண்டு பொருள்தரும் சொற்களால் சிலேடையாக இந்நூலிருப்பதால் இரண்டாவது வரிசையில் அமைத்தனர் சுவாமிகள் என்பதறிக.

உ

முருகக் கடவுள் துணை

# திருச்செந்தூர்ச் சிலேடை வெண்பா

—:—

## பாட்டும் பொருளும்

### காப்பு-வெண்பா

**நந்தூர் கரத்தான் நவிலும் புகழ்முருகோன்**
*செந்தூர்ச் சிலேடைவெண்பாச் செப்புவதற்(கு) — இந்தூர்*
**துதிக்கைத் தலையான் தொழும்புடையார் செஞ்சொல்**
**துதிக்கைத் தலையான் துணை.**

### இதன் பொருள்

நந்துஊர் - சங்கைத் தரித்த
கரத்தான் - கை யுடைய திருமால்
நவிலும் - பாராட்டிக் கூறும்
புகழ் - பெருமைகளையுடைய
முருகோன் - முருகக்கடவுளுக்குரிய
செந்தூர் - திருச்செந்தூரைக் குறித்த
சிலேடை - இரு பொருளைக் கொண்ட
வெண்பா - வெண்பாவாலாகிய பாடல்களை
செப்புவதற்கு - பாடு வதற்கு
இந்து-இளம்பிறைச் சந்திரன்
ஊர் - விளங்குவதாய்
துதிக்கை - தும்பிக்கையோடுள்ள
தலையான் - யானைமுகத்தினனும்
தொழும்புஉடையார் - வணங்கும் அன்பரது
செம்சொல் - இனிய சொற்கவிகளால்
துதிக்கை - தோத்திரம் செய்தலையுடைய
தலையான் - முதற்கடவுளான விநாயகன்
துணை - துணைபுரிவான்

## நூல்

காரார் கடற்றுறையிற் கன்னியர்தம் கைம்முகப்பிற்
சீரார் வளையலம்பும் செந்தூரே — நேராரை
வென்ற வடிவேலன் மேதினியில் உள்ளபல
குன்றவடி வேலன் குடி

இ—ள்.

கார்ஆர் – மேகம் பொருந்திய
கடல் துறையில் – கடலின் கரையில்
சீர்ஆர் - சிறப்பமைந்த
வளை – சங்குகள்கூடி
அலம்பும் – ஆரவாரம்புரிவது
கன்னியர்தம் - வழிபடவரும் மாதரது
கைமுகப்பில் – முன்கையில்
சீர்ஆர் – அழகமைந்த
வளை - வளையல்கள்
அலம்பு -ஓசைதருவதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூரே

நேராரை - பகையசுரர்களை
வென்ற - வெற்றிகண்ட
வடிவேலன் – கூரிய வேற் படையானும்
மேதினியில் – உலகினிடம்
உள்ள – காணப்படுகின்ற
பலகுன்ற - பலமலைகளிலும்
வடிவு - பல திரு வுருவுடன்
ஏலன் - பொருந்தியிருப்பவனு மான முருகப்பெருமான்
குடி - தங்கும் இடமாகும். 1

பொங்குபுனல் வாவியினிற் போர்வீரர் பொற்படையிற்
செங்கமலம் பூத்ததிருச் செந்தூரே — துங்க
இருக்கு மருளாட்டான் எம்மதுகல் நெஞ்சை
உருக்கு மருளாட்டான் ஊர்.

இ—ள்.

பொங்குபுனல் - மிகுதியான நீரினையுள்ள
வாவியினில் - குளத்தின்கண்
செம்கமலம் - செந்தாமரை மலர்கள்
பூத்த - பூத்து விளங்குவதும்
போர்வீரர் - யுத்த வீரர்கள்
பொற்படையில் - திரண்ட கூட்டத்தில்
செம் – இரத்தத்தால் செந்நிறமாகிய
கம் - தலைகள்
அலம்பூத்த-கண்டோர் அஞ்ச மிகுந்திருப்பதுமாகிய

செந்தூரே - திருச்செந்தூர்ப்பதியே

துங்க - மேலான
இருக்கும் - வேதமுங்கூட
மருள் - உண்மை காணாது மயங்குகின்ற
ஆட்டான் -அருளாடலுடையவனும்
எம்மது - அடியேங்களது
கல்நெஞ்சை - கடினமனத்தை
உருக்கும் - அன்புறச் செய்கின்ற
அருள் - கருணை நிறைந்த,
ஆட்டான் - திருவிளையாட்டுடையவனும்ஆகிய முருகன்
ஊர் - தங்கியுள்ள தலமாகும். 2

கொந்திசைந்த கோதையரும், கூர்வேற் படைக்குழுவும்
செந்திருமின் போற்குலவும் செந்தூரே—வந்தியர்கள்
ஓதும் பெருமையினன், உம்பர்முதல் எம்பரையும்
காதும் பெருமையினன் காப்பு.

இ—ள்.

கொந்து இசைந்த -பூங்கொத்தை யணியப்பெற்ற
கோதையரும் - மாதர்கள்
செந்திருமின்போல் - இலக்குமியைப்போல
குலவும் – அழகுடன் விளங்குவதும்
கூர் வல்-கூரியவேல் முதலிய
படைக் குழுவும் – ஆயுதக் கூட்டங்கள்
செந்து – செந்நிறமுள்ள
இருமின்போல் - விசாலமான மின்னல்போல்
குலவும் – ஒளியுடன் விளங்குவதுமான

செந்தூரே – திருச்செந்தூர்ப்பதியே

வந்தியர்கள் – புலவர்கள்
ஓதும் – புகழ்ந்து கூறுகின்ற
பெருமையினன் – சிறப்பினையுள்ளவனும்
உம்பர்முதல் - தேவர்கள் முதலிய
எம்பரையும் – எவ்வுலகத்தாரையும்
காதும் – கொல்லும்படி தோன்றிய
பெரு - பெரியஉருவுடையமையினன் – ஆட்டுவாகனம் உள்ளவனும் ஆகிய முருகப் பெருமானது,
காப்பு – ஆட்சித் தலமாகும் 3

**வண்ணீல வாவிதொறும்,மாதவத்தோர்சிந்தைதொறும்**
**தெண்ணீர் நலம்பொலியும் செந்தூரே – பெண்ணீலி**
**அஞ்சக் கரமுடையோ(டு) ஆள்வாற் கருள்விளக்கும்**
**கஞ்சக் கரமுடையான் கை.**

இ—ள்

வண் - வளப்பமான,
நீல – நீலோற்பலமலருள்ள
வாவிதொறும் – குளங்களி லெல்லாம்
தெள்நீர் - தெளிந்த நீரினது
நலம்பொலியும் – நன்மை திகழ்வதாயும்
மாதவத்தோர் – தவசிகளது
சிந்தைதொறும் – மனங்களி லெல்லாம்
தெள்நீர் – மயக்கமற்ற தூய் மைப் பண்பின்
நலம்-ஞான விளக்கம்
பொலியும் – சிறந்து காணப் படுவதுமாகிய

செந்தூரே - திருச்செந்திற்றலமே

பெண்நீலி – நீலநிறத்து உமையவளையும்
அஞ்சு அக்கரம் - திரு ஐந் தெழுத்தையும்
முடைஓடு–நாற்றமுள்ள பிரமன் தலை ஓட்டையும்
ஆள்வாற்கு - உடையவரான சிவபிரானுக்கு
அருள் விளக்கும் - பிரணவப் பொருள் கூறியவனும்
கஞ்ச – தாமரை மலரொத்த
கரம் - திருக்கரங்களை
உடையான் - பெற்றுள்ள வனுமாகிய முருகனது
கை – வசிப்பிடமாகும். 4

**சந்த வரைத்தாளில், தண்டமிழோர் தங்குழுவில்,**
**சிந்து மிகவொலிக்கும் செந்தூரே - முந்துநரை**
**மாட்டேற்றத் தன்சேய், மகத்தீயில் வந்துருமும்**
**ஆட்டேற்றத் தன்சேய் அவா.**

இ—ள்

சந்தவரை–சந்தனமலையினது
தாளில் – அடிவாரத்தில்
சிந்து – கடலின் அலையோசை
மிக ஒலிக்கும் – அதிகமாக ஒலிப்பதும்
தண் தமிழோர்தம் - இனிய தமிழ்ப் புலவர்களது
குழுவில் – பேரவையில்
சிந்து - சிந்துக்கவிகள்
மிக ஒலிக்கும்–மிகவும் பாடப் பெறுவதுமாகிய

செந்தூரே — திருச்செந்தூரே

முந்துநரை - வெண்மை முதிர்ந்த வந்து - தோன்றி
உரும் - உருமி உலாவிய
மாட்டு - காளையின் மீது
ஏற்றத்தன் - ஏறிவரும் சிவனது
ஆட்டு ஏற்றத்தன் - ஆட்டை உயர்ந்த வாகனமாகக் கொண்டவனுமான
சேய் - குமாரனுனவனும்
சேய் - முருகனது
மகத்தியில் - நாரதர் யாகத்தினிடம்
அவா - விருப்பமான தலமாகும் 5

வானுருஞ் சோலை மலர்த்துணரில், வார்கடலில்,
தேனுறு காலுழக்கும் செந்தூரே — ஊனுரும்
வேலா னவனிருக்கும் மெச்சுகுகன் வேடமின்மேல்
மாலா னவனிருக்கும் வாழ்வு.

இ—ள்.

வான்ஆரும் — மேக மண்டல மட்டும் உயர்ந்த
சோலை — சோலைகளிலுள்ள
மலர்த்துணரில் - பூங்கொத்தினிடம்
தேன் — தேனுண்டுகளிக்கும்
ஆறுகால் — வண்டுக் கூட்டம்
உழக்கும் — மிதித்து நுகர்வதும்
வார்கடலில் — நீண்ட கடலில்
தேன்ஆறு — தேனுனது ஆருகி
கால் — கால்வாயாக
உழக்கும் — ஒன்று சேர்ந்து கலக்கும்

செந்தூரே — திருச்செந்தூரே

ஊன்ஆரும் — புலால் நாறும்
வேலான் — வேலினையுடைய
அவன் — அப்பெருமானும்
இருக்கும் — வேதங்களும்
மெச்சுகுகன் — போற்றும் குகப் பெருமானும்
வேடமின்மேல் — வேடக் குலத்து வள்ளிநாயகியிடம்
மாலானவன் — மோக மிக்கவனுமாகிய முருகப்பிரான்
இருக்கும் — எழுந்தருளியுள்ள
வாழ்வு-சிறப்பான தலமாகும் 6

(திருச்செந்தூர் - சந்தனுசலம் என்ற சிறப்புப் பெயருடையது. சந்தன அசலம் —சந்தன மலை. கோவிலுள் வடபுறமுள்ளது.) 5

முந்துசந்த மால்வரையில், மொய்குழலார் வாணுதலில்,
சிந்துரத்தின் சீர்மருவு செந்தூரே — உந்துபெரும்
கோபத்தா னாளுமிவர் கோமான்மகன், குளிர்தார்
நீபத்தா னாளும் நிலம்.

இ—ள்.

முந்து - சிறப்பில் முதலான
சந்தமால்வரையில் - சிறந்த சந்தன மலையில்
சிந்துரத்தின் - உலவும் யானைகளின்
சீர்மருவும் - பெருமை திகழுகின்றதும்
மொய்குழலார் - வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய மாதரது
வாள்நுதலில் - விளக்கமான நெற்றியில்
சிந்துரத்தின் - குங்குமப் பொட்டின்
சீர்மருவு - அழகு விளங்குகின்றதுமாகிய
செந்தூரே - திருச்செந்தூரே
உந்து - செலுத்துகின்ற
பெரும்கோபத்து - பெரிய சினமுடைய
ஆன் - இடப வாகனத்தில்
நாளும்இவர் - தினமும் ஏறி வரும்
கோமான்மகன் - சிவனது குமாரனும்
குளிர்தார் - குவிர்ந்த மாலையாகிய
நீபத்தான் - கடம்பினையுடையானுமான முருகனது
ஆளும்நிலம் - ஆட்சிக்குரிய இடமாகும். 7

துங்கநவ வீரருக்கும், தோகைநல்லார் வார்குழற்கும்,
செங்கட் புலிநாணும் செந்தூரே — தங்கமலை
வில்லா னளிக்கும் விறற்சேய், வியன்புவிக்கோர்
நல்லா னளிக்கும் நகர்

இ—ள்.

துங்க - வெற்றி மிகுந்த
நவவீரருக்கும் - ஒன்பது போர் வீரருக்கு
செங்கண் - சிவந்த கண்களையுடைய
புலி - வேங்கையும்
நாணும் - தன் வலிமைகுறைய நாணும்
தோகைநல்லார் - மாதரின்
வார்குழற்கு - நீண்ட கூந்தலின் கருப்பு நிறத்துக்கு
செங்கண் - சிவப்புக் கண்களுடைய
புல் ஈ - சிறிய கருவண்டுகள்
நாணும் - மனம் வெட்கமுறும்
செந்தூரே - திருச்செந்தூரே

தங்கமலை – பொன்மலையான மேருவை
வில்லான் – வில்லாகக் கொண்ட சிவபிரான்
அளிக்கும் – தந்தருளிய
விறற்சேய் – வல்லமையுடைய புதல்வனும்
வியன்புவிக்கு – அழகிய பூவுலகுக்கு
ஓர்நல்லான் – ஒப்பற்ற நல்ல தலைவனுமாகிய முருகன்
அளிக்கும் – அன்புடன் காக்கின்ற
நகர் – சிறந்த தலமாகும். 8

**மாயா முனிவர்களும், வாளனைய கண்ணாரும்**
**தேயா மதிமுகங்கொள் செந்தூரே - வீயாய**
**கோலமயி லாளியன்ன கோரத்தான் கும்பிடுமோர்**
**நீலமயி லாளி நிலை.**

இ—ள்.

மாயா–இறப்பினை யடையாத
முனிவர்களும் – தவசிகளும்
தேயா – குறைவிலாத
மதி – பேரறிவின் தெளிவை
முகங்கொள் – முகத்திற் கொண்டுள்ளதும்
வாள்அனைய – கூரியவாள் ஒத்த
கண்ணாரும் – கண்களுடைய மாதரும்
தேயா–ஒளி மங்கி மெலியாத
மதி–முழுச் சந்திரன்போன்ற
முகங்கொள் – முகப்பொலிவோடுள்ளதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூரே

வீஆய – பறவையாகிய கொக்கின்
கோலம் – உருவத்தில் வந்த அசுரனது
அயில் – (உயிரை) உண்டவனும்
ஆளிஅன்ன – சிங்கத்தை ஒத்தவனும்
கோரத்தான்–கோர வடிவுற்றவனுமான திருமால்
கும்பிடும்–வணங்கிப் போற்றுகின்ற
ஓர்நீலமயில்ஆளி – ஒப்பற்ற நீல மயில் வாகனப்பெருமானுமாகிய முருகன்
நிலை – நிலைத்துள்ள தலமாகும் 9

**கைய மறுகினமும், கந்தர்ப்பன் கைச்சிலையும்**
**செய்யனந்தம் கொண்டதிருச் செந்தூரே - பொய்யர்**
**இகல வருள்வான் எழில்வேலான் என்கோ(து)**
**அகல வருள்வான் அகம்**

இ- ள்

கைய – இடம் அகன்ற
மறுகுஇனமும் – வீதிகளில்
செய்ய – செழுமையான
நந்தம்கொண்ட – சங்குகள் உலவுவதும்
கந்தர்ப்பன் – மன்மதனுடைய
கைச்சிலையும் – கைவில்லாகிய கரும்புகள் விளைகின்ற
செய் – வயல்கள்
அனந்தம்கொண்ட – மிகவு முடையதுமாகிய
செந்தூரே – செந்தூராகிய பதியே
பொய்யர் – அசத்தியமிகுந்த வரான
இகலவர் – பகையான அசுரர்கள்
உள் - மனதிற் கருதத்தக்க
வான் – உயர்வு பெற்ற
எழில்வேலான் - அழகிய வேலினையுடையவனும்
என் – அடியேனுடைய
கோது – குற்றமுற்றும்
அகல – இல்லாதொழியும்படி
அருள்வான் – திருவருள் புரிபவனுமாகிய பெருமானது
அகம் - இடமாகும்

**கன்னிமுகம் சீர்பெறலால், கைச்சலிப்பு மாறுதலால்**
**தென்னன் புகழ்ந்துதொழும் செந்தூரே – வன்னமயில்**
**வாகனத்த னத்து மருவுகரத் தான்வழுத்தும்**
**மாகனத்த னத்து வது.**

இ—ள்.

கன்னிமுகம்-குதிரைமுகமுற்ற பாண்டியன் மகள் முகம்
சீர்பெறலால்-மீண்டும் மனித முகமுற்ற சிறப்பினால்
தென்னன் – பாண்டிய அரசன்
புகழ்ந்து – மகிழ்ந்துபாராட்டி
தொழும் – வணங்கிய சிறப்பினையுடையதும்
கைச் சலிப்பு – மக்கள் உயிரைப்பற்றி செல்லும் கைகளின் வருத்தமானது
மாறுதலால் — (முருகனை வணங்கிய சிறப்பால் உயிர்கள் முத்திக்கு உரியரான காரணம் பற்றி) மாறுகின்ற காரணத்தால்
தென்னன் – தென்திசையனை எமன்
புகழ்ந்துதொழும் – புகழ்ந்து வணங்கும் சிறப்பினை யுடையதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூர்த்தலமே

வன்ன – பல நிறத்துடனுள்ள மயில்வாகனத்தன் – மயில் வாகனத்தையுடையவனும் நத்து – சங்கு மருவுகரத்தான் – விளங்குகின்ற கரமுடைய திருமால் வழுத்தும் – போற்றிப் புகழும் மா – மாண்புமிக்க கனத்தான் – பெருமையுடையவனுமாகிய முருகன் நத்துவது – விரும்பித் தங்கும் சிறந்த தலமாகும். 11

**தாரணிமின் வாழ்நாளில், சாத்தரனை யார்தலையில்**
**சீரணங்கொள் ளாததிருச் செந்தூரே – வாரணப்புள்**
**கூவம் புயத்தான் குளிர்நீர்ச் சரவணத்தில்**
**மாவம் புயத்தான் மனை.**

இ—ள்.

தாரணிமின் – பூமிதேவியின் வாழ்நாளில் – ஆயுட் காலத்தில் சீரணம் – அழிவை கொள்ளாத – அடையாததும் சாத்தர் – சித்தலைச் சாத்தனுரை அனையார்தலையில் – ஒத்த பெரும் புலவரது சிரத்தில் சீ–ரணம் – சீழும் புண்ணும் கொள்ளாத – அமையப் பெருததுமாகிய

செந்தூரே – திருச்செந்தூர்த்தலமே

வாரணப்புள் – சேவலாகிய பறவை கூவு – (கொடியாயிருந்து) ஒலிக்கின்ற அம்,புயத்தான் – அழகிய தோளினனும் குளிர்நீர் – குளிர்ந்த தண்ணீருடைய சரவணத்தில் – சரவணப் பொய்கையில் மேவு – குழந்தையாகப் பொருந்தி அம்புயத்தான் – தாமரை மலரில் தங்கியவனுமாகிய முருகனின் மனை – இருப்பிடமாகும். 12

**ஓங்குகடல் நீர்முழுக்கால், ஒள்வளைமின் ஞர்புடையால்,**
**தீங்கரும்பன் மாண்படையும் செந்தூரே – வீங்குமுலைக்**
**குஞ்சரியா ளையன் குலசே கரன்கடப்ப**
**மஞ்சரியா ளையன் வகை.**

இ—ள்,

ஓங்குகடல் – விசாலமான கடலினது
நீர்முழுக்கால் – நீரில் முழுகிய தன்மையாலும்
ஒள்வளை – ஒளி பொருந்திய வளையல்களை அணிந்த
மின்னார் – மாதர்களின்
புடையால் – கூட்டத்தினால்
தீங்கரும் - பாவிகளும் கூட
பல்மாண்பு – மிகப்பல சிறப்பினை
அடையும் – பெற உதவக் கூடியதும்
தீம் – இனிய
கரும்பன் – கரும்பை வில்லாக வுடைய மன்மதன்
மாண்பு அடையும் – சிறப்புடையவனாவதும் ஆகிய

செந்தூரே - திருச்செந்திலம்பதியே

விங்குமுலை-பெருத்த தனங்களை யுடைய
குஞ்சரியாள் – தெய்வயானை யம்மையின்
ஐயன் – தந்தையான இந்திரனது
குலசேகரன் – தேவர் கூட்டத்துக்குத் தலைவனும்
கடப்ப – கடம்ப மலரான
மஞ்சரிஆள் - மாலையைப் புனைந்த
ஐயன் - அழகனுமாகிய முருகன்
வகை – வசிக்க வகையான தலமாம் 13

பல்வகைய சோலையினும், பைம்பொன்மணிக் கோவிலினும்
செல்வந் தழைக்குமெழிற் செந்தூரே – வில்வமிகத்
துன்னுசடி லத்தான் தொழுங்குரவன், தொண்டர்குழாம்
மன்னுசடி லத்தான் வரல்.

இ—ள்

பல்வகைய – பலவிதப் பட்ட
சோலையினும் – மரக்கூட்டங்களில்
செல், வந்து – மேகமும், தென்றலும்கூடி
அழைக்கும் – மக்களை இளைப்பாற அழைக்கும்
எழில் – அழகுடையதும்
பைம்பொன் மணி-பொன்மயமாயுள்ள மணிகளமைந்த
கோவிலினும் – திருக்கோவிலில்
செல்வம் – மிகுதியான பொருள் வளம்
தழைக்கும் – வளர்ந்துவரும்
எழில்-வனப்புடையதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூரே

வில்வம் - வில்வமென்ற பச்சிலை
துன்னுசடிலத்தன் – புனைந்த சடையுடைய பரமன்
தொழும் – வணங்கத்தக்க
குரவன் - ஆசானாகிய பெருமானும்
தொண்டர்குழாம் – அடியவர்
மன்னு - தங்கித் தவம் புரிய
சடு – ஆறுக விளங்கும்
இல்லத்தான் - படைவீடுகளை யுடையவனுமாகிய முருகன்
வரல் - எழுந்தருளிய முதலிடமாகும் 14

வேதா மறைத்திரளில், மிக்குதிர்தண் பூம்பொழிலில்,
சேதா விளங்குதிருச் செந்தூரே – வாதாடும்
கோலக் குறவனிதை கொண்கன், குளிர்கடல்சூழ்
ஞாலக் குறவன் நசை.

இ—ள்

வேதா - பிரமன் கூறிய
மறைத்திரளில் – நால் வேதத் தினைப் போன்று
சேதா - சிறந்ததாக
விளங்கு - முதன்மையாகத் திகழுகின்றதும்
மிக்குஉதிர் –மிகவும்மலர்ந்து
தண்-குளிர்ச்சியுள்ள[விழுகிற
பூம்பொழிலில் - பூமரச்சோலைகளில்
சேதா - செந்நிறப் பசுக்கள் கூட்டம்
விளங்கு-உலாவுகின்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்தூரே

வாது ஆடும் – தருக்கமிடுகின்ற
கோல – அழகுடைய
குறவனிதை – வள்ளி நாயகியினது
கொண்கன் – கணவனானவனும்,
குளிர்கடல் சூழ் – கடல்நீரால் சூழ்ந்துள்ள
ஞாலக்கு - உலகிலுள்ள உயிர்கட்கு
உறவன்-- உரிமையுடையவனுமான முருகனது
நசை – விருப்பமாயுள்ள தலம் ஆகும் 15

பத்திபெறு மேடைகளில், பாவலவர் நாவகத்தில்
சித்திரங்கு லாவுதிருச் செந்தூரே – சத்தி
அணிய கலத்தான், அருக்கரினம் போலும்
மணிய கலத்தான் வகுப்பு.

இ—ள்

பத்திபெறு - வரிசையாயுள்ள
மேடைகளில் - மாடி வீடுகள்
தோறும்
சித்திரம் - வண்ண ஓவியம்
குலாவு - பொருந்தியுள்ளதும்,
பாவலவர் - பெரும் புலவரது
நாவகத்தில் - நாவிடத்தில்
சித்திரம் - விஞேதமான
சொல்லுடைய பாடல்
குலாவு - விளங்குவதும் ஆன

செந்தூரே — திருச்செந்தூர்ப் பதியே

சத்தி - சத்தி வேற்படையை
அணி - தரித்துள்ள
அகலத்தான் - மார்புடைய
வனும்
அருக்கர் - சூரியர் பலரது
இனம்போலும் - கூட்டம்
போன்ற ஒளியுடைய
மணிய - இரத்தினம் பதித்த
கலத்தான் - பணிகளைப்பூண்ட
வனுமான பெருமானுக்கு
வகுப்பு - உரிமையாக வகுத்த
இடமாகும் 16

**ஏரார் மதிளருகில் எண்ணில்பல வீதிகளில்**
**சீராழி மிக்கொலிக்கும் செந்தூரே — பேராண்மைப்**
**பாவலங்கை யையன் படச்செற்ருேன், பன்னுபுகழ்ச்**
**சேவலங்கை யையன் திரு.**

இ—ள்

ஏர்ஆர் - அழகு மிகுந்துள்ள
மதிள் அருகில் - கோயில் மதி
ளின் பக்கம்
சீர் ஆழி - சிறந்த கடல்அலை
மிக்கு ஒலிக்கும் - மிகவும் ஒலி
உண்டாக்குவதும்
எண்ணில் - அளவற்ற
பல வீதிகளில் - பல தெருக்
களில்
ஆழி - சங்குக்கூட்டங்கள்
மிக்கு ஒலிக்கும் - மிக
ஒலிப்பதுமாகிய

செந்தூரே — செந்தூர்த்தலமே

பேர் ஆண்மை-பெரிய வீரமும்
பாவ - மிக்க பாவத்தையு
முடைய
லங்கை - இலங்காபுரியினது
ஐயன் - தலைவனை இராவ
ணன்
படச்செற்ருேன் - அழியப்
புரிந்த திருமால்
பன்னுபுகழ் - சொல்லும்
சிறப்புடைய
சேவலங்கை - சேவற் கொடி
யணிந்த கையினஞகிய
ஐயன்- முருகப்பிரானுக்குரிய
திரு - திருத்தலமாகும் 17

மெய்ப்புலவர் சங்கைகளும். மெல்லிநல்லார் கொங்கைகளும்
செப்புநலம் காட்டுதிருச் செந்தூரே — எய்ப்பிலருட்
கூத்து மிசையான் குவலயத்து மானிடரும்
ஏத்து மிசையான் இடம்.

இ—ள்

மெய்ப்புலவர் – உண்மைப் புலவர்களது
சங்கைகளும் - சந்தேகப் பொருள்களை
செப்பும் - முருகன் தெரிவிக்கும்படியான
நலம் காட்டும் – திருவருளை வெளிப்படுத்துவதும்

மெல்லிநல்லார் - பருவ மாதர்களுடைய
கொங்கைகளும் – தனங்களானவை
செப்புநலம் - சிமிழ் போன்ற அழகினை
காட்டு – விளக்கித் திகழ்வதுமான

செந்தூரே – திருச்செந்தூரே

எய்ப்புஇல் – இளைப்புஇல்லாத
அருட்கூத்து – திருவருளாடலை
மிசையான் – மேற்கொண்டுள்ளவனும்
குவலயத்து – உலகிடத்துள்ள

மானிடரும்– மக்கட்கூட்டமும்
ஏத்தும் – பாராட்டிப் புகல்கின்ற
இசையான் – சிறப்பினையுடையவனுமான பெருமானது
இடம் – சிறந்ததலமாகும் 18

பைம்புனற்றண் வாவிப் பதுமத்தில். பன்மனையில்
செம்பொன் மருவுதிருச் செந்தூரே — உம்பர்
பரவேறு மாவான் பலிகொள்வார் பாலன்
அரவேறு மாவான் அரண்.

இ—ள்

பைம்புனல் – பசுமையான நீரையுடைய
தண்வாவி – குளிர்ந்த தடாகத்துள்ள
பதுமத்தில் – தாமரை மலரில்
செம்பொன் - செந்திருமகள்
மருவு - விளங்குவதும்

பல்மனையில் – பலவீடுகளிலும்
செம் – செழுமையான
பொன் - பொன் பொருள் முதலியவான
மருவு – பொருந்தியமான

செந்தூரே - திருச்செந்தூரே

உம்பர் – தேவர்கள்
பரவு-வணங்கக்கூடிய
ஏறும் ஆவான்-உயர்ச்சியுடையவனும்
பலிகொள்வார் – பிச்சையேற்றலரான
பாலன் - சிவகுமாரனும்
அரவு - பாம்பின் மீது
ஏறும் - ஏறி நடமாடும்
மாவான்-(மயிலாகிய) குதிரையுள்ளவனுமாய முருகனின்
அரண் – காவற்றலமாகும் 19

**சந்தா சலத்தில், தடந்திரை நீர் வாவிகளில்**
**செந்தா மரைமிளிரும் செந்தூரே - முந்தாதி**
**சங்கைக் கதிரயிலான் தானவர்கோன் றன்னைவெல்லும்**
**செங்கைக் கதிரயிலான் சேர்வு**

இ—ள்.

சந்த – சந்தனக்கல்லையொத்த
அசலத்தில் - மலையினிடமாக
செம் - செம்மைநிறமும்
தா – தாவுகின்றதுமான
மரைமிளிரும் – மான்கள் விளங்குவதும்
தடம்திரை-பெரிய அலையுள்ள
நீர் – நீர்ப்பெருக்கைக் கொண்ட
வாவிகளில் – குளங்களில்
செந்தாமரை – செந்தாமரைப் பூக்கள்
மிளிரும்- அழகு தருவதுமாகிய

செந்தூரே – திருச்செந்திற்பதியே

முந்து – காலம் கடந்தவனாகி
ஆதி – முதன்மையான சிவபிரானின்
சங்கைக்கு – சந்தேக வினுவுக்கு
அதிரஇலான் – கலக்கமுறுதவனும்
தானவர் கோன் றன்னை - அசுரர் தலைவனாகிய சூரபன்மனை
வெல்லும் - வென்றதும்
செங்கை – திருக்கரத்துள்ளது
கதிர் – ஒளிவீசும் (மாவ
அயிலான் – வேலினையுடையவனுமாகிய முருகன்
சேர்வு - சேருந்தலமாகும் 20

**வெம்போர்த் தகர்ப்பரியும் விற்பனர்தம் சொற்கவியும்**
**செம்பாகங் காட்டுதிருச் செந்தூரே – கெம்பீர**
**வாக்குமுரு கன்பும் வருவிப்போன், மாமரத்தைத்**
**தாக்கு முருகன் தலம்**

இ—ள்.

வெம்போர் – கடும் போருக்குரிய விற்பனர்தம் – கவிஞர்களது
தகர்ப்பரியும்– ஆட்டுவாகனம் சொற்கவியும் - சொற்றமிழ்ப் பாடலும்
செம்பு–தாமிரம்போற் சிவந்த செம் – செழுமையான
ஆகம் – உடல்நிறத்தை பாகம் – இனிய கருத்துகளை
காட்டு – தெரியச் செய்வதும் காட்டு - தன்னுட்கொண்டுள்ளதுமான

செந்தூரே - திருச்செந்திற்பதியே

கெம்பிர - எழுச்சி தருகின்ற மாமரத்தை – சூரனை மா
வாக்கும் - பாட்டு வலிமையும் மரத்தை
உருகு அன்பும் - மனம் நெகிழும் பத்தியையும் தாக்கும் – மாய்த்தருளியவனுமாகிய
வருவிப்போன் - தரத்தக்கவனும் முருகன் – முருகப்பெருமானது
தலம் – தலமாகும் 21

நற்றவர்தம் சொற்பயனும், நாரியர்தம் கூர்விழியும்
சிற்றரங்கள் காட்டுதிருச் செந்தூரே – சற்றும்
மறவாத வர்க்கருள்வான், வைவேலான், மாண்டு
பிறவாத வர்க்கருள்வான் பேறு.

இ—ள்.

நல்தவர்தம்· நல்ல தவசிகளது காட்டு -பெற உதவுகின்றதும்
சொற்பயனும் – உபதேச மொழிகள் நாரியர்தம் – மாதர்களுடைய
கூர்விழியும் – கூரிய கண்கள்
சில்தரங்கள் – சில தகுதியான பயன்களை சிற்றுஅரம் - சிற்றரம்போன்று
காட்டு – விளங்குவது மாகிய

செந்தூரே – திருச்செந்தூரே

சற்றும்-கணப்பொழுதும் பிறவாத - பிறப்பினைப்பெறாத
மறவாதவர்க்கு - தன்னை மறவாத சிந்தனையாளருக்கு வர்க்கர் – தவத்தினர்களால்
அருள்வான் - திருவருள் புரிபவனும் உள்வான் - தியானிக்கப் படுபவனுமாகிய முருகன்
மாண்டு – இறந்த பின்னர் பேறு – தங்கியுள்ள பெருமை பெற்ற தலமாகும். 22

ஏயதமிழ்ச் சங்கத்தில், ஈரா யிரவர்மன்றில்,
சேயமகம் நீடுதிருச் செந்தூரே — தூய
முருகன் களங்கடம்பன், மொய்குழலார் வேண்டு
மருகன் களங்கடம்பன் மாண்பு

இ—ள்

ஏயதமிழ்—தமிழ்ச் சிறப்புள்ள
சங்கத்தில் - புலவர் சபையில்
சே — செம்மையான
யமகம்—யமகம் என்ற கவிகள்
நீடு — மிகவும் விளங்குவதும்
ஈராயிரவர் — இரண்டாயிரம் அந்தணர் கூடியுள்ள
மன்றில் — பெருங்குழுவில்
சேய — கொலே புலேயற்றுச் சிறந்த
மகம் — புனித வேள்வியானது
நீடும் — நாளும் நடப்பதுமான

செந்தூரே — திருச்செந்தூரே

தூய — பரிசுத்தமான
முருகன் - முருகப்பெருமானும்
கள் — தேன்நிறைந்த
அம்கடம்பன் — அழகிய கடப்ப மாலே யுடையவனும்
மொய்குழலார் — வள்ளி தெய்வானே என்ற இருவரும்
வேண்டும் — விரும்பும்படி
மருகன் - அருகிலிருப்பவனும்,
களங்கு — அன்பர்களேச் சோதிக்கின்ற குற்றமும்
டம்பன் — ஆடம்பரத்தையும், உடைய முருகனது
மாண்பு — சிறந்த இடமாகும்

புங்கமிகு கோபுரமும், பூங்கடப்ப மாலிகையும்,
செங்கனகம் போன்றதிருச் செந்தூரே - மங்களம்சேர்
நீருன னத்தாச னெட்டுயிர்ப்பக் குட்டிமகிழ்
ஆருன னத்தாசன் ஆட்சி.

இ—ள்

புங்கம்மிகு - உயர்வு மிகுந்துள்ள
கோபுரமும் — கோயிற் கோபுரமும்
பூங்கடப்ப — மலர்ந்த கடம்பினது
மாலிகையும் - பூமாலேகள்
செம் — செம்மையான

* தில்லேயில் மூவாயிரவரைப்போன்று செந்திலில் ஈராயிரவர் திரிசுதந்தரராவார். இவர்கள், ஒரு சேரலந்த சிறப்புடைய ரென்பது வரலாறு

செங்கல் – சிவந்த கற்களால் அமைக்கப்பட்டு
கனகம் போன்ற – பொன் போல் விளங்குகின்றன
நகம்போன்ற – மலைபோல் விளங்குகின்றதும்
வாயுமுள்ள

செந்தூரே – செந்திற்பதியே

மங்களம்சேர் - நன்மை தரும்
நீருன் - திருநீற்றை யுடையவனும்
அனத்து - அன்னவாகனமும்
ஆசன் – ஆணவமான குற்றத்தையு முடைய பிரமதேவன்
நெட்டுயிர்ப்ப – பெருமூச்சு விடும்படி
குட்டிமகிழ் - தலையிற் குட்டி மகிழ்ந்தவனும்
ஆறு ஆனனத்து – ஆறு முகத்தவனும்
*ஆசன் - சற்குரு நாதனுமான முருகனுக்கு
ஆட்சி – உரிமையுடைய தலமாகும் 24

மாங்குயிலோ(டு) அஞ்சுகமும் மைந்தரொடு தந்தையரும்,
தேங்குதலைச் சொற்பகரும் செந்தூரே - பாங்கிருவர்
துன்னும் சுகத்தான், துகள் தீர்ந்த சொற்புரிவோர்
உன்னும் சுகத்தான் உழி.

இ—ள்.

மாங்குயிலோடு – கருங்குயிலும்
அஞ்சுகமும் – பச்சைக்கிளியும்,
தேங்கு – (இறைவன் புகழ்) நிறைந்த
தலைச்சொல் பகரும் - சிறந்த மொழி பேசுகின்றதும்
மைந்தரொடு - தமது புதல்வரிடத்து
தந்தையரும்–தந்தை முதலியவரும்
தேம் – இனிமையான
குதலைச் சொல்- மழலைச்சொற்களைக் கூறுகின்றதுமாய

செந்தூரே - திருச்செந்திற்பதியே

பாங்கு – இருபக்கத்தும்
இருவர் துன்னும் – இரு தேவிமாரிருக்கின்ற
சொற்புலவோர் - புவவர் பெருமக்கள்
உன்னும் - மதிக்கக்கூடிய

---

*ஆசான் என்றதில், சா என்ற நெடில் இடம் நோக்கி, ச எனக் குறுகிற்று.

சுகத்தான்-இன்பத்தையுடையவனும்
துகள்தீர்ந்த - குற்றமற்ற
சுகத்தான் - அருணகிரி எனுங் கிளியையுடையவனுமாகிய முருகன்
உழி – வசிப்பிடமாகும். 25

**அம்போரு கன்மனையும் ஆடும் துகிற்கொடியும்**
**செம்பூர மேற்றிகழும் செந்தூரே – வெம்பூதர்**
**தந்தா வரன்பாலன் சத்திவடி வேற்படைச்சீர்**
**நந்தா வரன்பால னம்.**

இ—ள்.

அம்போருகன் – தாமரைப் பூவினையுடைய பிரமனது
மனையும் – பத்தினியான கலைமகளும்
செம் – செந்நிறமான
பூரமேல் - பூரமாகிய வாகனமீது
திகழும்-விளங்கக் காண்பதும்
ஆடும் - அசைகின்ற
துகில்கொடி – துணிக்கொடி
செம் – சிறப்புள்ள
பூரமேல் - பூரநட்சத்திரத் தினைவிட மேலாக
திகழும் - உயர்ந்து விளங்குவது மாகிய

செந்தூரே – திருச்செந்திற்பதியே

வெம் . கொடிய வீரமிக்க
பூதர்தம் – பூதகணங்களின்
தாவரன்–தலைவனை சிவபெருமானின்
பாலன் – திருமகனும்
சத்திவடிவேல் – ஞானசத்தி வேலான
படைச்சீர் – ஆயுதத்தின் பெருமை
நந்தா – குறைவுபடாதவனுமாகிய
வரன் - முருகப்பெருமானது
பாலனம் – காவலில் உள்ள தலமாகும் 26

**பாவைநுவல் வார்மனைக்கும், பன்னுதிருச் சந்நிதிக்கும்**
**தேவைதின மும்வரும் செந்தூரே - பூவில்**
**வருவா ரணத்தான்றன் மைத்துனவேள், வாகை**
**தருவா ரணத்தான் தலம்.**

இ—ள்.

பாவை - இனிய துதிப்பாடல்களை
பன்னு – பலராலும் புகழத் தக்க

நுவல்வார் - சொல்வாரது
மனைக்கும் - வீடுகளுக்கும்
தேவை—விரும்பும் யாவையும்
தினமும் வரும் - நாடோறும் வருவதாகியதும்
திருச்சந்நிதிக்கும்-திருக் கோயில்களிலும்
தே – தெய்வத் திருவருள்
வை – தம்மீது அமையும்படி கருதி
தினமும் வரும் – மக்கள் நாளும் வரக்கூடியதுமான

செந்தூரே – திருச்செந்தூர்த்தலமே

பூவில்வரு - தாமரை மலரில் உதித்த
ஆரணத்தான் தன் - வேதப் பிரமனுடைய
மைத்துனவேள் – தங்கை கணவனை முருகனைவனும்
வாகைதரு - வெற்றியைக் கொண்ட
வாரணத்தான் - சேவற் கொடியினனுமான பெருமானது
தலம் – இருப்பிடமாகும் 27

பொற்புமிகு கற்பணியும், போர்வேற் படைப்புகழும்
சிற்பரையைக் காட்டுதிருச் செந்தூரே—தற்பரன்வந்(து)
அன்றும் வணங்கவைத்தோன், ஆற்றளவு ணேசன் உரம்
குன்றும் வணங்கவைத்தோன் கோள்.

இ—ள்.

பொற்புமிகு – அழகுமிக்க
கற்பணியும் – கோவில் திருப் பணியானது
சிற்பர் – சிற்பிகளின்
ஐயை – கை வேலைப்பாட்டின் அழகை
காட்டு - வெளிப்படுத்துவதும்
போர் வேல் படை – போரில் வெற்றிபெறும் வேலாயுதத்தின்
புகழும் – பெருமையை நோக்கில்
சிற்பரையை - ஞானசத்தியினது சிறப்பை
காட்டு – அன்பர் தெரியச் செய்வதும் ஆன

செந்தூரே – திருச்செந்திற்பதியே

தற்பரன் வந்து - சிவபிரான் அணுகி நின்று
அவுணேசன் – சூரபன்மனுடைய

அன்றும் - அந்தக் காலத்தில் வணங்க வைத்தோன் - வணங்கப் புரிர்தவனும் ஆற்றல் - வலிமைபெற்ற உரம் குன்றும் வணம் – வீரம் குறையும்படி கவைத்தோன் - போர்புரிந்தவனுமாகிய முருகன் கோள்-கொண்ட இடமாகும்

**சீர்த்தகந்த மாதனத்தில். தேடிவரு வார்வினையில்,**
**தீர்த்த மகிமைதிகழ் செந்தூரே - கூர்த்தவிழி**
**செஞ்சே லனையயிலாச் சேர்கரத்தான், தேவர்பெறும்**
**அஞ்சே லனையயிலான் ஆட்சி.**

இ—ள்.

சீர்த்த - சிறப்பு வாய்ந்த கந்தமாதனத்தில் – கந்தமாதன மலையில் தீர்த்த - புண்ணிய நீரின் மகிமை திகழ் - மேன்மை விளங்குவதும் தேடி வருவார் - நாடிவந்து வணங்குவாரின் வினை - தீவினையானது இல் - இல்லையென்னும்படி தீர்த்த – நீக்கியருளத்தக்க மகிமைதிகழ்-மாண்பு நிறைந்துள்ளதுமான

செந்தூரே – திருச்செந்திற்பதியே

கூர்த்தவிழி – கூரிய கண்கள் செம்சேல் - அழகிய மீன் போன்றுள்ள அனை – தாயான பராசத்தி அயிலா – வேலாயுதமாக சேர்கரத்தான்- சேர்ந்த கையுடையவனும் தேவர்பெறும் - அமரர்கள் பெறும்படி அஞ்சேலன் – அபயம் அளிப்பவனும் னை – இகழ்ச்சியை அயிலான் - பொருந்தாதவனுமாகிய முருகன் ஆட்சி - ஆளும் இடமாகும் 27

**வீரர்தொழும் சந்நிதியில், மென்மலர்த்தண் சோலையினில்**
**சீரரம்பை யாடல்மிகும் செந்தூரே – பேரறிஞர்**
**ஓதுந் திருப்புகழான், ஊற்றைச் சமணரெதிர்**
**வாதுந் திருப்புகழான் வாழ்வு.**

இ—ள்,

விரர்தொழும் – நவவீரரும் பிறரும் வணங்குகின்ற
சந்நிதியில் – திருக்கோயில் முன்பு
சீர்அரம்பை –அழகிய தேவ மாதரது
ஆடல்மிகும் – நாட்டியம் திகழுவதும்
மென்மலர் – பூக்களையுடைய
தண்சோலையினில் – குளிர்ந்த பொழிலினிடம்
சீர் அரம்பை – சிறந்த வாழை மரத்தின் இலை
ஆடல் மிகும் – ஆடி யசையும் அழகு விளங்குவதுமாகிய

செந்தூரே – திருச்செந்திற்பதியே

பேரறிஞர் – அறிஞர்ப் பெரு மக்கள்
ஓதும் – துதியாகப் பகர்கின்ற
திரு-புகழான் – தெய்வீகச் சிறப்புடையவனும்
ஊற்றை-அழுக்குடையவரான
சமணரெதிர் – சமணர் முன்பு
வாதுஉந்து – வாதிட்டுச் சிறந்த
இரு – பரந்த
புகழான் – சீருடைய ஞானசம்பந்தருமாகிய முருகன்
வாழ்வு – வாழுமிடமாம்.

30

**மாமால்கொள் மங்கையரும், வண் கருப்பஞ் சோலைகளும்**
**தேமாலை மேவுதிருச் செந்தூரே – காமாரி**
**தந்தமைந்த ஞகமத்தான், சாற்றுபுகழ்ச் சண்முகவேள்**
**குந்தமைந்த ஞகமத்தான் கோ.**

இ—ள்.

மாமால்கொள் – முருகனிடம் மிக மோகமுற்ற
மங்கையரும் – மாதர்கள்
தே – இறைவனருள் பெற உதவுகின்ற
மாலைமேவு – மாலையைப் பெற்று மகிழ்வதும்
வண் – வளமாக விளைந்த
கருப்பஞ்சோலைகளும் – கரும்புகள்
தேம் – இனிய சாறு பிழியும்
ஆலைமேவு – ஆலைகளமையப் பெற்றதுமான

செந்தூரே – திருச்செந்தூரே

காமாரி – மன்மதனுக்குப் பகையான சிவன்
சண்முகவேள் – ஆறுமுகப் பெருமானும்

தந்த மைந்தன் – உதவிய குமாரக் கடவுளும்
நாக – திருப்பாற் கடலில் மலையுருவில் நின்று
மத்தான் – மத்தாக உதவிய திருமால்
சாற்றுபுகழ் – தேவர்கள்பாற் கூறிய சிறப்புள்ள
குந்த-வேலாகிய படையுள்ள
மைந்தன் – வலிய வீரமுடையவனும்
ஆகமத்தான் - ஆகமப் பொருளானவனுமாகிய
கோ – முருகனது சிறந்த இடமாகும். 31

முற்றுணர்ந் தோர்தங்குழுவும், மொய்குழலார் கண்ணோக்கும்
**சிற்றம் பலம்புரையும் செந்தூரே – நற்றகைய**
வானவரை யாண்டலையான், வைவேலான், வார்சிலைக்கைக்
**கானவரை யாண்டலையான் காப்பு.**

இ—ள்.

முற்றுணர்ந்தோர் தம்-அழுக்காறற்ற புலவரும் தவசிகளும் உள்ள
குழுவும்-பெருஞ் சபையானது
சிற்றம்பலம் – ஞானவிளக்கமான சிற்சபையை
புரையும் – ஒப்பாக விளங்குவதும்
மொய்குழலார் - வண்டு மொய்க்கும் கூந்தல் மகளிரது
கண்நோக்கும் – கண் பார்வையானது
சிற்றம்பு - சிறிய அம்பு
அலம் – துன்பஞ் செய்வதை
புரையும் – ஒப்பாவதுமாகிய
செந்தூரே - திருச்செந்தூர் தலமே

நல்தகைய - நன்மை மிக்க
வானவர்ஐ - தேவர்களது தலைவனும்
ஆண்டலையான்–சேவற்கொடி யுடையவனும்
வைவேலான் – கூரிய வேலை யுடையானும்
வார்சிலை – நீண்டவில்லைக் கொண்ட
கை – கைகளையுடைய
கானவரை - வேடர்களை
ஆண்டு - தனதடிமையாக ஏற்று
அலையான் - வருந்தாமற் காப்பவனுமான பெருமானது
காப்பு - காவலுக்குட்பட்ட தலமாகும் 32

**சொற்றகவோர் தங்குழுவில், தூயமனை வேலிகளில்**
**சிற்றகத்தி யங்குலவு செந்தூரே – பொற்றைதொறும்**
**ஆடுங்குரவன், அணிமுடிகள் ஆறிடத்தும்**
**சூடுங் குரவன் தொடர்பு.**

இ—ள்.

சொல்தகவோர்தம் - சொல் வன்மையுள்ள புலவர்களது
குழுவில் - சபையில்
சிற்றகத்தியம் - சிற்றகத்திய மென்ற இலக்கண நூல்
குலவு - பாடமாக விளங்குவதும்
தூயமனை - புனிதமான வீட்டு வேலியில்
சிற்றகத்தி - சிற்றகத்தியென்ற மரம்
அம் - அழகுடையதாக
குலவு - வளர்ந்து விளங்குவதுமாகிய

செந்தூரே - திருச்செந்திலம்பதியே

பொற்றைதொறும் - மலைதோறும்
ஆடும் குரவன் — நடிக்கின்ற குருநாதனும்
அணிமுடிகள் — அழகிய திருமுடிகள்
ஆறிடத்தும் — ஆறின்மீதும்
சூடும் - தரித்துள்ள
குரவன்-குராமலர் மாலையுடையவனுமாகிய பெருமானது
தொடர்பு — ஈடுபாடுடைய தலமாகும் 33

வாக்குடையார் சொற்கவியில், மன்னுசந்த மால்வரையில்
தேக்கு மதுரமிகு செந்தூரே — காக்கையுருக்
காட்டியரி வானமையைக் காத்தோன் துணை,மாவை
வீட்டியரி வானமையை வீடு.

இ—ள்.

வாக்குடையார் - பாட்டியற்ற வல்லாரது
சொற்கவியில் — கவிகளின் சொல்லில்
தேக்கும்-நிறைந்து விளங்கும்
மதுரம் - பல சுவைகளை
மிகு — மிகுதியாகக் காட்ட வல்லதும்
மன்னு — நிலைபெற்ற
சந்தமால்வரையில் - சந்தன சலத்தில்
தேக்கு — தேக்கு மரமும்
மதுரம் - மதுர மரமும்
மிகும் - அளவறக் கொண்டுள்ளதுமாகிய

செந்தூரே - திருச்செந்தூரே

காக்கைஉரு - காகத்தின் வடிவை
காட்டி — தெரியும்படி கொண்டு
கமண்டல நீரைக் கவிழ்வுறச் செய்து காத்த கணபதியின்
துணை - தம்பியாகவுள்ளவனும்

அரி - தேவேந்திரன் கொண்டிருந்த
வான் - ஆகாயம் வரைவளர்ந்திருந்த
அமையை - மூங்கிலை
காத்தோன் - அகத்தியர்
மாலை - சூரனென மாமரத்தை விட்டி அரிவான் - வேலாற் கொன்று விட்டவனுமாகிய முருகப் பெருமான்
அமை - எழுந்தருளிய
ஐவீடு - அழகிய வீடாகும் 34

**மன்னர்புகழ் சந்நிதியில், மாதவத்தோர் தம்முடம்பில்**
**சின்னம் பிறங்குதிருச் செந்தூரே — பன்னகத்தைத்**
**தின்னு மயிலான், திடுக்கிட் டவுணரஞ்ச**
**மின்னு மயிலான் விருப்பு.**

இ—ள்

மன்னர்புகழ்-அரசர்போற்றும்
சந்நிதியில் - திருக்கோயிலின் முன்பு
சின்னம் - திருச்சின்னமானது
பிறங்கு –முழங்கப்பெறுவதும
மாதவத்தோர் தம் – தவசிகளது
உடம்பில் – மேனியில்
சின்னம் – அவரவர் சமயக் குறிகள்
பிறங்கு – அழகுறத் திகழ்வதுமாவ

செந்தூரே – திருச்செந்திற்றலமே

பன்னகத்தை - பாம்புகளை
தின்னும் – உண்கின்ற
மயிலான் – மயிலை வாகமாயுடையவனும்
திடுக்கிட்டு–மனம் திடுக்கிடும்படி
அவுணர் அஞ்ச - அசுரர்அஞ்சுமாறு
மின்னும் – ஒளி வீசுகின்ற
அயிலான் – வேலினையுடையவனுமாகிய முருகனின்
விருப்பு - ஆவலுக்குரிய இடமாகும் 35

**மாக நகரிக்கும், மாநிலத்தூர் அத்தனைக்கும்,**
**சேகரம தான திருச் செந்தூரே - கோகனக**
**வாசத் தனைய வழக்கிட்டோன், மாதுமைசேர்**
**ஈசத் தனைய னிருப்பு.**

இ—ள்

மாக – வானத்து
மாநிலத்து – உலகத்து

நகரிக்கும் – நகரையாண்ட இந்திரனுக்கு
சேகரமதான – அதை மீட்டுக் கொடுத்ததும்
ஊர் அத்தலைக்கும் – தலங்கள் யாவற்றிற்கும்
சேகரமதான – தலைமைப்பதி யானதுமான

திருச்செந்தூரே - திருச்செந்தூரே

கோகனக – தாமரைப் பூவில்
வாசத்தன் – தங்கிய பிரம தேவன்
நைய – மனம் தளரும்படி
வழக்கு இட்டோன் – வல் வழக்குரைத்தவனும்,
மாதுஉமை – உமாதேவி யுடன்
சேர் – சேர்ந்து விளங்கும்
ஈச – பரமசிவனுடைய
தனயன் – குமாரனுமான முருகனது
இருப்பு – வசிப்பிடமாகும் 36

நேமமிகுங் கோயிலுக்கும் நேர்ந்துவரு வார்தமக்கும்
சேமம் பெருக்குதிருச் செந்தூரே – காமன்
உருக வனப்புடையான் ஒன்னார் ஒழியப்
பொருக வனப்புடையான் பூ.

இ - ள்

நேமம் மிகும் – ஒழுக்கநியம மிகுந்த
கோயிலுக்கும் – திருக்கோயி லிடத்து
சேமம் – பாதுகாப்பு
பெருக்கு – சிறந்துள்ள
நேர்ந்து – விருப்பங்களைக் கோரி
வருவார் தமக்கும் – வழிபட வருமன்பர்கட்கு
சேமம் – இன்பப் பயனை
பெருக்கு - வேண்டியபடி மிக வும் தருகின்ற

செந்தூரே – செந்திற்பதியே

காமன் – மன்மதன்
உருக – மனம் ஏங்கும் படியான
வனப்புடையான் - அழகுள்ள பெருமானும்
ஒன்னார் ஒழிய-பகைவர் அழியு மாறு
பொரு – போர் புரிவதில்
கவன - கருத்துடைய (நவ வீரர்களை)
புடையான் – தன்பக்கம் கொண்டவனுமாகிய முருக னது
பூ – சிறந்த இடமாகும் 37

எவ்வா கமத்தோரும் ஈரைந்தில் மேம்படவும்
*செவ்வாய் வணங்குதிருச் செந்தூரே — கொவ்வைக்
கனியனைய னாகத்தான் கான்முளை,முன் கண்ட
தனியனைய னாகத்தான் சார்பு.

இ—ள்

எவ்ஆகமத்தோரும் - பலவித சாத்திரம் உணர்ந்தவர்களும்
செவ்வாய் – செவ்வையாக
வணங்கு – போற்றி வழிபடுகின்றதும்
ஈர்ஐந்தில் - லக்கினத்துக்குப் பத்தாவது வீட்டில்
மேம்படவும் - நல்லபயனை உதவிச் சிறப்படையுமாறு
செவ்வாய் – அங்காரகன் இருந்து
வணங்கு – போற்றுகின்றதுமான

திருச்செந்தூரே – திருச்செந்தூரே

கொவ்வைக்கனி - கோவைப் பழம்
அனையன்-போல சிவந்த மேனியுடையவனும்
நாகத்தான்-பாம்பாபரணனான சிவனது
கான்முளை - திருக்குமாரனும்
முன்கண்ட – முதன்மைப் பொருளாகவுள்ள
தனியன் - ஒப்பற்ற கடவுளும்
ஐய.- அழகுடைய
நாகத்தான்–பலமலைகளுடையவனும் ஆன முருகன்
சார்பு – தங்கும் இடமாகும்.

38

பொய்ம்மல்கு தானவரால், புன்னைமலர்ச் சோலையினால்
செம்மல் வளைந்ததிருச் செந்தூரே — மும்மலமும்
காய்ந்த வரன்பாலன், கன்னித் தமிழ்முழுதும்
ஆய்ந்தவரன் பாலின் அரண்.

*செவ்வாய் - முருகன் அம்சமுள்ள கிரகம், ஆட்டு வாகனம், செந்நிறம், சேய் என்ற தொடர்புண்டு. எவ்வித ஆகமத்தோரும் செவ்வாய் நல்ல பயனைத் தர எனவும், செவ்வாய் தான் நல்ல வீட்டிலிருந்து நற்பயனைத் தர எனவும் கொள்ளலாம்.

இ—ள்.

பொய்மல்கு - பொய் நிறைந்த
தானவரால்-அசுரர் கொடுமையினால்
செம்மல்-தலைமையான போர்
விளைந்த- உண்டாதற்கிடமாயிருந்ததும்

புன்னைமலர் – புன்னைமரங்களின் பூ மிகுந்த
சோலையினால் - பொழில்வளந்தால்
செம்மல் - செம்மையான இருள்
விளைந்த-மிகுத்துள்ளதுமான

திருச்செந்தூரே – திருச்செந்திற்றலமே

மும்மலமும் – ஆணவ முதலிய மலங்கள் மூன்றையும்
காய்ந்தவர் – அறவே நீங்கப் பெற்ற தவசிகளது
அன்பு – உள்ளத்தன்பில்
ஆலன் - களிக்கின்றவனும்
கன்னித்தமிழ் – இளமை மாறாத தமிழ்

முழுதும்ஆய்ந்த - பூராவும் ஆராய்ந்த
அரன்பாலன் – சிவகுமாரனுமாகிய முருகனின்
அரண் – ஆட்சிக்குரிய இடமாகும்'

39

விந்தைமிகும் வேலொளியால், வெண்பொடிப்பன் னீரிலையால்
சிந்தை திருந்துதிருச் செந்தூரே – நந்தையணி
கைம்மான் மருகோன், கனலேந்தி யாடுமருட்
பெம்மான் மருகோன் பிடிப்பு.

இ—ள்.

விந்தைமிகும் – வியப்புமிக்க
வேல் ஒளியால் - வேலின் பிரகாசத்தால்
சிந்துஐ – கடலதிபனான வருணன்
திருந்து – (செய்த தவறி விருந்து) திருந்தச் செய்வதும்

வெண்பொடி - வெண்ணிறத் திருநீறுள்ள
பன்னீர்இலையால் – பன்னீர் இலைப் பிரசாதத்தினால்
சிந்தை - வினைவயப்பட்ட மனதை
திருந்து – பத்தியில் ஈடுபடப் புரிகின்றதுமான

திருச்செந்தூரே – சீரலைவாய்ப்பதியே

நந்தைஅணி - சங்கைத் தரித்துள்ள
கை – கரத்தினையுடைய
மால்மருகோன் – திருமால் மருகனும்
கனல்ஏந்தி – நெருப்பைக் கையிற்கொண்டு
ஆடும் – திருநடம் புரிகின்ற
அருள் – திருவருள் மிக்க
பெம்மான் – சிவபெருமானது
மருகோன் – பக்கத்திலிருக்கின்றவனுமாகிய முருகனுக்கு
பிடிப்பு – பிடித்தமான தலமாகும். **40**

**சாகரத்தின் தண்டுறையில், தக்கமறை யோர்முகத்தில்**
**சீகரம்விட் டோவாத செந்தூரே – மாக**
**நகரத்துக் காவலினன், நாகமகள் கூந்தற்**
**றகரத்துக் காவலினன் சார்பு.**

இ—ள்,

சாகரத்தின் – கடலினது
தண்துறையில் - குளிர்ந்த துறையிடத்து
சீகரம் – அலைகளானவை
விட்டுஓவாத – ஓயாது வீசுகின்றதும்
தக்க – தகுதியுள்ள
மறையோர் முகத்தில் – வேதியரது முகத்தில்
சீகரம் – அன்புக்கண்ணீர்த் திவலையானது
விட்டுஓவாத – இடைவிடாது வழிகின்றதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூரே

மாக – வானநாடாகிய
நகரத்து – தேவருலகத்தின்
காவலினன்-பாதுகாவலுடையவனும்
நாகமகள் – யானைமகளான தெய்வயானையின்
கூந்தல் - நீண்ட கரிய கூந்தலின்
தகரத்துக்கு - இயல்பான மணத்தை நுகர்தற்கு
ஆவலினன் – ஆசையுள்ளவனுமான முருகன்
சார்பு – சார்ந்திருக்கும் தலமாகும். **41**

**தன்முயல் வார்மனத்தில் தாழ்வில்பெரி யோர்கரத்தில்**
**சின்மயத்தைக் காட்டுதிருச் செந்தூரே – கன்மம்**
**அறுக்குங் கரத்தான், அவுணர்களைப் பாசத்(து)**
**இறுக்குங் கரத்தான் இடம்.**

இ—ள்.

நன்மம்முயல்வார் - அறச் செயலைப்புரிபவரது
மனத்தில் - உள்ளத்தில்
சின்மயத்தை - ஞான விளக்கத்தை
காட்டு - கொடுத்தருள வல்லதும்
தாழ்வுஇல் - குற்றமற்ற பெரியோர் - தவசீலர்களின்
கரத்தில் - கையினிடமாக
சின்மயத்தை — சின்மய முத்திரைக் குறியை
காட்டு - காணச் செய்வதும் ஆன

திருச்செந்தூரே - திருச்செந்தூரே

கன்மம்-அடியவரது வினையை
அறுக்கு - மாற்றத்தக்க
உங்கரத்தான் - அதட்டுதலை யுடையவனும்
அவுணர்களை — அசுரர்களை
பாசத்து - பாசக் கயிற்றால்
இறுக்கும்-கட்டியழுத்துகின்ற
கரத்தான் - திருக்கரமுடைய வனுமாகிய முருகனின்
இடம் - இருப்பிடமாம். 42

பொற்றொடியார் நெற்றியினில், பொங்குபுண ரிக்கரையில்,
சிற்றலவ னுற்றதிருச் செந்தூரே — கற்றவர்கள்
எண்முகவி லாசத்தான், ஈரிருபொற் றாண்மருவு
சண்முகவி லாசத்தான் சார்பு.

இ—ள்,

பொற்றொடியார் — பொன்வளை பூண்ட மாதரது
நெற்றியினில் — நெற்றியி னிடத்து
சிற்றுஅலவன் - பிறைச் சந்திரன்
உற்ற - விளங்குகின்றதும்
பொங்கு - அலைமிகுந்துள்ள
புணரிக்கரையில்-கடற்கரை யில்
சிற்று அலவன் - சிறிய நண்டுகள்
உற்ற-உலாவுகின்றதுமாகிய

திருச்செந்தூரே — திருச்செந்திலே

கற்றவர்கள் - கவிப்புலவோர்
எண் - மதிக்கக்கூடிய
முகவிலாசத்தான் - திருமுகப் பொலிவுடையவனும்
சண்முகவிலாசத்தான் - சண்முகவிலாசம் என்ற மண்டபத்தை யுடைய வனுமாகிய முருகன்

ஈரிரு - நான்காகிய
பொற்றூண்மருவு - அழகிய தூண்களையுடைய
சார்பு – சார்ந்திருக்கும் இடமாம்.
43

உண்டாடும் மங்கையரும் உக்கிரனை ஒத்தோரும்
செண்டார் கரத்தினராம் செந்தூரே — வண்டாரும்
செச்சையணித் தோகையினன், திந்தத்தோ மென்றாடும்
பச்சையணித் தோகையினன் பற்று.

இ—ள்.

உண்டாடும் - விளையாடுகின்ற
மங்கையரும்-பெண்களெல்லாம்
செண்டுஆர் – பூப்பந்து பொருந்திய
கரத்தினர்ஆம்-கையுடையவர்களாயுள்ளதும்
உக்கிரனை – உக்கிரகுமார பாண்டியனை
ஒத்தோரும் – போன்ற வீரர்கள்
செண்டுஆர் – செண்டாயுதம் பொருந்திய
கரத்தினராம் – கையினராகவுள்ளதுமான

செந்தூரே – செந்திற்பதியே

வண்டுஆரும் – வண்டுமொய்க்கின்ற
செச்சை – வெட்சிமாலையை
அ(ண்)ணித்த - பொருந்தச் சூடிய
ஓகையினன் – மகிழ்வையுடையவனும்
திந்தோ மென்றாடும்-திந்தோமென நடிக்கின்ற
பச்சை – பச்சைநிறமுள்ள
அணித் தோகையினன் – அழகியமயிலையுடையவனுமான முருகன்
பற்று – விரும்பும் தலமாகும்
44

பாணவிழி யாரிடையில் பாயும் பரிமுதுகில்
சேணம் குலாவுதிருச் செந்தூரே – மாணமரர்
சந்தடிமைக் கொண்மூவான் தன்மருகன் தக்கோரை
வந்தடிமைக் கொண்மூவான் வாழ்வு.

இ—ள்,

பாணவிழியார்–அம்புநிகர் கண்களுடைய மாதரின்
இடையில் - இடுப்பில்
சேண் – ஆகாயமொத்த
அம்–அழகு (இல்லையென்ற படி)
குலாவு – விளங்குவதும்
பாயும்–தாவிச் செல்கின்ற
பரிமுதுகில்–குதிரையின்மீது
சேணம் – ஏறிச்செல்லுதற் கான மெத்தை
குலாவு–பொருத்தப் பெற் றுள்ளதுமான

செந்தூரே — திருச்செந்திற்பதியே

மாண்அமரர்-சிறந்த தேவர் களது
சந்தடி–வந்துசெல்லும் ஓசை யுடைய
மை – இருண்ட
கொண்மூவான்றன் – மேக மொத்த திருமாலின்
மருகன் – மருகனானவனும்
தக்கோரை – பக்குவமுள்ள அன்பரை
வந்து - தானே வலிந்து சென்று
அடிமைகொள்-ஆட்கொள் கின்ற
மூவான்–அழிவற்றவனுமான முருகன்
வாழ்வு – வசிக்குமிடமாகும் 45

மந்தித் திரள்கனியை, மாதவத்தோர் மெய்யருளைச்
சிந்திக்கை காட்டுதிருச் செந்தூரே - தந்திமுக
மத்தகவன் வற்கிளையான், மாமறையென் றேதுமுன்னைப்
புத்தகவன் னற்கிளையான் பொற்பு

இ—ள்.

மந்தித்திரள் - வானரக் கூட்டங்கள்
கனியை - பழவகைகளை
சிந்தி - கீழே சிந்தியும்
கைகாட்டு – கையிலும் கொண்டுள்ளதும்
மாதவத்தோர் – பெரிய தவ சிலர்கள்
மெய்யருளை - திருவருட் பேற்றை
சிந்திக்கை – நாடித் தியானிப் பதை
காட்டு – பெறச் செய்கின்றது மான

திருச்செந்தூரே — திருச்செந்திலே

தந்திமுக – யானைமுகமும்
மத்தக - மத்தகமுடைய
வன்னற்கு - அழகிய விநாயகருக்கு
இளையான் - இளைய துணைவனும்
மாமறை என்று ஓதும்-சிறந்த வேதமாகிய
முன்னை - மிகப்பழமையான
புத்தக – நூலையுடைய
அன்னற்கு - அன்னவாகனப் பிரமனுக்கு
இளையான் – மெலிவடையாதவனுமான முருகனுக்கு
பொற்பு – அழகிய இடமாகும் 46

கொவ்வையித ழார்விழியில், கோயிற் றிருமுகப்பில்,
செவ்வரிகு லாவுதிருச் செந்தூரே — ஔவையெதிர்
நவ்வற் கனிக்குவந்தான் நற்புனத்தின் சிற்றிதணில்
வவ்வற் கனிக்குவந்தான் மால்.

இ– ள்.

கொவ்வையிதழார்-கோவைக் கனிஒத்த உதடுடைய மாதர்களது
விழியில் - கண்களில்
செவ்வரி - செம்மைநிறக் கோடுகள்
குலாவு-விளங்கப் பெறுவதும்
கோயில் - திருஆலயத்தின்
திருமுகப்பில் – முன்பக்கமாக
செவ்வரி - சமுத்திரம்
குலாவும் - அழகு செய்வதுமாகிய

திருச்செந்தூரே — செந்திற்பதியே

ஔவையெதிர் - ஔவையின் முன்பு
நவ்வற்கனிக்கு - நாவற் பழத்திற்காக
வந்தான் - தோன்றி ஆடல் செய்தவனும்
நற்புனத்தின் - தினைப்புனத்தின்கண்
சிற்று இதணில்-சிறிய பரணில்
வௌவு – தான் அபகரித்த
அல் – கருப்பு நிறமுடைய
க(ன்)னிக்கு - வள்ளியின் மீது
உவந்தான் - மகிழ்ந்தவனுமான முருகன்
மால் - விரும்பும் இடமாம் 47

வெவ்வாட்கை வீரர்களும், மேலைச் சிகரியுள்ளும்
செவ்வானை மேவுதிருச் செந்தூரே - ஒவ்வாரைச்
செற்றுததி மாவென்றான், செந்தகர்போய்ச் சேனுலகை
எற்றுததி மாவென்றான் இல்.

இ—ள்.

வெவ்வாள் - கூரியவாளாயுதத்தை
கை — கையில்கொண்ட
வீரர்களும் — பூதவீரர்கள்
செவ் - செவ்வையான
ஆனைமேவு - யானைப்படையிலிருக்கின்றதும்
*மேலைச்சிகரி—மேற்புறக்கோபுரத்தின்
உள்ளும் — உட்புறமாக
செவ்,வானை — செந்நிறஆகாயஒளியை
மேவு — வாயில்வழியே கொள்ளப்பெற்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திற்பதியே

ஒவ்வாரை . அசுரரான பகைவரை
செற்று — அழித்து
உததி - கடல்நடுவே தோன்றிய
மா,வென்றான் - சூரனை மாமரத்தை வென்றவனும்
செந்தகர் — செந்நிற ஆட்டுக்கடா
போய் - வீரமுடன் சென்று
சேனுலகை - தேவருலகை
எற்றுததி - அழிக்கும் சமயம்
மாவென்றான் - இது நமக்குக் ✤குதிரை என்றவனுமான முருகனின்
இல் - இருப்பிடமாகும்.

48

மைம்மதிட்பொன் வாயில்களும், வண்கடப்பஞ் சோலைகளும்
செம்மலரைக் கொண்டதிருச் செந்தூரே — இம்மை
மறுமைக்கு மாவலவன், மாமுனிவ ரஞ்சச்
செறுமைக்கு மாவலவன் சீர்.

இ—ள்.

மைமதிள் - மேகமட்டுயர்ந்த மதிலின்
பொன்வாயில்களும் - அழகிய வாயில்கள்
செம் — செந்நிறமுள்ள
வண்கடப்பம் - வளமான கடம்ப மரத்தின்
சோலைகளும்-பூம்பொழில்கள்
செம் — செம்மை நிறமுள்ள
மலரை - பூக்களை

---

*கிழ்ப்புறம் கடலானதுபற்றி, திருச்செந்தூரின் கோயிற் பெரிய கோபுரம் மேற்றிசையில் உள்ள தென்ற குறிப்பு. எனவே மாலை வெய்யில் உள்மேவும்.

✤ வீரவாகு தேவர் சென்று ஆட்டைப் பற்றிக் கொணர்ந்த சமயம், முருகன் வாகனமாக்கி ஊர்ந்தவரலாற்றின் கருத்து.

மல்லரை – வீரவாகு முதலிய வீரர்களை
கொண்ட–துவாரபாலகராகக் கொண்டதும்
கொண்ட - நிறையக் கொண்டுள்ளதுமான
திருச்செந்தூரே - சீரலைவாய்ப்பதியே

இம்மை – இம்மை இன்பந் தருவதிலும்
மறுமைக்கும் – வீட்டின்பம் அளிப்பதிலும்
மா,வல்லவன் – மிகச் சமர்த்தனும்
மாமுனிவர் – மேலான தவசிகள்
அஞ்ச – பயந்தோடும்படி
செறும் – கனைத்து வந்த
மைக்கும் – ஆட்டின்மீதேறும்
ஆவலவன்-விருப்புடையவனுமான முருகனது
சீர் – சிறந்த தலமாகும்.

49

**அங்கசவேள் கைத்திறத்தை. அன்பர்களி கூர்விழவைத்**
**திங்கள் விளக்குதிருச் செந்தூரே - அங்கைக்**
**கயத்தனை வேலான், காதகச்சூர்க் கொன்ற**
**செய்த்தனை வேலான் சித்து.**

இ – ள்.

அங்கசவேள்–மன்மதனுடைய
கைத்திறத்தை – கையின் திறமையை
திங்கள் – சந்திரனனது
விளக்கும் - குடையாக நின்று விளங்கச் செய்வதும்
அன்பர் – அடியவர் கூட்டம்
களிகூர் - கண்டு மகிழ்கின்ற
விழவை–திருவிழாச் சிறப்பை
திங்கள் – மாதந்தோறும்
விளக்கும் - விளக்கமுடன் கொண்டதுமான
திருச்செந்தூரே – திருச்செந்தூரே

அம்கை – அழகிய தும்பிக்கையுடைய
கயத்தன்–யானைமுகத்தாருகாசுரன்
அல்நைவு–மாயையாற் செய்த போர்த்துயரை
ஏலான் – சற்றும் கொள்ளாதவனும்
காதக – வஞ்சகனன
சூர்க்கொன்ற – சூரனைக் கொன்றருளிய
செயத்தன் – வெற்றியையுடையவனும்
அனை – தாயான சக்தியை
வேலான்–வேலாகக்கொண்டவனுமான முருகனின்
சித்து – அருளாடலுக்குரிய தலமாகும். 50

மாதரடல் ஆடவர்க்கும். வாரிதிநீர் வார்கரைக்கும்
சீதமுத்தம் நல்குதிருச் செந்தூரே — போதனழக
குட்டு மயத்தன், கொதித்தெழுந்து கொம்புகொண்டு
முட்டு மயத்தன் முகம்.

இ—ள்.

மாதர் — மாதர்கள்
அடல்ஆடவர்க்கும் — வலிமையுள்ள தம் கணவர்களுக்கு
சீதமுத்தம்—அன்புமுத்தங்களை
நல்கு — தருகின்றதும்
வாரிதிநீர் — கடலின் நீரலைகள்
வார்கரைக்கும் - நீண்ட கரைகளில்
சீதமுத்தம் — குளிர்ந்த வெண்முத்தங்களை
நல்கு — பயன் கருதாது உதவுகின்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திற்பதியே

போதன் — தாமரை மலரில் உள்ள பிரமனை
அழக்குட்டும் — வருந்தக் குட்டிய
மயத்தன் — செம்மாப்புடையவனும்
கொதித்து எழுந்து — கோபத்துடன் வந்து
முட்டும் — முட்டியெதிர்த்த
அயத்தன் — ஆட்டினையுடையவனுமான முருகனுக்கு
முகம் — முகம்போன்ற இடமாகும். 51

எஞ்சா மதிதோறும், எண்ணறும்பேராலைதொறும்
செஞ்சாறு மேவுதிருச் செந்தூரே — நஞ்சாரும்
கண்டன் தருமதலை, கன்னிக் குறமடந்தை
தொண்டன், தருமதலை சூழ்வு.

இ—ள்.

எஞ்சா — குறைவில்லாதவாறு
மதிதோறும் - மாதந்தோறும்
செம் — செம்மையான
சாறுமேவு - திருவிழாக்களையுடையதும்
எண்அறும்—அளவிலடங்காத
* பேர்ஆலைதொறும் - பெரிய ஆலைகளில்
செம் - செங்கரும்பினது
சாறுமேவு - சாறுகளைப் பிழிகின்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திற்பதியே

* "கரும்பாலை வாசம் கமழும் செந்தூர்" என்று திருச்செந்திற் கோவையில் உள்ளது. அந்த நூலும், இந் நூல் ஆசிரியர் தண்டபாணி சுவாமிகள் இயற்றியதேயாகும்.

நஞ்சஆரும்-விடத்தினை யுடைய
கண்டன்தரும் - சிவபிரான் உதவிய
மதலை – குமாரக் கடவுளும்
கன்னி – கன்னிப் பருவத் தோடுள்ள
குறமடந்தை – வள்ளிநாயகி யின்
தொண்டன் - பணியை விரும்பியவனும்
தருமதலை–அறத்தின் தலைவனு மான முருகன்
சூழ்வு - சூழ விளங்குமிட மாகும்.

52

பாவலங்கற் காரர்களும், பன்னுபல வீரர்களும்
சேவகத்தா ரானதிருச் செந்தூரே - தேவர்
மதிக்கு மியலான், மதுரைப் புலவோர்
துதிக்கு மியலான் தொடர்பு.

இ—ள்.

பா – துதிப்பாடலாகிய
அலங்கற்காரர்களும் - மாலை யுடைய புலவர்கள்
சேஅகத்தார்ஆன – செம் மனம் உடையவராக வரப் பெற்றதும்
பன்னுபல - பலவித நிற முள்ள
வீரர்களும் - நவவீரர் முதலியோர்
சேவகத்தாரான–பணிசெய் பவர்களாக அமைந் துள்ளதுமான

திருச்செந்தூரே – திருச்செந்தூர்த்தலமே

தேவர்மதிக்கும் - வானவர் மதித்தற்குரிய
இயலான்-திருவருள் உடைய வனும்
மதுரைப்புலவோர் - சங்கப் புலவர்கள்
துதிக்கும் - பாராட்டத்தக்க
*இயலான் - தமிழ்ப்புலமை யுடையவனுமான முருகன்
தொடர்பு – இணைந்து நிற்கும் தலமாகும்.

53

* முருகன் உருத்திரசன்மரென்ற பெயருடன் ஊமைக் குழந்தையாக விளங்கி, சங்கப் புலவரது இலக்கணவுரையை ஏற்றருளி உண்மை விளக்கிய வரலாறு.

மைந்தார் மதிளகத்தில், மாதவத்தோர் தம்அரையில்
செந்தானை சுற்றுதிருச் செந்தூரே – திந்தாவென்(று)
ஆடு மொகரத்தான், ஆராய்ந் தறிந்தவல்லோர்
நாடு *மொகரத்தான் நகை.

இ—ள்.

மைந்துஆர் - வலிமையுடைய
மதிளகத்தில் - கோயில் மதிற் புறத்தில்
செம்தானை - சிறந்த போர் வீரர் கூட்டம்
சுற்று – சுற்றியிருக்கப்பெறுவதும்
மாதவத்தோர்தம் – தவசிகளுடைய
அரையில் - இடுப்பில்
செம்தானை – செந்நிறக் கல்லாடை
சுற்று – அணிந்து வாழக் கூடியதுமாகிய

திருச்செந்தூரே – சீரலைவாய்ப்பதியே

திம்தாஎன்று - தாளவரிசைக் கிசைய
ஆடும் – நடிக்கக்கூடிய
ஒகரத்தான்-மயிற்பரியுடையவனும்
ஆராய்ந்தறிந்த - அறிவறிந்துள்ள
வல்லோர் - பெரியோர்கள்
நாடும் - பெற விரும்புகின்ற
*ஒகரத்தான் – பிரணவப் பொருளானவனுமான முருகனின்
நகை - இச்சையுடைய தலமாகும்.

54

முற்றுபெரும் பூதர்களும், மோன முனிவோரும்
சிற்றுருக்கொண் டேய்ந்ததிருச் செந்தூரே-மற்றுவமை
இல்லாத வன்புரைவான் இந்திரனுக் கீந்தகுகன்,
நல்லாத வன்புரைவான் நாடு.

இ—ள்.

முற்று – வல்லமை நிறைந்த
பெரும்பூதர்களும் – பூத வீரர் யாவரும்
மோன-மௌன அநுபவமுற்ற
முனிவோரும் – தவசிகள் கூட்டம்

* ஒகாரம் என்ற சொல். எதுகை நோக்கி வந்த குறுக்கம்.

சிற்றுருக்கொண்டு — குறுகிய வடிவினராய்
ஏய்ந்த - விளங்கும் தன்மையானதும்
சிற்றுருக்கொண்டு — ஞான விளக்கத்தின் வடிவமாக
ஏய்ந்த — பொருந்தியிருப்பது மான

திருச்செந்தூரே - திருச்செந்திற்பதியே

மற்றுஉவமை - வேறு ஒரு எடுத்துக் காட்டு
இல்லாத - அமையப்பெறாத
அன்புஉரை - அருளுரையை
வான்இந்திரனுக்கு — தேவேந்திரனுக்கு
ஈந்தகுகன்-சொல்லிய குகனும்
நல்ஆதவன்— ஒப்பற்ற ஞான சூரியனை
புரைவான் — ஒத்துள்ளவனு மான முருகனது
நாடு — நாட்டத்துக்குரிய தலமாகும். 55

மூவலறு சந்தவெற்பில், மொய்ம்மலர்த்தண் சோலையினில்
தேவதா ரங்குலவு செந்தூரே — பாவலவர்
சந்தத் தமிழ்த்தகையான், தாழ்விழைவார் தம்மைவினைப்
பந்தத் தமிழ்த்தகையான் பங்கு

இ—ள்,

மூவல்அறு - கெடுதலற்ற
சந்தவெற்பில்-சந்தன மலையில்
தேவதாரம்-தேவதாரமென்ற மரம்
குலவு — பொலிந்துள்ளதும்
மொய்மலர் - வண்டு மொய்க்கும் மலர்கள் நிறைந்த
தண்சோலைகளில் — குளிர்ந்த பொழில்களில்
தேவ — தேவர்கள்
தாரம் — அவரவர் மனைவிகளுடன்
குலவு — கூடிக்களிக்கின்றது மான

செந்தூரே — திருச்செந்தூரே

பாவலவர் — கவிப்புலவரின்
* சந்தத்தமிழ்-அழகிய பாடலை
தகையான் — விரும்பும் இயல்புடையவனும்
தாள்விழைவார் தம்மை — திருவடி விரும்பும் அன்பரை
வினைப்பந்தத்து — நல்வினை தீவினையாகிய தளையில்
அமிழ் — மூழ்கும்படி
தகையான்-கட்டுப்படுத்தாதவனுமாகிய முருகனது
பங்கு — இணக்கமான இடமாகும். 56

* சந்தத் தமிழ் - வண்ணப் பாடல் எனவும் கொள்ளலாம்

மென்றுகிலா ரால்,புனித வேதியரால், சந்நிதியில்
சென்றுசந்த னம்புனையும் செந்தூரே - குன்றுதொறும்
நிற்குங் குமராகன், நெட்டிலைவேற் கைப்பெருமான்
நற்குங் குமராகன் நார்.

இ—ள்.

மென் - மெல்லிய
துகிலாரால் - ஆடையுடுத்த மகளிருடன்
சந்நிதியில் சென்று – சந்நிதிக்குப்போய் வணங்கின்
சந்தன் அம்பு – மன்மதனது பாணத்தின்
நையும்-( வலிமையைக்) குறையச் செய்வதும்
புனித - ஒழுக்கமிக்க
வேதியரால் - அந்தணர் மூலமாக
சந்நிதியில் சென்று – ஆலயத்துட் சென்றபோது
சந்தனம் - பிரசாதமான சந்தனத்தை
புனையும் – அணியத் தருகின்றது மாகிய

செந்தூரே - திருச்செந்திற்றலமே

குன்றுதொறும் - மலைக் கோயில்களில்
நிற்கும் - எழுந்தருளியுள்ள
குமரஆகன் - குமாரக்கடவுளும்
நெட்டு இலைவேல் - நீண்ட இலையொத்த வேலினையுடைய
கைப்பெருமான் – கையினைக் கொண்ட கடவுளும்
நல் – நல்ல
குங்கும - குங்குமம் போன்ற
ராகன் - சிவந்த மேனியுடையவனுமாகிய முருகனின்
நார் – அன்புக்குரிய இடமாகும் 57

கோவிலுக்குட் சென்றோரும், கோரமிகு வீரர்களும்
*தீவினையை வென்றதிருச் செந்தூரே - காவிமலர்க்
கண்ணியனு கத்தரத்தன், காருடற்சூர் மாயவென்ற
புண்ணியனு கத்தரத்தன் பொற்பு.

*தீவு - கடல்சூழ்ந்த வெற்றிடம், எனவே வீரமகேந்திரமெனவும், அங்கு வாழ்ந்த சூரபன்மன் எனவும் பொருள் ஏற்பட்டதாம்.

இ—ள்.

கோவிலுக்குள் – சந்நிதியின் முன்பு
சென்றேரும் – சென்று வணங்குபவர்
திவினையை - பழைய வினைகள்
வென்ற – அறவே நீங்கப்பெறுவதும்
கோரம்மிகு – அச்சம் தரக்கூடிய
வீரர்களும் – நவ வீரர்கள்
தீவின்ஐயை – கடல் நடுவிருந்த அசுரத் தலைவனை
வென்ற – வெற்றிகொண்டதுமாகிய

திருச்செந்தூரே - திருச்செந்திற்பதியே

காவிமலர் - நீலோற்பலப் பூவாலான
கண்ணியன் – மாலையுடையவனும்
*நாகத்தர் – விண்ணவர்களுடைய
அத்தன் - தலைவனானவனும்
கார்உடற்சூர் - கரிய உடலினனான சூரன்
மாயவென்ற – அழியப் போர்புரிந்த
புண்ணியன் – அறக்கடவுளும்
ஆகத்து – திருமேனியில்
அரத்தன் - சிவப்புடையவனுமாகிய முருகனின்
பொற்பு - அழகிய தலமாம் 58

**பைந்தாட் புதற்பெருக்கில், பச்சைமயூ ரப்பரியில்**
**செந்தோகை மிஞ்சுதிருச் செந்தூரே – அந்தரர்க்கா**
**முன்ன மலரால் முளைத்தெழுந்தோன், மொய்க்குரவ**
**வன்ன மலரான் வயின்.**

இ—ள்

பைந்தாள் - பச்சைநிறத்தாளினையுடைய
புதர்ப்பெருக்கில் - புதர்களிடத்து
செந்து* - பல் உயிர்ப்பிராணிகள்
ஓகை மிஞ்சு - பகையின்றி மகிழ்வுடன் வாழ்கின்றதும்
பச்சை - பசியநிற
மயூரப்பரியில்–மயில் வாகனத்தில்
செம்தோகை – செழுமையான தோகையின் அழகு
மிஞ்சு – நிறையப்பெற்றதுமான

செந்தூரே – திருச்செந்தூரானது

நாகம் - விண், பாம்பு, மலை போன்ற பொருளுடையது.

அந்தரர்க்கா – தேவர்கள் விரும்பியபடி
முன் – முற்காலத்தில்
அமலரால் –சிவபிரானிடமாக
முளைத்து எழுந்தோன் – தோன்றிய கடவுளும்
மொய் –வண்டுகள் மொய்த்த
குரவ – குராவினது
வன்னமலரான் – அழகிய மலரையுடையவனுமாகிய முருகனின்
வயின் – இடமாகும் 59

வன்காமம் துய்ப்பார்க்கும், மாதவமே செய்வார்க்கும்
தென்காலன் அஞ்சுதிருச் செந்தூரே - நன்கெவையும்
வல்ல வரையன், மகிதலத்தில் உள்ளனவாம்
பல்ல வரையன் பதி.

இ—ள்.

வன்காமம் – புலன்வயப்பட்ட காம இன்பத்தை
துய்ப்பார்க்கும் – அநுபவிப்பவர்கட்கு
தென்காலன் – தென்றலையுடைய மன்மதன்
அஞ்சு - மனம் அஞ்சுமாறு புரிவதும்
மாதவமே–உயர்ந்த தவ ஒழுக்கத்தையே
செய்வார்க்கும்–மேற்கொண்ட உத்தமர்கட்கு
தென்காலன் – தென்றிசைக் குரிய எமன்
அஞ்சு – உள்ளம் நடுங்கச் செய்வதுமான

திருச்செந்தூரே — திருச்செந்தூரே

நன்கு – நல்ல விதமாக
எவையும்வல்ல – எதையும் செய்கின்ற
அரையன் – தலைவனை பெருமானும்
மகிதலத்தில் – உலகத்தில்
உள்ளனவாம் – இருப்பதான
பல்ல – பல்வேறு வகையுள்ள
வரையன் – மலைக்கோயிலையுடையவனுமான முருகனின்
பதி – இடமாகும். 60

வெம்போர்வல் லாரயிலில் வெண்டிரைத்தெண் ணீர்க்கடலில்
செம்பாறு வந்துவிழும் செந்தூரே – நம்பாத
கள்வருக்கக் காரனல்லான், கானமயி லாதியவாம்
புள்வருக்கக் காரன் புரம்.

இ—ள்.

வெம்போர்-கொடிய போரில்
வல்லார் - வல்ல வீரர்களின்
அயிலில் – வேல் முதலிய படைகளில்
செம்-பாறு – செந்நிறப் பருந்து முதலியன
வந்துவிழும் - பறந்து (ஊன் வாடைக்காக) தாவுகின்றதும்
வெண்திரை-வெண்மையான அலையுடையதும்
தெண்ணீர் - தெளிந்த நீர் மிகுந்ததும் ஆன
கடலில் - சமுத்திரத்தில்
செம்புஆறு – தாமிரபரணி யாற்று நீர்
வந்துவிழும் - காலின் வழி வந்து கலக்கின்றதுமாகிய

செந்தூரே – திருச்செந்தில் நகரமே

நம்பாத - நன்மை தீமைப் பயன்களைப் புறக்கணிக்கின்ற
கள்வருக்கு - அஞ்ஞான மிக்கோருக்கு
அக்காரன் – சர்க்கரை ஒத்த இனிய
அல்லான் – கருணை காட்டாதவனும்
கானமயில்ஆதியவாம் – மயில் முதலிய கிளி சேவல் என்கின்ற
புள் – பறவைகளின்
வருக்கக்காரன் – இனத்தைக் கொண்டவனுமாகிய முருகனின்
புரம் - பதியாகும். 61

பாட்டும் பனைமடலில், பல்வேலைப் பாறையினும்
தீட்டும் பெருமைதிகழ் செந்தூரே - கோட்டுக்
களிறு தனக்கிளையான், கற்றுணர்ந்தோர் மெச்ச
வெளிறு தனக்கிளையான் வேட்பு.

இ—ள்.

பாட்டும்-இனிய துதிப்பாடல்களை
பனைமடலில் – பனையோலை ஏடுகளில்
தீட்டும் – அழகுற எழுதுகின்ற
பெருமை திகழ் – புலவர் வாழும் சிறப்புடையதும்
பல்வேலை – வேலைப்பாடமைந்த பல சிற்பங்களை
பாறையினும்.–கருங்கல்லினில்
தீட்டும்–நுட்பமாகஅமைக்கும்
பெருமைதிகழ் - மேன்மையுடையதுமான

செந்தூரே — திருச்செந்தூர்ப்பதியே

கோட்டு - தந்தமுடைய
களிறுதனக்கு - யானைமுகக் கணபதிக்கு
இளையான் – தம்பியானவனும்
கற்றுணர்ந்தோர் – பெரும் புலவர்
மெச்ச – போற்றிப் புகழ
வெளிறுதல்-பாடல் வெண்மை யாயிருத்தலை
நக்கு - இகழ்ந்து
இளையான் - சற்றும் மெலி விக்காதவனுமாகிய முருகன்
வேட்பு –விரும்பிய தலமாகும் 62

மேலோர் மரவுரியும், மெல்லியலார் கண் ணுருவும்,
சேலை யனைய திருச் செந்தூரே – ஞாலம்
முழுதுண்ட கோலனருள் மொய்குழலார் நெஞ்சில்
எழுதுண்ட கோலன் இடம்.

இ—ள்.

மேலோர் – துறவிகளது
மரவுரியும் – மரப்பட்டையின் உடை
சேலைஅனையது - துணியைப் போலுள்ளதும்
மெல்லியலார் – மாதர் களுடைய
கண்உருவும் – கண்களின் தோற்றம்
சேலைஅனையது - மீனை ஒத்துள்ளதுமாகிய

திருச்செந்தூரே - திருச்செந்திற்பதியே

ஞாலம்முழுது - உலகமெல்லா வற்றையும்
உண்ட – உண்டுமிழ்ந்த
கோலன் – விளையாட்டுடைய திருமால்
அருள் – கொடுத்தருளிய
மொய்குழலார் – இரண்டு தேவிமார்களது
நெஞ்சில் – உள்ளத்தில்
எழுதுண்ட - அமையப்பெற்ற
கோலன் - அழகுத் தெய்வ மான முருகனின்
இடம் - தலமாகும். 63

திக்கிலுள மன்னர்களும், தீயில்வரும் செந்தகரும்
செக்கரையொப் பானதிருச் செந்தூரே – அக்கமொரு
மூவாற்றுச் சேயன் முதல்வன் தலைசுமக்கும்
மாவாற்றுச் சேயன் மகிழ்வு.

இ—ள்.

திக்கில் உள — திசைதோறு முள்ள
மன்னர்களும் - பேரரசர்கள்
[1]செக்கரை — செக்குடையவர் களை
ஒப்பான - ஒத்திருப்பவராகி யதும்
தீயில் வரும் — யாகத்தீயில் தோன்றிய
செந்தகரும் - செந்நிறஆடும்
செக்கரை — செவ்வான நிறத்தை
ஒப்பான் - ஒத்திருப்பதா யுள்ளதும் ஆன

திருச்செந்தூரே — திருச்செந்திற்பதியே

அக்கம் - கண்கள்
[2]ஒருமூஆற்று - ஒப்பற்ற பதி னெட்டு என்று கொண்டுள்ள
சேயன் - செம்மேனியனும்
முதல்வன் — சிவபிரானுடைய
தலைசுமக்கும் — சிரசிற் கொண் டுள்ள
மாஆற்று — பெரிய ஆருகிய கங்கையின்
சேயன் - புதல்வனுக விளங்கு கின்றவனுமாகிய முருகன்
மகிழ்வு — மகிழ்வுடனிருக்கு மிடமாகும் 64

மல்லர்கொளும் கைக்கசைக்கும், மாமறையோர் வாய்மொழிக்
சில்லரையர் அஞ்சு திருச் செந்தூரே-வல்லவுணர் [கும்
தம்மைக் கெடுத்தான் தமியேனை ஆளவென
மும்மைக் கெடுத்தான் முகம்.

இ—ள்.

மல்லர்கொளும் — வீரர்கள் கொண்டுள்ள
மாமறையோர் — உயர்ந்த அந்தணர்களின்

---

[1]செக்கர் — அடாதன செய்பவரை, எள்ளில் எண்ணெயெடுப் பதுபோல, தண்டித்து வழிப்படுத்தல் மன்னரியல்பு, 'கொலையிற்கொடியாரை' என்ற குறட்படி கொள்க.

[2]முருகனுக்கு, கண்கள் பதினெட்டாகும். அருள்விழி பன்னி ரண்டு. அழித்தற்குரிய அக்கினிக்கண் ஆறு. இதை நீக்கி மற்றைய பன்னிரண்டை வழங்குவர்,
''அஷ்டாதச விலோசனம்'' ''ஷட்வந்த்ரம் திரிஷட் ஈக்ஷணம்'' என்றது வடமொழிக் காந்தம் — பதினெட்டென்றதைக் குறிப்பன ஷெி சுலோகம். விரிக்கிற் பெருகும்.

* சில் = தேர் உருளை, இங்கு தேரைக் குறித்து நின்றது.

கைகசைக்கும் – கைச்சாட்டை யடிக்கு
சில்லரையர்-கீழ்மக்களாவார்
அஞ்ச – மனம் அச்சமடை கின்றதும்
வாய்மொழிக்கு – ஆணைக்கு
* சில்அரையர் – தேர் மன்னர் களும்
அஞ்ச – கட்டுப்பட்டு நடக் கின்றதுமாகிய

திருச்செந்தூரே – செந்திலம்பதியே

வல்அவுணர் தம்மை – கொடிய அசுரர்களை
கெடுத்தான் - அழித்தருளியவ னும்
தமியேனை – அடியேனை
ஆளென – ஆண்டுகொள்ள
மும்மைக்கு – இறப்பு, நிகழ்வு, எதிர் என்ற முக்காலத்திலும்
எடுத்தான – பொறுப்பேற்ற வனுமாகிய முருகனின்
முகம் - முகம்போற் சிறந்த இடமாகும். 65

அங்காடு வாரிசையும், அம்புயக்காட் டோதியமும்
செங்காலங் காட்டுதிருச் செந்தூரே – சங்கையற
முன்பணிவார் பாலனத்தான், மூவுலகாள் இந்திரர்தம்
என்பணிவார் பாலன் இடம்.

இ—ள்,

அங்கு - சந்நிதியின்முன்
ஆடுவார்-நடம்புரிவார்களது
இசை - பாட்டும் கூத்தும்
* செம்காலம் – சிறந்த கால அளவைகளை
காட்டு – தெளிவு படுத்தக் கூடியதும்
அம்புயக்காட்டு – தாமரைப் பூக்களின் மத்தியிலுள்ள
ஓதிமமும் – அன்னப் பறவைகள்
செம்கால் - தமது சிவந்த கால்களின்
அம்காட்டு – அழகைப் புலப் படுத்துவதுமாகிய

திருச்செந்தூரே – செந்திலம்பதியே

சங்கையற – சந்தேகமின்றி
முன்பணிவார் – எதிர்வந்து வணங்குபவரது
இந்திரர்தம் – தேவர் தலைவனது

* காலம் - தாளப்பிரமாணம். சமம் – துரிதம் போல்வன.

பாலனத்தன் – காவலுக்குரியவனும் என்புஅணிவார் – எலும்பணிந்த சிவனது
மூவுலகு - மண்விண்பாதலம் என்ற மூன்றுவுலகையும் பாலன் - குமாரனுமாகிய முருகனின்
ஆள் – ஆட்சிபுரிகின்ற இடம்-சிறந்த தலமாகும் 66

பொங்கார்வ மன்னர்களும், போதமிகு மாதவரும்
செங்கோலங் கொண்டதிருச் செந்தூரே – கங்கை
தருமகனஞ் சேவலத்தன், தண்டமிழோர் காணும்
அருமகனஞ் சேவலத்தன் அன்பு.

இ--ள்.

பொங்கு ஆர்வ -குடிகளைப் பேணுவதில் மகிழ்வுற்ற போதம்மிகு - ஞானிகளாயுள்ள
மன்னர்களும் – அரசர்களிடம் மாதவரும் - தவசிகள்
செங்கோல் - நீதிமுறையின் செம்கோலம் – சிறந்த சமயச்சின்னத்தை
அம்கொண்ட - அமைப்பைப் பெற்றதும் கொண்ட - அணிந்து விளங்குவதுமாகிய

திருச்செந்தூரே – திருச்செந்தூர்ப்பதியே

கங்கைதரும் - கங்கையாற் பெற்ற அரும்அகன் – அரிய மனத் திருப்பவனும்
மகன் – திருக்குமாரனும் நம் - அடியவராகிய நம்மையெல்லாம்
அம்சேவல் – அழகிய சேவலைக் கொண்ட சேவல் – காத்தருள்கின்ற
அத்தன் - கையனும் அத்தன் - தலைவனுமாகிய பெருமானது
தண்தமிழோர் – குளிர்ந்த தமிழ்ப் புலவர்கள் அன்பு - அன்புக்குரிய இடமாகும். 67
காணும் – கண்டறியும்படி

மன்னுசந்த வெற்பருகில் மாந்தர் மனைச்சார்பில்
தென்னை வனம்பொலியும் செந்தூரே - முன்னைக்
கரியுரித்தா னுன்முகனைக் காய்ந்துரைத்தான், கற்றோர்
விரியுரித்தா னுன்முகனை வீடு.

இ—ள்.

மன்னு – நிலைபெறுயுள்ள
சந்தவெற்பு – சந்தனமலையின்
அருகில் – பக்கமாக
தென்னைவனம் - தென்னைமரச் சோலை
பொலியும் - மிகுதியாக விளங்குவதும்
மாந்தர் - மக்கள் வாழ்கின்ற
மனைச்சார்பில் – வீடுகளின் பக்கமாக
தென் – அழகு தருவதான
ஐவனம் – மருதோன்றி என்ற ஐவன மரம்
பொலியும் – பயனுடைய தாகத் திகழுவதுமாகிய

செந்தூரே – திருச்செந்தில் நகரமே

முன்னை – அந்நாளில்
கரிஉரித்தான்-யானையுரித்துப் போர்த்த சிவனது
ஆன்முகனை – கானமுக நந்தி தேவரை
காய்ந்து-கோபித்து (பிரமன் சிறைவிடமுடியாதென்று
உரைத்தான் - கடுமொழி கூறியவனும்
கற்றோர் – புலவர்கள்
விரி – விரிபடக் கூறும் புகழுக்கு
உரித்தான் – உரிமையுடைய வனும்
நான்முகன் – பிரமதேவனது
ஐ - குருவுமான முருகனின்
வீடு – வசிப்பிடமாகும். 68

**வள்ளியனை யார்தினையை மாமுனியன் னார்தமிழைத்**
**தெள்ளும் வளமைதிகழ் செந்தூரே - கள்ளொழுகும்**
**நீபத்தார்க் கந்தன் நெடுஞ்சூ ரனையகொடும்**
**கோபத்தார்க் கந்தன் குடி.**

இ—ள்.

வள்ளி அனையார் - வள்ளியொத்த குறமாதர்
தினையை – தினையை இடித்து மாவாக்கி
தெள்ளும் - தெள்ளிப்பக்குவ மாக்குகின்ற
வளமைதிகழ் - வளப்பமுடையதும்
மாமுனி – அகத்தியரை
அன்னார் – ஒத்த புலவர்கள் கூடி
தமிழை – தமிழ்மொழியின் சிறப்பை
தெள்ளும்-தெளிவு செய்கின்ற
வளமைதிகழ் - சபைகள் விளங்குகின்றதுமாகிய

செந்தூரே – திருச்செந்திற்பதியே

கள்ஒழுகும் – தேன்வடிகின்ற
நீபதார் – கடப்ப மாலே
யணிந்த
கந்தன் - கந்தக் கடவுளும்
நெடும் சூர் - பெரிய சூரனே
அனேய – ஒத்துள்ள
கொடும் கோபத்தார்க்கு –
கொடிய சினத்தருக்கு
அந்தன் - முடிவைச் செய்
பவனுமாகிய முருகனது
குடி – குடியிருப்புத் தல
மாகும் 69

தங்குமணற் குன்றினத்தில், தண்மலர்ப்பைஞ் சோலேகளில்
செங்குருந்தை மேவுதிருச் செந்தூரே — கங்குல்பகல்
அற்றசுகத் தத்தன் அருள்சேய், அரியதமிழ்ச்
சொற்றசுகத் தத்தன் தொடர்பு.

இ—ள்.

தங்கும் - பலரும் தங்கியிருக்கின்ற
மணற்குன்று - மணற்குவியலின்
இனத்தில் – வரிசைகளில்
*செம்குருந்தை - அழகிய குழந்தைகள்
மேவு – நிறைந்து விளேயாடுவதும்
தண்மலர் - குளிர்ந்த மலரையுடைய
பைஞ்சோலேகளில் - பசுமையான பொழில்களில்
செம் - செழுமையாக வளர்ந்துள்ள
குருந்தை - காட்டுநாரத்தை எலுமிச்சை மரம்
நீடும் – உயர்ந்து விளங்குவதுமாகிய

திருச்செந்தூரே — திருச்செந்தூர்த்தலமே

கங்குல் பகல் அற்ற - இரவு பகலில்லாத
சுகத்து–யோகாநுபவமுடைய
அத்தன் - பரமசிவன்
அருள்சேய் - உதவிய குமாரனும்
அரியதமிழ் – அருமையான சந்தப்பாடலே
சொற்ற - உலகுய்யப் பாடியுதவிய
சுகத்து – இளியான அருணகிரிநாதர் தங்கும்
அத்தன் - கையுடையவனுமாகிய முருகனின்
தொடர்பு – நீண்ட சம்பந்தமுள்ள தலமாகும் 70

*குருந்தை யென்பதற்கு – வயிரமெனப் பொருள்கொண்டு, மணலில் தங்கிய மக்களணிந்த வயிரப் பணிகளின் ஒளி நிறைந்திருக்குமென்பதுவும் அமையும்.

**கார்வேலே யின்கரையில் கட்கமலப் பூந்திரையில்**
**சீர்வெண் புளினமுறும் செந்தூரே - பார்வையினல்**
**வெம்மலங்க ளேக்கடவுள் வேதனையைத் தீர்த்தருள்வேற்**
**செம்மலங்க ளேக்கடவுள் சேர்வு.**

இ—ள்.

கார்வேலேயின் - கரியகடலின் கரையில் – ஓரங்களில்
சீர்வெண் – சிறந்த வெண் ணிறமான
புளினம்உறும் – மணல்மேடு களேக்கொண்டதும்
கள்கமல - தேனேயுடைய தாமரை
பூம்திரையின் - பூவையுடைய நீர்நிலேகளில்
சீர்வெண்–அழகிய வெண்மை நிறமுள்ள
புள்இனம் – அன்னம் - கொக்கு ஒத்த பறவைகள்
உறும் - சதா காலமும் வாழப் பெற்றதுமாகிய

செந்தூரே — திருச்செந்தூரே

பார்வையினல் – கண்ணேக் கத்திஞல்
வெம்மலங்களே – மும்மலங் களேயும்
கட – நீங்குமாறு செய்து
உள்வேதனையை - மனத் துயரங்களே
தீர்த்தருள் – மாறக் கருணே புரிகின்ற
வேற்செம்மல் – வேலாயுதப் பெருமானும்
அம்களே–அழகும் கெம்பீரமு முள்ள
கடவுள் – இறைவனுகிய முருகப்பிரானது
சேர்வு - சேர்க்கைக்குரிய இடமாகும் 71

**வித்தாய வைதிகரும், மேதகுசை வாகமரும்**
**சித்தாந்தத் திற்பழகு செந்தூரே - கொத்தாரும்**
**குல்லேயன்பன் ஞறுடம்பக் குண்டருக்கோர் கூற்றனென்றும்**
**நல்லேயன்,பன் ஞறுடம்பன் நாடு.**

இ—ள்.

வித்தாய - வேதமுதலாக வுள்ள
வைதிகரும் – தூய ஒழுக்க அந்தணரது
மேதகு - மேன்மைமிகுந்த
சைவ ஆகமரும் – சிவாகம நெறியோர்

சித்தம் – மனமானது
அந்தத்திற்பழகு – வேதமுடி
வான நிச்சயத்தில் ஈடு
பட்டதும்.
சித்தாந்தத்தில் – சித்தாந்த
நாற்கருத்தில்
பழகு - பயிற்சி பெற்றிருக்கப்
பெறுவதுமான

செந்தூரே — திருச்செந்தூர்ப்பதியே

கொத்து ஆரும் – கொத்தாக
மலர்கின்ற
குல்லையன் - வெட்சிமாலை
யுடையவனும்
பல்நாறு - ஊத்தை வாயும்
உடம்ப - ஊனுடலு முற்ற
சாரணர்
குண்டருக்கு – என்ற தீயோ
ருக்கு
ஓர்கூற்றன் – ஒப்பற்ற கால
னைப் போன்றவனும்
என்றும் – எப்போதும்
நல்ஐயன்–நன்மைபுரிபவனும்
♣ பன்னாறுஉடம்பன் - பதி
னறுவடிவுடையவனுமாகிய
முருகனின்
நாடு – பதியாகும். 72

இற்றவிடை யார்சடையில், ஈடில்பெரி யோர்புடையில்,
சிற்றரவம் காட்டுதிருச் செந்தூரே – குற்றம்
முழுதும் பொறுப்பன் எனை மூதடியார் தம்மோ(டு)
எழுதும் பொறுப்பன் இடம்.

இ—ள்.

இற்ற – மெலிவான
இடையார் – இடையுடைய
மாதரது
சடையில் – பின்னப்பட்ட
சடையானது
சிற்று அரவம் - சிறியநாகம்
படமெடுத்திருத்தல்
போன்ற அணி
காட்டு – சூடியிருத்தலை
விளக்குவதும்
ஈடில் – இணையிலாத
பெரியோர் – புலவர்,
தவசிகள் கூடிய இடத்தில்
சிற்று அரவம் – உரத்த
வார்த்தையின்றி மெதுவாகப்
பேசும் உரையாடல்
காட்டு – அடக்கத்தைப்
புலப்படுத்துகிறதுமாகிய

திருச்செந்தூரே — திருச்செந்திற்பதியே

---

♣ பதினறு உடம்பன் என்றது முருகன் திருவவதாரத்தில் பதினறு வகையுண்டென்பதாம்.

குற்றம் – அடியவரது பிழைகளை
முற்றும் – அடியோடு
பொறுப்பன் - கருணையால் மன்னிப்பவனும்
எனை – அடியேனை
மூதுஅடியார் – முதிர்ந்த பேரருளாளர்
தம்மோடு – கூட்டத்துடன்
எழுதும் – சேர்ந்தவனுகப் பதிவு செய்வதில்
பொறுப்பன் – கவனம் உடைவனுமாகிய முருகனின்
இடம் - இடமாகும்.

73

நங்கையர்தம் கொங்கைகளும் நாவலொடு நல்லாலும்
செங்காயம் கொண்ட திருச் செந்தூரே – வெங்கனல்வாய்த்
துத்தி யராவணியான் தொல்குரவன், தூயவிழாப்
பத்தி யராவணியான்* பற்று.

இ—ள்.

நங்கையர்தம் – மாதர்களுடைய
கொங்கைகளும் – தனங்களானவை
செம்காயம் – நகக்குறி, பற்குறிகளாலான சிறு புண்கள்
கொண்ட – பொருந்தியுள்ளதும்
நாவலொடு – நாவல் மரத்திலும்
நல்ஆலும் – விரிந்த ஆல மரத்திலும்
செம்காய்அம் – சிவந்த காய்களின் அழகு
கொண்டு – காணக்குலாவியதுமாகிய

திருச்செந்தூரே — திருச்செந்தூர்ப்பதியே

வெங்கனல் – கொடிய நெருப்பொத்த
வாய்த்துத்தி – விடமுள்ள வாயும் படப்புள்ளியுமுள்ள
தூயவிழா – புனிதத் திருநாட்களில்
பத்தியர் – அன்பர் போற்றுகின்ற

* மாசி மாதத்திலும், ஆவணி மாதத்திலும் பெருவிழா திருச்செந்தூரின் சிறப்பு. இரண்டும் ஒரே படித்தானவை. மாசியே முதன்மையாகும். அதை யுள்ளடக்கி, ஆசிரியர் ஆவணியிலும் அதுபோன்றுண்டு என்பதை எடுத்துக் காட்டினர்.

அரா அணியான் – நாகத்தை அணிந்த சிவனது தொல்குரவன் – பழைய குரு நாதனும் ஆவணியான் – ஆவணித் திருவிழாவையுமுடைய வனுமான முருகனது பற்று – விருப்புத் தலமாகும். 74

**அங்கோயிற் சந்நிதியில் ஆய்புலவர் வாய்க்கவியில்**
**சிங்கார மிஞ்சு திருச் செந்தூரே – செங்கேழ்**
**உடம்பா ரனகன்மின்னார் உள்ளம் கவரும்**
**கடம்பா ரனகன் களிப்பு.**

இ—ள்.

அம்கோயில் – அழகிய திருக் கோயிலில் சந்நிதியில் - பெருமான் முன்பாக சிங்காரம் - அலங்காரங் களானவை மிஞ்சு – மிக அதிகமாக இருக் கின்றதும் ஆய்புலவர் – ஆராய்ச்சி மிக்க கவிஞரது வாய்க்கவியில் - செய்யுள் களில் சிங்காரம் – இனிமையான கருத்துக்கள் மிஞ்சு-பொலிந்துள்ளதுமான

திருச்செந்தூரே - திருச்செந்திற்றலமே

செம்கேழ்-சிவந்த நிறமுள்ள உடம்புஆர் - திருமேனியைக் கொண்ட அனகன் – புண்ணியவடிவான வனும் மின்னார் உள்ளம் - மாதரது மனதை கவரும் – தன் வசப்படுத்தக் கூடிய கடம்புஆர - கடப்பமாலை புனைந்த நகன்-மலைநிலக்கடவுளுமாகிய முருகன் களிப்பு-மகிழும் தலமாகும் 75

**தூய்மைமிகு யோகியர்க்கும், துங்கமணி மேடைகட்கும்**
**சேய்மை வரும்பெருமைச் செந்தூரே – வாய்மையுறும்**
**அந்தரங்கத் தானையினன், ஆழிகலங் கப்புகும்சீர்க்**
**கந்தரங்கத் தானையினன் காப்பு.**

இ—ள்.

தூய்மைமிகு – மாசற்றுத் தெளிவுமிக்க
யோகியர்க்கும்-யோகாநுபவி கட்கும்
சேய்மை – குழந்தையுள்ள மானது
வரும்பெருமை – உண்டாகும் சிறப்புள்ளதும்
துங்கமணி-அழகிய மணிகள் உள்ள
மேடைகட்கு-மாடி வீடுகளில்
சேய்மை - செந்நிற வண்ணப் பூச்சுகள்
வரும்பெருமை – தீட்டப் பெற்ற சிறப்புள்ளதுமாகிய

செந்தூரே – திருச்செந்திலே

வாய்மையுறும் - சத்திய பத்தி யுள்ள
அந்தரங்க – மனப்பாவனை யுடைய
தானையினன் - அடியர் கூட்ட மிக்கவனும்
ஆழிகலங்க-கடல் குழம்பும்படி
புகும்சீர் - இறங்கும் சிறப்புடைய
கந்தரம் - கருமேகம்போன்று
கத்து – பிளிறுகின்ற
ஆனையினன் – யானைப்பரி யுடையவனுமான முருகனின்
காப்பு-காவல் தலமாகும். 76

**நீதிமன்னர் மாதர்களும் நீடொளிமுத் தின்குவையும்**
**சீதையினிற் கண்ட திருச் செந்தூரே – பேதைப்**
**பருவக் குறத்திகொண் கன் பச்சைமயிற் சாயல்**
**உருவக் குறத்தி கொண் கன் ஊர்.**

இ—ள்.

நீதிமன்னர் – செங்கோல் அரசர்களது
மாதர்களும் – மனைவிமார் களான மாதர்கள்
சீதையினில் - சீதாபிராட்டி ஒத்த
கண்ட – கற்பிற் சிறந்து வாழ்வதும்
நீடுஒளி – மிக்கபிரகாசமுள்ள
முத்தின்குவையும் – வெண் முத்துகளை
சீதையினில் - உழுகின்ற படைச்சால்களில்
கண்ட - காணத்தக்கதுமான

திருச்செந்தூரே — செந்தில்மாநகரமே

பேதைப்பருவ - இளம்பருவமுடைய
குறத்திகொண்கன் – வள்ளிநாயகனும்
பச்சைமயில் – பச்சைநிறமயிலே
சாயல் – ஒத்துள்ள அழகமைந்த
உருவ - திருமேனியமைந்த
குறுஅத்தி - சிறுயானை ஒத்த தெய்வானையின்
கொண்கன் – நாயகனுமான முருகனின்
ஊர் - ஒப்பற்ற இடமாகும். 79

முந்தா டவர்கரத்தில் மொய்குழலார் மைவிழியில்
சிந்தா மணிகுலவும் செந்தூரே – செந்தாள்
அனத்தேற்றத் தானத்தான் அத்தனுக்கன் றீந்த
மனத்தேற்றத் தானத்தான் வாழ்வு.

இ—ள்.

முந்து – கொடையில் யானே முதலாவேன் என்று முந்துகிற
ஆடவர் – ஆண்மக்களுடைய
கரத்தில் - கையிடத்தில்
சிந்தாமணி – சிந்தாமணி போன்ற ஈகைவளம்
குலவும் - சிறந்து விளங்குவதும்
மொய் - வண்டுகள் மொய்க்கின்ற
குழலார் – கூந்தல் மாதரது
மைவிழியில் - மைதீட்டிய கண்களில்
சிந்தாம்அணி - கடல் போன்ற அழகு
குலவும் - விசாலப்பட விளங்குவதுமாகிய

செந்தூரே – திருச்செந்தூரானது

செம்தாள் – சிவந்த கால்களையுடைய
அனத்து – அன்னப் பறவையில்
ஏற்றத்தான் - ஏறுகின்ற பிரமனுக்கும்
நத்தான் - சங்கணிந்த திருமாலுக்கும்
அத்தனுக்கு - தந்தையான சிவனுக்கும்
*அன்று ஈந்த - முன்னாள் உதவிய
மனத்து – உள்ளத்தின்
ஏற்ற – உயர்வையுடைய
தானத்தான் – உதாரகுணமுள்ள முருகனது
வாழ்வு – வசிப்புடைய தலமாகும். 78

* பிரமன் சிவன் இருவருக்குப் பிரணவ உபதேசமும், திருமாலுக்குச் சக்கரத்தை மீட்டு உதவியதும் கொள்ளலாம்.

பத்தியருட் காதலரும், பாரத்தோட் காமுகரும்
சித்திக்கை வேண்டுதிருச் செந்தூரே - அத்திமகள்
இன்பருளத் தாழ்வான் இருமூன் றெழுத்தைநம்பும்
அன்பருளத் தாழ்வான் அகம்.

இ—ள்.

பத்தி – உபாசனையுடைய
அருட்காதலரும் - திருவருள் வேட்கையினர்
சித்தி – அட்டமாசித்திகளை
கைவேண்டு – கைப்பெற விரும்பி வேண்டுவதும்
பாரத்தோள் – விரிவான தோள் வலிமையுள்ள
காமுகரும் – காம விருப்புடையவர்
சித்திக்கை – தம் எண்ணம் நிறைவேறுமாறு
வேண்டு - விண்ணப்பித்தற் கேற்றதுமான

திருச்செந்தூரே – சீரலைவாய்ப்பதியே

அத்திமகள் – தெய்வயானையம்மை
இன்புஅருள – ஊடல்மாறி மகிழும்படி
தாழ்வான் - பணியும் பெருமானும்
இருமூன்றெழுத்தை - ஆறெழுத்தை
நம்பும் - நம்பிச் செபிக்கும்
அன்பர் உளத்து - அடியவர் இதயத்தில்
ஆழ்வான் - சதா குடியிருப்பவனுமாகிய முருகனின்
அகம் – இடமாகும். 79

கூர்த்தஉணர் வார்தொழிலும், கூவுமடற் கோழிகளும்
சீர்த்தனகம் கொண்டதிருச் செந்தூரே – சூர்த்தவிழிப்
பேயுடனா டும்பரமன் பெற்றருகன் பேதையர்கண்
ஆயுடனா டும்பரமன் ஆட்சி.

இ—ள்.

கூர்த்தஉணர்வார் - நுண்ணறிவுள்ளவர்
தொழிலும் – செய்யும் தொழிலானது
கூவும் – அதிர்ந்து கூவுகின்ற
அடல்கோழிகளும் – வெற்றி மிக்க சேவல்களும்
சீர்த்த – சீர்த்த முன்போன்று கூர்மையான

சீர்த்து - சிறப்படைந்து
அனகம்கொண்ட - நல்வினை
யாகிப் பயன்தருவதும்
நகம்கொண்ட - கால்நக
முடையதுமாகிய
திருச்செந்தூரே - திருச்செந்தில் நகரமே

கூர்த்த - அச்சம் தரும்
வழிப்பேயுடன் - கண்களுள்ள
பேய்கள் சூழ
ஆடும்பரமன் - ஆடுகின்ற
சிவனின்
பெற்றகுகன் - மகனாகிய குகக்
கடவுளும்
பேதையர்கண் - சிறுபருவ
மாதரது கண்கள்
ஆயுடன் - தமது தாயுடன்
வந்து கண்டு
நாடும் - மகிழக் கூடிய
பரமன் - பரத்துவமுடைய
வனுமாகிய முருகனின்
ஆட்சி - ஆள்கையுடைய தல
மாகும். 80

நெய்வழிவே லன்பருள்ளும் நீடியவீ ழிக்கனியும்
செவ்வதரம் போன்றதிருச் செந்தூரே - வெவ்வரவப்
பாயான் தருமகளிர் பங்கமர்வான் என்றென்றும்
மாயான் தரும மனை.

இ—ள்.

நெய்வழி - தேன்வடிகின்ற
பூக்களுள்ள
வேல் அன்பர் - வேலாயுத
வழிபாடுடைய அன்பரது
உள்ளும் - மனமானது
செவ் - செந்நிறமாகிய
வதரம் போன்ற - இலந்தைக்
கனிபோன்றதும்
நீடிய - நீளமாகிய
வீழிக்கனியும் - வீழியின்
பழமும்
செவ் - செம்மையான
அதரம் போன்ற - மாதரது
வாயிதழ் ஒத்திருப்பதுமான
திருச்செந்தூரே - செந்தூர்ப்பதியே

வெவ் அரவ - கொடிய நாக
மாகிய
பாயான் - பாயுடைய திருமால்
தரும் மகளிர் - பெற்ற பெண்
களின்
பங்கு அமர்வான் - இருபுற
மிருக்கப்பெற்றவனும்
என்றென்றும் - எந்நாளினும்
மாயான் - அழிவற்றவனுமான
முருகனின்
தரும - அறநிலையமான
மனை - கோயிலாகும். 81

பொங்கர்த் துணர்க்கிளையும் போர்வீரர் நெஞ்சுரமும்
சிங்கத்தின் மேலாய செந்தூரே — சங்கத்
தலைமைக் கவிராயன் சத்திவேற் பூசை
நிலைமைக் கவிராயன் நேர்.

இ—ள்.

பொங்கர் - பூம்பொழிவில் உள்ள
துணர்க்கிளையும் - பூங்கொத்துக்களையுடைய கிளைகள்
சிங்கத்தின் — வானத்துள்ள சிங்கராசியினும்
மேல்ஆய - மேலே உயர்ந்து சென்றிருப்பதும்
போர்வீரர் — யுத்தவீரர்களுடைய
நெஞ்சுஉரமும் — மனவலிமை
சிங்கத்தின் — சிங்கத்தையும் விட
மேலாய - மேம்பட்டுக் காண்கின்றதுமாகிய

செந்தூரே — திருச்செந்தூரானது

சங்க - தமிழ்ச் சங்கத்தின்
தலைமை - முதல்வனாகிய
கவிராயன் - புலவனாகவுள்ள நக்கீரனின்
சத்திவேல்-ஞானசத்தி வேலாயுதத்தின்
பூசை - வழிபாட்டு
நிலைமைக்கு — மன விருப்பத்துக்கு
அவிர் — முன்னின்றருளவல்ல
ராயன் - தலைமைக் கடவுளாய் முருகன்
நேர் — விரும்பிக்கொண்ட இடமாகும் 82

நத்தியமெய்ப் பத்தர்களும், நாகரிகக் காமுகரும்
சித்தினிதா னங்கருது செந்தூரே — முத்தி
அளிக்கும் பதத்தான், அருகிருப்பார் கொங்கை
ஒளிக்கும் பதத்தான் உரித்து.

இ—ள்.

நத்திய - இறையருள் நாட்ட முற்ற
மெய்ப்பத்தர்களும் — உண்மையன்பர்கள்
சித்தி — திருவருட் சித்தியைப் பெற
நாகரிக — மேம்பாடுடைய
காமுகரும் - காமவிருப்புள்ளவரும்
சித்தினி — சித்தினியென்ற சாதிமாதரை நாடி
தானம் - அவரிருக்குமிடத்தை

நிதானம் – அமைதியுடன் விரும்பி
கருது – தவம் புரிவதை விளக்குவதும்
கருது – எண்ணியிருப்பதும் ஆன

செந்தூரே — செந்திலம்பதியே

மூத்திஅளிக்கும் - விடு பேற்றைத் தரவல்ல
பதத்தான் – திருவடியுடையவனும்
அருகிருப்பார் - உடனுள்ள வள்ளிதெய்வயானை என்பவரது
கொங்கை - தனங்களின்
ஒளி - அழகினையும்
கும்ப-குடம்போன்ற வடிவையும் நாடும்
தத்தான் - அணைப்புக்குரியவனுமாகிய முருகனின்
உரித்து – உரிமையுள்ள தலமாகும் 83

உள்ளரும்சூர் வல்லுடலை ஓர்வீரன் றன்னகத்தைச்
சின்னபின்ன மாக்குதிருச் செந்தூரே – பொன்னகரி
ஆளுமரி யான்மருகன் அன்பரல்லா வன்பருக்கு
நாளு மரியான் தலம்.

இ—ள்.

உள்ளரும்சூர் – அளவற்ற வலிமையுள்ள சூரனின்
வல் உடலை – வச்சிர மேனியை
சின்னபின்னமாக்கும் – பிளவுபடச் செய்ததும்
*ஓர் வீரன்தன் – வேற்று நாட்டு வீரனொருவனது
அகத்தை - ஆணவத்தை
சின்னபின்னம் –கெட்டழியும்படி
ஆக்கும் – செய்வித்ததுமான

செந்தூரே – திருச்செந்திலம்பதியே

* ஓர் வீரன்–வேற்று நாடும் வேற்றுச் சமயமுமுள்ள ஓரரசன் தமிழ்நாட்டுக்கு வந்து பல செல்வங்களையும் கைப்பற்றினன். அம்முறையில் செந்தூரிலுள்ள ஆறுமுகநயினர் என்ற சண்முகரையும் எடுத்துக் கடலேறிச் செல்லலானன், அக்கால், கப்பல் கடலில் அமிழலாயிற்று, அச்சமுற்ற அவன் பல பொருளைக் கடலில் வீசியும் பலனில்லை. இறுதியில் தக்கவரால் இதன் உண்மையறிந்து மூர்த்தியையும் கடலில் விட்டான். கப்பல் சமநிலை யெய்தியது. பின் அன்பர் மூலம் மூர்த்தி கொணரப் பட்டதென்பது வரலாறு.

பொன்நகரி-பொன் மயமான தேவ வுலகை
ஆளும் - ஆட்சி புரிகின்ற
அரியான் - தேவேந்திரனது
மருகன் - மருகனும்
அன்பர் அல்லா - உள்ளன் பமைந்தவ ரல்லாத
வன்பருக்கு - மூடர்களுக்கு
நாளும் - எக்காலத்தும்
அரியான் - காண அருமை யானவனுமாகிய முருகன்
நலம் - நலமுடனிருக்கு மிடமாம் 84

காரெருமை யின்குழுவும், காவிமல ருந்தடத்தில்
*சீரம் பெருக்குதிருச் செந்தூரே - நீரருவிச்
சந்த வரையான் தனதடியார் ஏட்டிலெனைப்
பித்த வரையான் பிடிப்பு.

இ—ள்,

கார் - கருப்பு நிறமான
எருமையின் குழுவும்-எருமைக் கூட்டம்
சீரம் - வெண்ணிறப் பாலை
பெருக்கு - மிகுதியாகச் சுரக்கின்றதும்
காவிமலரும் - நீலோற்பலப் பூக்கள் நிறைந்த
தடத்தில் - பொய்கையில்
சீர்அம் - சிறந்த அழகை
பெருக்கு - அதிகப்படச் செய்கின்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திற்றலமே

நீர்அருவி - நீர் வளமான அருவியுள்ள
சந்தவரையான் - சந்தனமலை யுடையவனும்
தனது அடியார் - தனது தொண்டர்களின்
ஏட்டில் - வரிசையமைந்த பட்டியலில்
எனை - அடியேனை
பித்த - பிறப்பட்டவனை
வரையான்-எழுத இசையாத வனுமான பெருமானுக்கு
பிடிப்பு-இசைவானதலமாகும் 85

*க்ஷீரம் என்ற வட சொல், சீரம் என மருவிற்று. க்ஷீரம்-பால்.
பித்த என்றதற்குத் தகுதியிற் பிறப்பட்டவன் எனக் கொள்க.

மாதவன்சங் காழியினை, மன்னு திருநீற்றைச்
சீதனமாக் கொண்டதிருச் செந்தூரே — வேதன்
கரங்குவிய மோதியவன், கண்ணுதல்பால் உள்ளம்
இரங்குவிய மோதியவன் ஈடு.

இ—ள்.

மாதவன் - திருமால்
சங்குஆழியினை — சங்கையும், கடலையும்
சீதனமா - மகட்குதவிய பொருளாக
கொண்ட - அமையப் பெற்றுள்ளதும்
மன்னு — பொருத்தமான
திருநீற்றை - இலைவிபூதியை
சீதனமா - சிறந்த செல்வமாக
கொண்ட — அடியார்களுக்கு உதவக்கொண்டுள்ளதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திற்றலமே

வேதன் — பிரமதேவன்
கரம்குவிய — கைகுவித்து வணங்குமாறு
மோதியவன் — சிரத்திற் குட்டியவனும்
கண்ணுதல்பால் — சிவபிரானிடம்
உள்ளம் — அவரது மனம்
இரங்கு - மகிழும்படி
இயம் - பிரணவப் பொருளை
ஓதியவன் - கூறியருளியவனுமான முருகனின்
ஈடு — ஈடுபாட்டுக்குரிய தலமாகும். 86

கூரார்வேல் வீரர்நெஞ்சில், கொந்துமலர்ப் பைம்பொழிவில்
சீராவி னங்குலவு செந்தூரே - காரானை
ஒன்றுரித்தான் மைந்தன், உயர்ந்தபுகழ்ச் சந்தனப்பொற்
குன்றுரித்தான் மைந்தன் குறிப்பு.

இ—ள்.

கூர்ஆர்வேல் — கூர்மையான வேல்களையுடைய
கொந்துமலர் - பூக்களைக் கொத்தாகவுள்ள

வள்ளி, தெய்வயானை என்ற இருவரும், திருமால் மகளிராவர். அவர் தனது மக்கட்குதவிய செல்வமாகவுள்ளது திருச்செந்திற் கடல் என்பது குறிப்பு. சங்கை மட்டும் குறித்திருத்தலால், கடலில் விளையும் முத்து பவளமாதியவுப கொள்க.

வீரர்நெஞ்சில் – வீரரது மார்பில்
சீரா - கவசமும் (அம்பெருமல் காப்பது)
இனம் - அது போன்றவையும்
குலவு - காணப் பெறுவதும்
பைம்பொழிலில் – மரச்சோலைகளில்
சீர்ஆவினம் – சிறந்த பசுக் கூட்டங்கள்
குலவு – இளைப்பாறி விளங்குகின்றதும் ஆகிய

செந்தூரே — திருச்செந்தூர்த்தலமே

கார்ஆனை - கரியநிற யானை
ஒன்று உரித்தான் - ஒன்றின் தோலை உரித்த பரமசிவனது
மைந்தன் - குமாரனுனவனும்
உயர்ந்தபுகழ் – மேலான சிறப்புள்ள
சந்தன - சந்தனக் கல்லான
பொற்குன்று–அழகிய மலைக்கு
உரித்தான் – உரிமையுடையவனுமாகிய
மைந்தன் – வீரமுடைய முருகனின்
குறிப்பு - இலட்சியதலமாகும்.

87

**நீலோத வாரியினும் நீடுதிருக் கோயிலினும்**
**சேலோத மிஞ்சுதிருச் செந்தூரே – சாலோகம்**
**ஆதியநா லுந்தருவான் ஆகாதென் பார்க்குமைப்பெண்**
**பாதியனு லுந்தருவான் பற்று.**

இ—ள்.

நீல - நீலநிறமுள்ளதும்
ஓதவாரியினும்–அலையுள்ளதுமான கடலில்
சேல்ஓதம் – மீன்களின் பெருக்கம்
மிஞ்சு - பொலிந்துள்ளதும்
நீடு – பெருமையிற் சிறந்த
கோயிலினும் - திருக்கோயிற் சந்நிதியில்
சேலோதம் - சந்தனத்தின் மிகுதி
மிஞ்சு – எல்லோரிடத்தும் காணப்பெறுவதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திலம்பதியே

சாலோகம்ஆதிய – சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியமென்ற
நாலும்–நான்கு பதவிகளையும்
தருவான்-கற்பகத்தையுடைய தேவலோக போகத்தையும்
பாதியன் – ஒருபாகமுள்ள சிவனது
ஆலும்-கல்லால் நிழலிருக்கும் போக அநுபவத்தையும்
தருவான் – கொடுத்தருள்பவனுகிய முருகனின்

ஆகாதுஎன்பார்க்கு-வேண்டா மௌன வெறுக்கு நிலையினருக்கு உமைப்பெண் – உமாதேவியின் பற்று – பற்றமைந்த தலமாகும். 88

மங்குல்நுகர் வாரிதியில், வார்திரைத்தெண் ணீர்த்தடத்தில்
செங்கழுநீர் சேர்ந்ததிருச் செந்தூரே – அங்கை
அயிலவ னத்தன் அளவிறந்த கோடி
சயிலவ னத்தன் தலம்.

இ—ள்,

மங்குல் நுகர் - மேகங்கள் நீர் முகக்கின்ற வாரிதியில் - கடலில் செம்-கோயிலைச் செம்மையாக கழுநீர் - கழுவி விட்ட புனித நீர் சேர்ந்த – ஆறு போல் கலக்கின்றதும் வார்திரை – நீண்ட அலையோடு கூடிய தெண்ணீர்த்தடத்தில் – தெளிந்த நீர்நிலைகளில் செங்கழு நீர் – செங்குவளை மலர்கள் சேர்ந்த – தாமரையுடன் பொலிந்து விளங்குவதுமான

திருச்செந்தூரே — திருச்செந்தூர்ப்பதியே

அம்கை–அழகிய கையிடத்தில் அயிலவன் – வேலைத் தரித்தவனும் அத்தன் – தலைமையான கடவுளும் அளவிறந்தகோடி – மிகப் பலவாகிய *சயிலவனத்தன்– மலைக்கூட்ட முடையவனுமான முருகனின் தலம் - சிறந்த தலமாகும் 89

மிக்க புகழ்ப்பெருக்கை வெண்கமல மின்னருளைத்
திக்கடங்க நல்குதிருச் செந்தூரே - மக்கள்
இனமு மறியுமுள்ளன், எவ்வகைய தேவர்
மனமு மறியுமுள்ளன் வாழ்வு.

---

*சயில – மலைகளையுடைய. வனத்தன் – அழகுப்பெருமான் எனவும் கொள்ளலாம்.

இ—ள்.

மிக்க – மேலாகிய
புகழ்ப்பெருக்கை – பெருமை மிகுதியை
திக்கு அடங்க - எட்டுத் திசையிலும் பரவ
நல்கு – அன்பர்கட்கு உதவுகின்றதும்
வெண்கமல – வெள்ளைத் தாமரையிலுள்ள
மின்அருளை-கலைமகளருளான புலமையை
திக்கு – ஆதரவாக
அடங்க – அமையும்படி
நல்கு – தொண்டருக்குக் கொடுத்தருளவல்லதுமாகிய

திருச்செந்தூரே — திருச்செந்திலம்பதியே

மக்கள் இனமும் – உலக மக்கள் கூட்டமும்
அறியும் உள்ளன்–அறியுமாறு அவருள்ளத்திருப்பவனும்
எவ்வகைய – (மேம்பட்டுள்ள) எவ்விதமான
தேவர்–தேவர்கள் பலருடைய
மனமும் – உள்ளமும்
மறியும் – ஆட்டு வாகனமும்
உள்ளன் – உடையவனுமான முருகன்
வாழ்வு – வசிப்புக்குரிய தலமாகும் 90

நம்போர்மை யாரருளாம், நாரியர்கண் டங்கமுகாம்
தெம்பூக மேவுதிருச் செந்தூரே - அம்போதி
மோது மதிலகத்தான், முத்தமிழோ ரைக்கலியாற்
காது மதிலகத்தான் கண்.

இ—ள்.

நம்பு ஓர்மையோர் – ஒருமைப்பட்டமனமுடையராய் நம்புமவர்க்கு
அருளாம் – திருவருளாலாகின்ற
தெம்பு - மனவலிமையும்
ஊகம் – தியான சிந்தனையும்
மேவு – பெற உதவுகின்றதும்
நாரியர் – மாதர்களுடைய
கண்டம் - கழுத்தானது
கமுகாம் - பாக்குமரமாகிய
தெம் - அழகும் பசுமையுமுள்ள
பூகம் - கமுகுமரத்தை ஒப்பாக
மேவு - விளங்கப் பெறுகின்றதுமான

திருச்செந்தூரே – திருச்செந்தில் நகரமே

அம்போதி – கடல்நீரால்
மோதும் – தாக்கப்பெற்ற
மதில் அகத்தான் - மதிலோ
டுள்ள திருக்கோயிலுடைய
வனும்
முத்தமிழோரை – புலவர்களை
கலியால்–வறுமைப் பிணியால்
காதும்அதில் - வருந்தச்செய்
வதில்
அகத்தான் – மனமுடையவனு
மான பெருமானது
கண் - கண்போன்ற இட
மாகும் 91

அன்பில்முதற் றோய்வாரும், ஆடகச்சீர் மேயோரும்
தென்புலமைக் கஞ்சுதிருச் செந்தூரே – பொன்புரையும்
தோகை மயிலான், தொழும்பர்களைத் துன்புறுத்து
மாகை மையிலான் வயின்.

இ—ள்.

அன்பில் – அன்புள்ளத்தில்
முதல்தோய்வாரும்-முதன்மை
யானவரும்
தென்புலமைக்கு – அழகிய
பெரும் புலவர்கட்கு
அஞ்ச– உள்ளச்சம் அடைபவ
ராகின்றதும்
ஆடகச்சீர்–பொருள் வளமை
மேயோரும் – மிகப்
பெற்றவர்கள்
தென்புல – தென்றிசையி
லுள்ள
மைக்கு – எமனது வாகன
மான எருமைக்கு
அஞ்சு – மனம் பயமடை
கின்றதுமான

திருச்செந்தூரே — திருச்செந்திலம்பதியே

பொன்புரையும் – தங்கம்
போன்ற
தோகைமயிலான் – தோகைச்
சிறப்புள்ள மயில் வாகன
முடையவனும்
தொழும்பர்களை – தொண்டர்
களை
துன்புறுத்துமா – வருந்தச்
செய்கின்ற
கைமை – வஞ்சகத்தன்மை
இலான் – இல்லாதவனுமான
முருகன்
வயின் – இடமாகும் 92

வாதப்போர் வீரர்மொய்ம்பும், வண்டமிழோர் மெய்ப்புகழும்
சேதப்படாததிருச் செந்தூரே - காதல்
இருவர் நடுவிருப்பான், ஏசறுஞ்சீர் வெண்ணீற்(று)
உருவர் நடுவிருப்பான் ஊர்.

இ — ள்.

வாதப்போர் - சமய வாதப் போர்
வீரர் – புரிபவரது பேச்சு வீரத்தின்
மொய்ம்பில் – வலிமையில் (தோள்களில்)
சேதுஅப்பு-சிவந்த இரத்தநீர்
அடாத - பொருந்தாததும்
வண்தமிழோர் - பெரும் புலவர்களுடைய
மெய்ப்புகழும்-உண்மையான சிறப்பும்
சேதம்-கேட்டினை
படாத - அடையப் பெருதுள்ளதுமான

திருச்செந்தூரே — திருச்செந்தூர்த்தலமே

காதல்இருவர் - அன்புக்குரிய மாதர் இருவர்கட்கு
நடு - மத்தியில் (பாரபட்சமின்றி)
இருப்பான் - இருக்கும் ஆவலுடையவனும்
ஏசுஅறும் - குற்றமற்ற
வெண்ணீற்று-திருநீறு பூசிய
உருவர் - உருவமுடைய அன்பரது
ஈடு – கூட்டத்தின் மத்தியில் (மனதில்)
இருப்பான் - நீங்காதிருப்பவனுமான முருகனின்
ஊர் – திருத்தலமாகும்

93

வாரம் பொலிகனவால், வைசாக நாள்விழவால்
சேரன்ப ராயதிருச் செந்தூரே - கோரத்
தகர்ப்பரியா னாடுமவை சாற்றுமவை தம்முள்
நிகர்ப்பரியா னாடும் நிலம்.

இ — ள்.

வாரம்பொலி-அன்பு நிறைந்த
கனவால் - கனவுக் காட்சியினால்
சேரன்-சேர நாட்டரசன்
பராய-வணங்கிய சிறப்பினதும்
வைசாகநாள் – விசாக நாளன்று நடக்கும்
விழவால் - திருவிழாச் சிறப்பினால்
சேர்அன்பர்ஆய – மக்களெல்லாம் அன்பராகக்கூடியதுமான

திருச்செந்தூரே – திருச்செந்தில்நகரமே

கோர - கொடுமை மிக்க
தகர்ப்பரியான்-ஆட்டுவாகனமுடையவனு
நாடும்அவை – நினைக்கக் கூடியதும்
சாற்றும்அவை – சொல்லத் தக்கதும்
தம்முள் – ஆகிய சிறப்புகளில்
நிகர்ப்புஅரியான்- இணையற்றவனுமானமுருகன்
நாடும் - தனக்கேற்றதாக எண்ணுகின்ற
நிலம் – இடமாகும்

94

தீந்தமிழ்ப்பாட் டுட்பதமும், தேன்முரல்பூஞ் சோலையினும்
சேந்து பொலியுமெழிற் செந்தூரே — காந்தள்மலர்க்
கைம்மறத்தி காதற் கடலான்முன் கச்சியிற்செய்
யும்மறத்தி காதல் உவப்பு.

இ—ள்,

தீம்தமிழ்ப்பாட்டுள்-இனிய இயல் இசைப்பாட்டுக் களுடன்
பதமும்-நாடகப் பாட்டுகளும்
சேந்து பொலியும்-ஒன்று சேரப்பெற்றிருப்பதான
எழில்-தமிழின் அழகு சேர்ந்ததும்

தேன்முரல்-வண்டுகள் ஒலிக்கின்ற
பூஞ்சோலையினும்-பூமரச் சோலைகளில்
சேந்து-அசோக மரங்களும்
பொலியும் எழில்-கூடிய வனப் புள்ளதும் ஆகிய

செந்தூரே—திருச்செந்தில்நகரே

காந்தள்-ஐந்து நீண்ட இதழுள்ள காந்தள் செடியின்
மலர்க்கை-பூவை ஒத்த விரல் களுடைய
மறத்தி-வள்ளி நாயகியின்
காதல் கடலான்-பேரன்புடையவனும்
முன்-அக்காலத்தில்

கச்சியில்-காஞ்சிபுரத்தில்
செய்யும் அறத்தி-முப்பத் திரண்டு அறமும் செய்த உமையவளது
காதல்-தாய்ப்பரிவுக்கு உரிய பெருமானுக்கு
உவப்பு-மகிழ்வு தரும் தலமாகும் 95

மற்றிணையில் சந்தவெற்பில், வாழும் மறுகருகில்
தெற்றி மலிந்ததிருச் செந்தூரே —கொற்றமிகு
வெம்போர்ப்படையன் தன் மெய்யடியார் தம்முள்வெறும்
தெம்போர்ப் படையன் செயல்.

இ—ள்.

மற்று இணையில்-வேறு ஒப்பு இல்லாத
சந்தவெற்பில் சந்தன மலையினிடமிருந்து
தெற்றி-தென்றற்காற்று
மலிந்த-மிகவும் வீசப் பெற்றதும்

வாழும்-மக்கள் கூடி வாழ்கின்ற
மறுகு அருகில்-வீதியின் பக்கம்
தெற்றி-சித்திர மாட கூடங்கள்
மலிந்த-அதிகம் விளங்குகின்றதுமான

திருச்செந்தூரே—திருச்செந்திற்பதியே

கொற்றி மகிழ்-துர்க்கை விரும்புகின்ற
வெம்போர்-கொடிய யுத்தத் துக்குரிய
படையான்-வீரர்களின் சேனை யுடையவனும்
மெய்யடியார் தம்முள்-உண் மையன்பரது கூட்டத் துள்ளே
வெறும்-போலியான
தெம்போர்-இறுமாப்புடைய தொண்டரை
படையன்-கூட்ட இசையாத வனுமான பெருமானுக்கு
செயல்-திருவருள் விளையாட் டமைந்த தலமாகும்.

96

நாசமற்ற மெய்யருளால், ஞானசத்தி வேற்படையால்
தேசம் விளக்குதிருச் செந்தூரே – பாசமலம்
தீர்க்குந் திருக்கண்ணன், செய்தநலத் தைச்சிறிதும்
பேர்க்குந் திருக்கண்ணன் பீடு.

இ – ள்.

நாசம் அற்ற - அழிவற்றுச் சிறந்த
மெய் அருளால் – உண்மை யருட் சிறப்பினால்
தேசம் – உலகமெல்லாம் அறியும்படி
விளக்கு - புகழை வெளிப் படுத்தக் கூடியதும்,
ஞானசத்தி - திருவருட் சத்தியான
வேற்படையால் - வேலா யுதத்தால்
தேசுஅம்-ஒளியையும் அறிவுக் கூர்மையையும்
விளக்கு – அன்பர் உணரச் செய்வதும் ஆகிய

திருச்செந்தூரே – திருச்செந்திலம்பதியே

பாசமலம் – ஆணவாதி மும் மலங்களையும்
தீர்க்கும் - அன்பரைச் சேரா மற் புரியும்
திருகண்ணன் - திருவருள் நோக்க முடையவனும்
செய்த நலத்தை – அடியவர்க் குச் செய்த திருவருளை
சிறிதும் – சிறிதளவும் கூட
பேர்க்கும் – மாற்றத்தக்க
திருக்கு - வஞ்சமான குற்றம்
அண்ணன் – சற்றும் பொருந் தாதவனுமாகிய பெருமானது
பீடு - பெருமைமிக்க தல மாகும் 97

யாவருந்தேர் வாவியொன்றும், ஏசறுஞ்சீர் மாதவரும்
தேவகங்கைக் கொண்டதிருச் செந்தூரே – பாவனைபோல்
வந்தடியா ருள்ளாவான் மாசித் திருநாளின்
சந்தடியா ருள்ளாவான் சார்பு.

இ—ள்.

யாவரும் – எத்தகையோரா ராலும்
கொண்ட – தன்னிடத்திற் கொண்டதும்
தேர் - தெரிந்து முழுகக்கூடிய
சீர்மாதவரும் – சிறந்த தவசிகளும்
வாவி ஒன்றும்-ஒப்பற்றகுளம் ஒன்றையும்
தேவு-தெய்வீகப் பெருமையை
தேவகங்கை - ஆகாய கங்கைக்கு ஒப்ப
அகம் – தங்கள் மனத்தில்
கொண்ட – சிந்திக்கக் கூடியதுமான

திருச்செந்தூரே – திருச்செந்திற்பதியே

பாவனைபோல் - அன்பர் எண்ணியபடி
வந்து - திருவுருக்கொண்டு தோன்றி
அடியார்உள் - அடியவர் மனத்தில்
ஆவான் - விளங்கியருள்பவனும்
மாசி – மாசிமாதத்தில் வரக் கூடிய
திருநாளின் - பெருவிழாக் காலத்தில் வருகின்ற
சந்தடியார் - பேரிரைச்சல் கட்கு உட்பட்டவர்கள்
உள்ளா நினைக்க முடியாத
வான் – பெருமையுள்ள வனுமான முருகக் கடவுள்
சார்பு – தங்கியுள்ள தலமாகும். 98

மாறுபடும் நோயினரும் மையல்மிகும் நெஞ்சினரும்
தேறுந் திருக்கோயிற் செந்தூரே – ஆறுமுகப்
பண்ணவனத் தந்தையண்ணப் பன்னிரண்டாக் கொண்டவனேர்
வண்ணவனத் தத்தையண்ணல் வாழ்வு.

இ—ள்.

மாறுபடும் – ஒன்றுக்கொன்று ஒவ்வாத
நோயினரும் – நோய்வாய்ப் பட்டவர்கள்
தேறும் – (நீரில் மூழ்கி திருநீறுபூசித் தெரிசித்து வந்த தொடர்புகளால்) தெளிவு பெறக் கூடியதும்
மையல் - உலக ஆசையில்
மிகும் – அதிகப்பட்ட
நெஞ்சினரும் - மனமுடையவர்களும்
தேறும் – அருளால் புனித மனம் பெறத்தக்கதுமாகிய

செந்தூரே - திருச்செந்திற்றலமே

98 மாசித் திருவிழா - திருச்செந்தூரில் நடைபெறும் மிகப் பெரிய திருவிழாவாகும்.

ஆறுமுக - ஆறுமுகங்களைக் கொண்ட
பண்ணவன் - கடவுளான வனும்
அத்தத்தை - திருக்கரங்களை (ஆறுமுகத்துக் கேற்ப)
அண்ண - பொருந்தும்படி
பன்னிரண்டா - பன்னிரண்டான எண்ணுடையதாக
கொண்டவன்-அமையக் கொண்டவனும்

ஓர் - ஒப்பற்ற
வண்ண - சந்தக்கவிபாட வல்ல
வன-அழகுமிக்கு (அருணகிரியான)
தத்தை - கிளியைக் கொண்டுள்ள
அண்ணல் - பெருமானுமாவ முருகன்
வாழ்வு - வாழ்தற்கேற்ற தலமாகும்
99

கட்டாம் மறைமொழிக்கும் கைகுவிக்குந் தொண்டருக்கும்
திட்டாந்தங் காட்டுதிருச் செந்தூரே – அட்டாங்க
யோகத் தருக்கும் உணர்வரிய வேற்குகன் தா
னுகத் தருக்கும் அரண்.

இ—ள்

கட்டு ஆம் - பலவரம்புகளைக் கொண்ட
மறைமொழிக்கும் – வேத விதி கட்கேற்ற
திட்ட அந்தம் - உறுதியாக முடிந்த வுண்மையை
காட்டு - அன்பர் அறியவிளக்குவதும்,

கைகுவிக்கும் - வணங்கி வழி படுகின்ற
தொண்டருக்கும் - அடியவர்களுக்கு
திட்டாந்தம் - வெளிப்படையானக் காட்சியை
காட்டு - புலப்படுத்தக்கூடியதும் ஆன

திருச்செந்தூரே - திருச்செந்தூர்த்தலமே

அட்டாங்க - எட்டுவகையான
யோகத்தருக்கும் -யோக அநுபவமுடையவருக்கும்
உணர்வரிய-அறிந்துகொள்ள முடியாத
வேற் குகன் - வேலாயுதக் கடவுள்

தானுக - தற்சுதந்தரமாக
தருக்கு - எழுச்சியுடன் தங்குதற்கான
அரண் - காப்புத் தலமாகும்,
100

'நாசிக்குட் ப்ராணவாயுவை ரேசித்தெட்டாத யோகிகள் நாடிற்றுக்காணொணாதென - நின்றநாதர்' என்பது திருப்புகழ்.

'காட்டிற் குலத்திபிரான்' என்ற கந்தலங்காரப் பாட்டிலும் யோகிகள் காணமுடியாதவன் என்றே அருணகிரிநாதர் கூறுவதறிக. அதைப் பின்பற்றியதே இக்கருத்தாகும். 'தானக' என்ற சிறப்பால் முருகன் தவப் பெருமை கூறினார்.

### நூற் பயன்

சிறுமயில் வாகனத்தான் செந்தூர்ச் சிலேடை வெண்பா
நூறு முணர்ந்து நுவல்வோரை - நாறுமலர்
வேதன் படையும்வெற்றி வேள்படையும் வெம்மறலி
தூதன் படையும் தொடா.

உ

குருவே துணை

# திருச்செந்தூர்ப் பிரபந்த வகை பதினாறனுள்

# 3வது - திரிபந்தாதி நூல்

பாட்டும் பொருளும்

---

## அணிந்துரை

### வெண்பா

**வரிவளைகள் ஆர்க்கும் அலைவாய்க்குமர வேட்காப்**
**திரிபுடைச்சொல் அந்தாதிச் சீர்நூல் — தெரிதகவோர்**
**வேலவன்றன் அன்பும் விரிபுலமைப் பேறுமெய்தி**
**மாலகன்ற நெஞ்சினரா வார்.**

"செந்தமிழ்க்கு வாய்த்த திருச்செந்திலம்பதி" என்று போற்றப் பெற்றது திருச்செந்தூர்த் தலமாகும். செந்திலம்பதி என்று ஊரின் பெயரைக் குறிப்பிட்டதனால் அங்கு திருக்கோயில் கொண்டுள்ள பெருமான் "செந்தமிழ்க்கே உரியவன் என்பது தானே புலனாகும். அத்தகைய சிறப்பமைந்த செந்திலாண்டவனுக்கு உவந்த இனிய தமிழில் இந்த அந்தாதியமைந்திருக்கிறது.

"திரிபு" என்ற சொல், மாறுபாடு என்ற பொருளையுடையது. எனவே, இந்நூலின் கவிகள் ஒவ்வொன்றும் முதற்சீர் இரண்டாம் சீர்வரை முதலெழுத்து மட்டும் மாறுபட்டு, அந்த இரண்டு சீர் வரை ஒரே வடிவில், எதுகை அமைந்து, பொருள் வேறுபட்டுள்ள தன்மையில் அமைந்திருக்கிறது என்பது தெரியலாம். மேலும், முதற் பாட்டின் முதற்சீர், நூலின் இறுதிப் பாண்டின் இறுதிச் சீராகவும், ஒவ்வொரு பாட்டின் கடைசிச் சீரே அடுத்தப் பாட்டுக்கு தொடக்கச் சொல்லாகவும் வருவதால், அந்தம் ஆதியாகவுடையது என்பதைக் கொண்டு அந்தாதி என்ற பெயரிட்டனர் பெரியோர், ஆதி அந்தம் என்பதை

நூல்முதலும் இறுதியுமான சீர்களிலும், அந்தம் ஆதி என்பதை ஒவ்வொரு பாட்டின் கடைசி - அடுத்த பாட்டின் முதல் வரும் சீர்களிலும் அமைவது ஆகுமென்பது தெளிவு. ஆதி அந்தம் என்பதை அந்தம் ஆதி என்றமைத்திருப்பது வியப்புக்குரியது.

இறைவன் தன்மைக்கு இலக்கணம் கூற வந்த பெரியோர்கள், உலக அழிவைப் புரியும் இறைவனே உற்பத்திக்கும் காரணமாவான் என்பதை விளக்கி "அந்தம் ஆதியென்மனார் புலவர்" என்று கூறிப் போந்தனர் (மெய் கண்ட தேவர் சிவஞான போத முதற் சூத்திரம்). அம்முறையிலேயே இதுவும் அமைந்திருக்கின்ற தென்க. முருகப் பெருமான் அருளுரைப் படி பதினாறு வகையான பனுவல்களைப் பாடத் தொடங்கிய வரிசையில் இந்நூலாசிரியரான வண்ணச்சரபம் அருண்மிகு தண்டபாணி சுவாமிகள், திரிபு என்ற இந்நூலே, மூன்று என்னும் சொல்லுக்கேற்ப மூன்றாவதாக அமைத்தனர் போலும் என்று கருத இடந்தருகின்றது. இது போலவே எண் வரிசைக் கேற்ற சிறப்பு பெரும்பாலும் ஒத்து, மற்ற நூலின் பெயரும் உள்ளது.

இது அன்றியும், தில்லைத் திருவாயிரம்-திருவரங்கத் திருவாயிரம் என்பவற்றிலும் திரிபுமஞ்சரி யமகமஞ்சரி, என்று ஒரு பகுதியாக திரிபு-யமகக் கவிகள் செய்துள்ளார். சிவஏக பாதத்தந்தாதி, அரிஏக பாதத்தந்தாதிகளை சைவ-வைணவ பரமாகப் பாடி, உரையும் வரைந்துள்ளனர். ஏகபாதம் என்பது, நான்கடியும் ஒரே வித நடையிலமைந்து, பொருள் வேறு விதமாய்க் கொள்ளக் கவித்துறைக்கவியில் இயற்றப் படுவதாகும். இவை சித்திர கவி என்ற பெயரில் அமைந்த அரிய நூல்களாகும். சிந்தனைக்கு ஆராய்வும், வரலாறு, சொல்லமைப்பு, சந்தியின் அமுத தெளிவு புலமைச் சிறப்பு முதலியவற்றைத் தருவதாகும்.

அல்லாமலும், "ஏகபாதத்து நீதிநூல்" என்ற பெயரில் நான்கடியும் ஒத்து, பொருளில் மாறுபட்டு, உறுதிகள் ஊட்டுதல் தவிர்க்கவியன்றிய சிறப்பினதாய், முப்பது பாட்டுடைய அந்தாதி,

முருகக் கடவுளைக் குறித்துப்பாடி,பதவுரை, கருத்து, ஞாயம், இலக்கணங்களை விளக்கி உரையும் சுவாமிகளே வரைந்துள்ள னர். இதை நிரோட்டம் என்பர் வட நூலார், தன்மைக்கேற்ற பெயரிலக்கணம் அமையா திருப்பதை உணர்ந்த இவர் 'இதழ் அகல்' எனப் பேரிட்டனர், ஒட்டம் - உதடு நீர் என்பது ஒட் டாதது என்பது கருத்து. ஒட்டம் என்ற பெயரில் உதடுகள் குவிதல் ஒட்டுதல் இருப்பதால், அதை மாற்றி ''இதழ் அகல்'' என்ற சிறப்புடன் இயல்பாயும் பொருள் எளிதில் அறியப்படுவ தாயும் உள்ளமையால், இவரது தமிழ்ப் புலமையையும் அபி மானத்தையும் அறியலாம்.

மேலும் நெல்லை, தில்லை, அரங்கம் என்ற தலக்குறிப்புடனும் பொதுவாயும் ஷ இதழகல் அந்தாதி பாடியுள்ளனர். குன்றக் குடி–நெல்லை-பழனி–சென்னை-இத்தலத்து முருகக் கடவுளுக்குக் கலம்பகமும் பழனி, தில்லை, தேவகோட்டை, சென்னை செந்தில் வள்ளி நாயகி,என்ற குறிப்புடன் பிள்ளைத்தமிழும் இயற்றியுள் ளனர். இந்நூல் ஆசிரிய சுவாமிகள், எதைப் பாடவேண்டு மானாலும், முதலில் திட்டமிட்டுச் சிந்தித்து, குறிப்பு வரைந்து கொண்டு பாடுவதில்லை. திருவருள் முன்னிலையில் தொடங்கு வர், குறித்தபடி பாடல்களமையும், எழுத்தாணி கொண்டு எழுதுவது இவர் செயல். அருணகிரிநாதர் கந்தரநுபூதி பாடியது போல, முருகதாசரநுபூதி என்ற பெயரில் அருளை விளக்கிக் கூறியுள்ளார்.

அதில் – திடமிகு சிவசெவ் வதிர்வேல் முருகோன்
இடமென் றுளிசென் மனமாம் வெளியில்
கடலின் திரையிற் கவிவந் தெழுதா(து)
உடனங் கழிவுற் றனபற் பலவே. என்று கூறுகின்றனர்.

எனவே, தன் மன வெளி முருகனுக்குரிய இடம். பாடல் வருவது கடலில் அலைகள் போல ஒன்றன்பின் ஒன்றாக என்று தெரிகிறது. பாடல் வரும் விரைவுக் கேற்ப எழுதி முடிவ தில்லை. வேறு ஒன்றாக அமையுமாம், வந்த பாட்டு மறையு மாம் இக்கருத்தை வேறு ஓரிடத்தில் ''தமிழ்க் கவிகள் உதிக்

கும் வம்பு சகிக்கிலேனே" என்றும், என் மனதில் ஒன்றெண்ண என்கை மற்றொரு வண்ணமெழுதிடும் இயற்கை என்கின்றனர். இந்நிலை நம்மனோரால் அளவிடற்கரியதாம்.

இலக்கணம் இலக்கியம் ஆகிய நூல்கள் மிகைபட இயற்றியது போன்று உபாசனையியல்பிலும்பேராற்றல் படைத்தவர். அது பற்றிய சாத்திர நூல்கள் தமது அநுபவ முறையைக் கலந்து பல இயற்றியுள்ளார். உலக நன்மை கருதியே, தொடக்க முதல் இறுதிவரை தவஞ் செய்து தன்னலம் பேணாது வாழ்ந்தவராவர் மக்கள் சிவகருணை கடவுட் பக்தியுடையராய் வாழ வேண்டுமென்ற பேராவலுடனிருந்தவர். முருகனது அருளாணைப்படி பாடிய இந்நூல், தேவத்தான வெளியீடாக வெளி வருகிறது.

பாடலின் பொருள் விளங்கும் பொருட்டு, பதவுரை விளக்கப்பட்டிருக்கிறது. புலவர்கள் அன்பர்கட்கு, மகிழ்வு தரும் அரிய நூலாகும்.

———

உ

முருகக் கடவுள் துணை

## திருச்செந்திற் பிரபந்தம் பதினுறில்

# 3-வது திரிபந்தாதி நூல்

———

## பாட்டும் பொருளும்

### காப்பு - கட்டளைக்கலித்துறை

நடக்குஞ் சரமச ரந்தரு வான்றலை நான்கிற்குட்டி
அடக்குஞ் சரவணன் செந்தூர்க் குகன்அரி யட்டவன்றன்
விடக்குஞ் சரமஞ்சும் வேலான் விரும்பும் விநாயகனும்
கடக்குஞ் சரத்தை வணங்குகின் றேன்தமிழ்க் காவலுக்கே.

### இ—ள்.

நடக்கும் - இயங்குதலையுடைய
சரம் - சரஉயிர் வகையையும்
அசரம் — அசைவில்லாத (மரம் செடி ஒத்த) அசர வுயிர்களையும்
தருவான் — வினைக்கேற்பப் படைக்கும் பிரமனது
தலை - சிரங்கள்
நான்கில் — நான்கினிடத்தும்
குட்டி — கையால் இடித்து
அடக்கும் - கருவத்தைக் கெடுத்த
சரவணன் - சரவணப் பெருமான்
செந்தூர் - திருச்செந்தூரையுடைய
குகன் - குகப்பெருமான்
அரி — நரசிங்கவடிவை
அட்டவன்றன் — அடக்கிய சிவபிரானது
விடக்கும் — விடம்போற் கொடுமையான
சரம் - பாசுபதக்கணையும்
அஞ்சும் — நாணத்தக்க
வேலான் - வேற்படையுடையவன்
விரும்பும் — விருப்புற்று ஆதரிக்கின்ற
விநாயகனும் — கணபதியாகிய
கட - மதநீரினைக் கொண்டுள்ள
குஞ்சரத்தை - யானைமுகக் கடவுளை
வணங்குகின்றேன் —போற்றிச் செய்கின்றேன்
தமிழ் - இந்தப் பனுவல்
காவலுக்கு — முட்டின்றி நிறைவேறத் துணை புரிவதற்காக என்பதாம்
எறு, எ - அசை.

திருவரு ளாதரச் செந்தூர்க் குமரன் திருந்துமனப்
பருவரு ளாதனை பெற்றது தோன்றும் படிசெயும்சேய்
கருவரு ளாதரத் தப்பதம் சூட்டிற் கருத்திரங்கா
இருவரு ளாதரந் தைப்பவம் சாவெனை யென்செயுமே.

இ—ள்

திருவருள் – கருணையினுக்கு
ஆதர – நிலைக்களமாயுள்ள
செந்தூர் – திருச்செந்தூரில் விளங்கும்
குமரன் – குமாரக் கடவுள்
திருந்தும் – செம்மைவாய்ந்த
மனப்படுவர் - உள்ளமுற்ற அடியவர்களது
உள் – கருத்தில்
ஆ - இடபக்கொடியை
தரன் - தரித்துள்ள சிவ பெருமான்
பெற்றது – தன்னால் அடைந்த பிரணவப்பொருளை
தோன்றும்படி - விளங்குமாறு
செயும்சேய் – உபதேசிக்கும் குருநாதன்
கரு – மீண்டும் பிறவிக்குப்படி
அருளாது – வினையை உதவாமல்
அரத்தப்பாதம் – சிவந்த திருவடிகளை
சூட்டில் – என் முடியில் தரித்தருள்வானாயில்
கருத்துஇரங்கா – மனதில் இரக்கமற்ற
இருவர் – பிரமனும் எமனும் என்ற இருவர்
உள் - எண்ணிச் செய்கின்ற
ஆது – குற்றம் பொருந்திய
அரந்தை - துன்பத்தையுதவும்
பவம் – பிறப்பும்
சாவு – இறப்புமாகிய இரண்டும்
எனை - அடியேனை
என்செய்யும் – என்னசெய்ய முடியும்
ஏ - று ஏ அசை. 1

என்னை யளித்துமுன் நின்றுபன் னீரிலை ஏய்ந்தபொடி
தன்னை யளித்துயர் தீர்தரப் பூசுந் தருணமெதோ
புன்னை யளித்துணர்க் காமிகும் செந்திற் புரவலன்என்(று)
அன்னை யளித்துள வேலொடு நின்ற அறுமுகனே.

இ—ள்.

என்னை – அடியேனை
அளித்து - காத்தருளி
முன்நின்று - காட்சிகொடுத்து
பன்னீர்இலை – பன்னீரிலையுள்ளாக
ஏய்ந்த – பொதிந்துவைத்த
அளி – வண்டுகள் மொய்க்கும்
துணர் - பூங்கொத்துக்களையுடைய
காமிகும் - சோலைகள் சூழ்ந்த
செந்திற்புரவலன் - திருச்செந்தூர்த் தலைவன்

பொடிதன்னை - திருநீற்றை
அளி (அள்ளி) - திருக்கரத்தா
வெடுத்து
துயர்தீர்தர - இடுக்கண்மாற
பூசம் – அணிவிக்கக்கூடிய
தாணம் – நல்லநாள்
எதோ – எதுவோ
புன்னை - புன்னை மரங்களில்
என்று – என்னுமாறு
அன்னை - தாயான உமாதேவி
அளித்துள – கொடுத்தருளிய
வேலோடு - வேலாயுதக்
கரத்துடன்
நின்ற - எழுந்தருளியுள்ள
அறுமுகனே – ஆறுமுகக்
கடவுளே 2

அறுகா லமையளிச் செங்கடம் பாரத்தெம் அண்ணல்.செந்தில்
மறுகா லமையதில் வேலேந்திப் பாங்கிரு மாதருடன்
உறுகா லம்மையல் அளித்தான் மதனன் உயர்பொதிகைச்
சிறுகா லமையன்ன தோளியைச் செய்துயர் செப்பரிதே

இ—ள்.

அறுகால் - ஆறுகால்கள்
அமை - பொருந்தப்பெற்ற
அளி – வண்டுகள் மொய்க்கும்
செங்கடம்பு – செங்கடப்பம்
பூவாலான
ஆரத்து – மாலையையணிந்த
எம்அண்ணல் - எமதுதலைவர்
செந்தில் – திருச்செந்தூரின்
மறுகு - வீதியிடத்து
ஆல - அசைந்தசைந்து
மைஅதில் - ஆட்டு
வாகனத்தில்
வேல்ஏந்தி – வேலாயுதந்
தாங்கி
பாங்கு – பக்கத்தில்
இருமாதருடன் - வள்ளி
தெய்வயானை சமேதராக
உறுகாலம் - பவனிவரும்
சமயம்
மையல் - பெருங்காதலை
அளித்தான் - உண்டாக்கி
விட்டான்
மதனன் – மன்மதனும்
உயர்பொதியை – உன்னத
மான பொதியையிற்
பிறந்த
சிறுகால் – தென்றற் காற்றும்
அமைஅன்ன – மூங்கிலை ஒத்த
தோளியை-தோளையுடைய
தலைவியை
செய்துயர் – படுத்தும்பாடு
செப்பரிது – சொல்லுமளவி
ல்லை (பெரிதேயாம்)
ஏ - று. ஏ. அசை. 3

செப்பரு மானன மாறுடை யாய்முதற் சீடனுமாய்
அப்பரு மானனம் பர்க்கினி யாளென் அயிலணிந்தாய்
மைப்பரு மானன வள்ளிபங் கா!செந்தில் வாழ்த்துகிலாத்
தப்பரு மானன ஆடுனைக் காணத் தவிர்ப்பர்கொலே.

இ—ள்.

செப்பஅரும் - சொல்லுதற்கு அரிய சிறப்புள்ள
ஆனனம் - திருமுகங்கள்
ஆறுடையாய் – ஆறு உடைவரே
முதல் - தலைமையான
சீடனும் ஆய் – மாணுக்கனுகவும்
அப்பரும்ஆன – தந்தையாகவுமுள்ள
நம்பர்க்கு - சிவபிரானுக்கு
இனியாள் என்-விருப்பமுடைய சத்தி என்னும்
அயில் - வேலாயுதத்தை
அணிந்தாய்- தரித்துள்ளவரே
மை - கரியநிறமுள்ள
பரு - பெரிதான
மான் அனை - மானைப்போன்ற
வள்ளி - வள்ளிநாயகியின்
பங்கா - கணவரே
செந்தில் - திருச்செந்தூரை
வாழ்த்துகிலா - போற்றுத
தப்பரும் – தவறு உடையவரும்கூட
மா - மாண்புள்ள
நனவூடு - சாக்கிரத்தில்
உனை - தேவரீரை
காண – தரிசிக்கும்படி
தவிர்ப்பர்கொல் - முயல்வார்களா?
ஏ - று – ஏஅசை 4

கொல்லா விரதத் துடனேநின் மெய்த்தொண்டு கொண்டவரும்
நல்லா விரத மெனக்கொன் றுண் பார்க்கஞ்ச ஞாயம் உண்டே
பல்லா விரதந் தவிராது செந்திற் பதியில்உற்ருய்
பொல்லா விரதக் கொடுஞ்சூரன் மாயப் பொருதவனே

இ—ள்.

கொல்லா - பிறஉயிர்களைக் கொல்லாத
விரதத்துடனே - நியமத்துடன்
நின் - தேவரீர்மாட்டு
மெய்த்தொண்டு - உண்மையான சேவையை
கொண்டவரும் – ஏற்ற அடியவரும்
நல் ஆ – மேலான பசுக்களை
இரதம் என - இனிமையானவை யென்று
கொன்று - கொலை செய்து
பல் ஆ - பலவாகிய
விரதம் – வாக்குறுதிகள்
தவிராது - மாருதபடி (நிலைக்குமாறு
செந்திற்பதியில் – திருச்செந்தூரிடத்தில்
உற்ருய் – எழுந்தருளியிருப்பவரே
பொல்லா - குற்றம் நிறைந்து
இரத - மாமரவுருவம் கொண்ட
கொடும் - தீயவனுன
சூரன் - சூரபத்மன்

உண்பார்க்கு இன்னும்கொடி யவர்க்கு
அஞ்ச - அடங்கிவாழ
ஞாயம் உண்டோ - முறை உள்ளதா?
மாய - அழியும்படி
பொருதவனே - போர் செய்த பெருமானே
5

பொருந்தடங் கண்ணியர் மால்கொண்டு வாடுமென் புந்தியினும்
இருந்தடங் கண்ணிய மத்தாற் றவிர்த்தருள் ஈகுவையோ
பெருந்தடங் கண்ணியஞ் சேர்செந்தி லாய்!மதுப் பெய்துவேண்டாம்
விருந்தடங் கண்ணிய யனந்தமுள் ளாய்வெற்றி வேலவனே.

இ—ள்.

பொரும் - போர் விளைக்கும்
தடம் - விசாலமான
கண்ணியர் - விழியினரான மாதர்களது
மால்கொண் - மோகம் கொண்டு
வாடும் - வருந்துகின்ற
என் - அடியேனது
புந்தியினும் - அறிவிலும்
இருந்து-தேவரீர் எழுந்தருளி
அடங்கள் - புலன்களின் பிடிவாதங்களை
நியமத்தால் - விரத ஒழுக்கத்தால்
தவிர்த்து - நீக்கி
அருள்-திருவருட் செல்வத்தை
ஈகுவையோ - கொடுத்தருள்வீரோ
பெரும் - விசாலமான
தடம் - நீர்நிலைகளினுடைய
கண்ணியம் பெருமைகள்
சேர் - சேரப்பெற்ற
செந்திலாய் - திருச்செந்தூர்ப் பெருமானே
மது - தேனை
பெய்து - சொரிவதனால்
வண்டுஆம் - வண்டுகளாகிய
விருந்து - விருந்தாளிகளை
அடு - நெருங்கிவரச்செய்யும்
அம் - அழகிய
கண்ணி - மலர்மாலைகளை
அனந்தம் உள்ளாய் - நிறைய உடையவரே
வெற்றி - வீரமிகுந்த
வேலவனே - வேலாயுதக் கடவுளே
6

வேலவ னந்தத்தை யூதியொன் றுரை வெருட்டுதிரு
மாலவ னந்தத்தைப் போற்றிரு மாதர் மணுளஒப்பில்
சீலவ னந்தத்தை வாவிகள் சூழ்திருச் செந்திலெந்தாய்
சாலவ னந்தத்தைச் சொன்னுய்எ(ன்) நெஞ்சம் தவிக்கின்றதே

இ—ள்

வேலவ – வேலாயுதப்பெருமானே
நந்தத்தை – சங்கை
ஊதி – முழக்கிய ஓசையால்
ஒன்னரை - பகைவர்களை
வெருட்டு – அச்சமடையச் செய்த
திருமாலவன் – விட்டுணு மூர்த்தி
நந்து - விரும்புகின்ற
அத்தை - செல்வத்துக்குரிய திருமகள்
போற்று-பாராட்டி வளர்த்த
இருமாதர் - வள்ளி தெய்வ யானை யென்பவரது
மணாள – கணவரே
ஒப்பு இல் – சமானமில்லாத
சீல – பெருமையுடையவரே!
வனம் - சோலைகளும்
தத்தை - கிளிகளும்
வாவிகள் – நீர்நிலைகளும்
சூழ் – நெருங்கியுள்ள
செந்தில் – திருச்செந்தூரை யுடைய
எந்தாய் – எமது தந்தையே
சால - சிறந்த
அநந்தத்தை - அருள்மொழிகள் பலவற்றைச்
சொன்னாய் - கூறியருளினீர்
என் - அடியேனது
நெஞ்சம் - மனமானது
தவிக்கின்றது - அதற்கேற்ற விளக்கம் இல்லாமல் ஏங்குகின்றது
எ.று. ஏ. அசை 7

சலியா தவஞ்செயும் பொல்லேன் அனைவரும் சாற்றுபுகழ்
மலியா தவனும் தொழுந்திருச் செந்திலில் வந்தடைந்தேன்
மெலியா தவந்தந்து காத்தருள் வாய்!வெற்றி வேல்புனைதோள்
வலியா தவள நிறச்சேவ லா!மயில் வாகனனே.

இ—ள்.

சலியாது சோர்வில்லாதபடி
அவம்செயும் – தீமைகளைச் செய்கின்ற
பொல்லேன் – அடியேன்
அனைவரும் – நல்லோர் பலரும்
சாற்று – கூறுகின்ற
புகழ்மலி – சிறப்பு மிகவும் உடைய
ஆதவனும் – சூரியமூர்த்தியும்
தொழும் – வணங்குகின்ற
திருச்செந்திலில் – திருச் செந்திற்பதியில்
வந்து அடைந்தேன் – வந்து உமதிடம் தஞ்சமானேன்
மெலியா – தளர்ச்சியில்லாமல்
தவம் – தவம் புரிகின்ற வலிமையை
தந்து – அருள் செய்து
காத்துஅருள்வாய் – காக்க வேண்டும்
வெற்றிவேல் – வீரவேலாயுதத்தை
புனை – அணிந்திருக்கின்ற
தோள் - தோள்களையுடைய
வலியா - வல்லவரே!
தவளநிற-வெண்ணிறமுடைய
சேவலா- சேவற்கொடியினரே
மயில் - மயிற் பறவையை
வாகனனே – வாகனமாகக் கொண்டவரே
எ. று. 8

வாகன மாக மயிலூர்செந் தூரன் மறமடந்தை
மோகன மாகத் தொருமாது கொண்கன் முழுமையுமாம்
ஏகன மாகந்த என்பார்க் கெளியன் இனியதமிழ்த்
தாகன மாகஞ் சிதைத்தார் தவப்பயன் தந்தவனே.

இ—ள்.

வாகனம்ஆக-ஊர்தியாக
மயில்ஊர் மயிலைச் செலுத்துகின்ற
செந்தூரன்-திருச்செந்தூர் இறைவன். முருகன்
மறமடந்தை-வேடமகளான வள்ளிநாயகியின்பால்
மோகன்-விருப்பமுடையவன்
அம்-அழகிய
மாகத்து-விண்ணுலகத்தாரது
ஒருமாது-ஒப்பற்ற தெய்வயானையின்
கொண்கன்-கணவரானவன்
முழுமையும் ஆம்-எல்லாவற்றிலும் நிறைந்த பரிபூரணமான
ஏகன்-தனிப்பரம்பொருள்

நமாகந்த-நமோகந்த (கந்தநம)
என்பார்க்கு-என்ற மந்திரத்தைச் செபிக்கின்றவர்கட்கு
எளியன்-சுலபமாக அருள் புரிபவர்
இனியதமிழ்-இனிமையான தமிழ்மொழியின்பால்
தாகன்-மிகுந்த விருப்பமுள்ளவர்
நம-நமனது
ஆகம்-உடலை
சிதைத்தார்-உதைத்த பரமன்
தவப்பயன்-செய்த தவத்தின் பயனாக
தந்தவன்-அவர் ஈன்றருளிய பெருமான் ஆவன் என்க
ஏ, ற-ஏ, அசை 9

தந்தத் தனத்தத்த என்றுடு வார்புடை தங்கிநிற்பாள்
சந்தத் தனத்தத்தம் வைத்தமு துண்டு தருக்கும்பிரான்
அந்தத் தனத்தத்த ரெய்தாத் திருச்செந்தி லம்பதியில்
சொந்தத் தனத்தத்த மீவேனென் றென்றெடு சொற்றதுண்டே

இ—ள்

தந்தத்தனத்தத்தஎன்று - தந்தத்தனத்தத்த என்ற தாளவரிசையில்

அந்தத்து-இறக்கும்சமயத்தில்
அனத்தத்தர் -வன்செயல் புரியும் எம தூதர்கள்

ஆடுவார் – திருநடம்புரிகின்ற சிவபெருமானின்
புடைதங்கி – (இடது) பக்கத்தில் நிலைத்து
நிற்பாள்-இருக்கும் உமையவளின்
சந்த – அழகிய
தனத்து – கொங்கையிடத்து
அத்தம் வைத்து - தமதுதிருக் கரத்தை வைத்து
அமுது – பாலாகிய அமுதை
உண்டு – அருந்தி
தருக்கும் – பகிழ்கின்ற
பிரான் – குமாரக்கடவுள்
எய்தா - அடைய முடியாத
திரு – தெய்வீகச் சிறப்புடைய
செந்திலம்பதியில் – திருச்செந்தூரின்
சொந்தத்தன் – உரிமைக் கடவுள் அவன்
அத்தத்து – என்கைவசமாக
அத்தம்-பொருட்செல்வத்தை
ஈவேன் என்று - கொடுத்து உதவுவேனா என்பதாக
என்னோடு . அடியேனிடம்
சொற்றது – பலதடவையும் கூறியது
உண்டு – உள்ளதாம். 10

சொற்ற விதங்களை யந்தான்கொல் என்று துடிக்குமென்னைப்
பற்ற விதங்களைச் செய்யாமல் நைவுறப் பார்த்தனையோ
இற்ற விதங்களை கொன்றையன் மைந்த எழிற்செந்திலாய்
முற்ற விதங்களைக் காட்டுநல் வேள்விக்கோர் முன்னவனே.

இ—ள்.

சொற்ற-நேவரீர் என்பாற் கூறிய
விதங்கள்–அருளுரையின் வகைகள்
ஐயம்தான்கொல் - சந்தேகந் தானோ
என்று - என்றவாறு
துடிக்கும் - வருந்துகின்ற
என்னை - அடியேனை
பற்ற - அடையும்படி
இதங்களை – நன்மைகளை
செய்யாமல் - புரிந்தருளாமல்
நைவுற – மேலும் தளர்வுறும் படி
பார்த்தனையே-செய்கின்றீரே
இற்றவிது - தேய்ந்த சந்திரன் (பிறைமதி)
அம்களை-அழகிய அறுகு
கொன்றையன்-கொன்றை இலைகளை அணிந்த சிவபிரானது
மைந்த-திருக்குமாரரே
எழில் – அழகுபெற்ற
செந்திலாய் – திருச்செந்திலாண்டவரே
முற்றுஅவி - நலம் நிறைந்த அவிசுகள்
தங்களை – தங்கள் புனிதத் தன்மையை
காட்டும் - விளங்கச் செய்கின்ற
நல்வேள்விக்கு – தூய யாகத்துக்கு
ஓர் முன்னவனே-ஒப்பற்ற முதல்வரான தெய்வமே
11

முன்னம் புகன்ற மொழிநாடி வாடுமென் மொய்ம்பில்மதன்
தன்னம் புகன்ற விடலாகு மோ.நின்கைத் தத்தை சொன்ன
சொன்னம் புகன்றனை யேனல்ல வாமலத் தோலுடம்பில்
இன்னம் புகன்றமிழ்ச் செந்தூர நீவந் திலங்கில்நன்றே.

இ—ள்

முன்னம் - இதற்கு முன் பல தடவையில்
புகன்ற – என்னிடம் கூறிய
மொழி - வாக்குறுதிகளின்
நாடி பலனை எதிர்பார்த்து
வாடுமென் - தளர்கின்ற அடியேனது
மொய்ம்பில்-மன வலிமையில்
மதன் தன் - மன்மதனுடைய
அம்பு கணைகள் வந்து
கன்றவிடல்-வருந்தச்செய்வது
ஆகுமோ–முறையாகுமோ?
நின் -தேவரீரது
கைத்தத்தை-கையில் உள்ள கிளியான அருணகிரிநாதர்
சொன்னசொல்-கூறிய கவிப் பொருளை
நம்பு–நம்பி வணங்கியுள்ள
கன்று அனையேன் - குழந்தை ஒப்பானவன்
அல்லவா–(சிறு பருவத்தேன்) அன்றோ அடியேன்
மல, தோல் உடம்பில்- தோல் மூடிய மல உடம்பில்
இன்னம்- இனிமேலும்
புகன் - செல்லமாட்டேன்
தமிழ் - தமிழ் முழக்கம் மிகுந்த
செந்தூர–திருச்செந்திற் பெருமானே
நீ-தேவரீர்
வந்து–அடியேன் முன் தோன்றி
இலங்கில் – காட்சியருளினுல்
நன்று - மிகுந்த நன்மை யுண்டாகும்
எ. று ஏ. அசை 12

இலங்கைத் தலைவனைச் செற்றோன் மருகன் எழிற்செந்திலான்
நலங்கைத் தலைவனை யாதருள் வான்மறை நான்குரைத்துத்
துலங்கைத் தலைவனை மார்போன் சுதலருள் தோய்முனிவன்
வலங்கைத் தலைவனை வாழ்வொருக் காற்செயும் மாடம்ஒத்தே.

இ—ள்

இலங்கை - இலங்காபுரிக்கு
தலைவனை-அரசனுயிருந்த இராவணனை
செற்றோன்-வெற்றி கொண்ட திருமாலின்
மருகன் மருகனுயிருப்பவன்
துலங்கு-விளங்குகின்ற
ஐ – தலைவனான பிரமர்களது
தலை – கபாலங்களை
வனை-மாலையாகத் தரித்த
மார்போன்-மார்பினரான சிவபிரானுடைய

எழில்- அழகு வாய்ந்த
செந்திலான்-செந்திற்பதி யுடையவன்
நலம் – இகலோக சுகங்களை
கைத்து – வெறுத்து (துறவடைந்து)
அலைவன் – அலைகின்ற அடியேனை
நையாது - துன்புறுவண்ணம்
அருள்வான்-காத்தருள்பவன்
மறை நான்கு – நால் வேதங்களையும்
உரைத்து – சொல்லி
சுதன் - திருக்குமாரன்
அருள்தோய்-அவனது திருவருளைப் பெற்ற
முனிவன் – அகத்தியர்
வலம்கைத்து - வலது உள்ளங் கையளவில்
அலை – கடல் நீரை
வளை வாழ்வு – அடக்கும் பேற்றினை
ஒருக்கால்-முன்னொரு சமயம்
மாடம்ஒத்து – உளுந்தளவில் குறைய
செயும் - செய்தருளினார்
ஏ. று. ஏ, அசை. 13

மாட மருவு மறுகாரும் செந்தில் வரதன், வண்டு
கூட மருவுங் குளிர்தேனும் கொண்ட குராமுடித்தோன்,
வேட மருவு முருவுமென் றோர்ந்துளம்; வெற்றிடத்தை
நாட மருவுதெண் ணீர்மலை யாவையும் நண்ணுவமே.

இ—ள்

மாடம் மருவும்-மேல் மாடி வீடுகள் நிறைந்த
மறுகு ஆரும்-வீதிகளுடைய
செந்தில்.திருச்செந்தூரினைக் கொண்ட
வரதன்-முருகப்பெருமான்,
வண்டு - தேனீக்கள்
கூட-கூடிக்குலாவும்படி
மருவும் - வாசனையும்
குளிர்தேனும் – இனியதேனும்
கொண்ட – சேர்ந்துள்ள
குரா–குராமலராலான மாலைகளை
முடித்தோன் - புனைந்துள்ள கடவுள்.
வேடம் – அப்பெருமானது வடிவம்
அருவும் – அருவமாயும் (இயல்பாய்)
உருவும்.உருவமாயும் (பாவனைப்படி)
என்று-அமைந்தது என்பதாக
ஓர்ந்துளம்- அறிந்துள்ளோம்
வெற்றிடத்தை-வெறும் வெளியை (அருவப் பொருளை)
நாடம் -- எண்ண மாட்டோம்
அருவு- அருவிகளைக்கொண்ட
தெண்ணீர்மலை-நீர்வளமான மலைகள்
யாவையும்-பலவற்றினும் சென்று
நண்ணுவம் – முருகன் திருவுருவை வணங்குவோம்
ஏ. று. ஏ. அசை 14

நண்ணாரைக் கொன்ற வடிவேற் குகன்,செந்தில் நாயகன்முன்
வெண்ணாரைக் கொன்றரும் வீடீந்த நம்பன் விழிப்புதல்வன்,
பண்ணாரைக் கொன்றமிழ்ப் பாமாலை யாசை படைத்திருந்தும்
அண்ணாரைக் கொன்றற்ற அச்சமுற் றேன்வெள்ளை ஆரணங்கே.

இ—ள்

நண்ணாரை - பகையான அசுரரை
கொன்ற - வென்றருளிய
வடிவேல் - கூரிய வேலாயுதம் தரித்த
குகன் - குகப்பெருமாள்,
செந்தில் - திருச்செந்தூரை யுடைய
நாயகன் - தலைமைக் கடவுள்
முன் - முன்னொரு காலத்தில்
வெள் - வெள்ளை நிறமான
நாரைக்கு - நாரைப்பறவைக்கு
ஒன்றரும் - அடைவதற்கு அரிய
வீடு ஈந்த - முத்தியைக் கொடுத்த
நம்பன் - சிவபிரானது
விழி - நெற்றிக்கண்ணிற் பிறந்த
புதல்வன் - குமாரக் கடவுள்
பண்ஆர் - பண் அமைதி யமைந்து
ஐ - சொல் அழகும்
கொன் - புதுமையும் கூடிய
தமிழ்ப்பாமாலை - தமிழ்ப் பனுவல்கட்கு
ஆசை - பெருவிருப்பம்
படைத்திருந்தும் - கொண் டிருந்தும் கூட
அண்ணார் - அவரை அடைந்து பாடாதவருக்கு வருகின்ற
ஐக்கு - சிலேத்தும வாதைக்கு
ஒன்று - ஒருபற்றுக்கோடும்
அற்ற - இல்லாதது போன்ற
அச்சம் - பெரும் பயத்தை
உற்றேன் - அடைந்தேன்
வெள்ளை - வெண்ணிற மேனியுள்ள
ஆரணங்கே - கலைமகளே

15

ஆரணங் கண்டறி யாப்புகழ் சேர்செந்தி லாதிபனை
பூரணங் கண்டறி போல்வாருக் கெய்தும் பொருளெனநன்(கு)
ஓரணங் கண்டறி வெய்தினல் லால்மலர் ஓதியர்செவ்
ஏரணங் கண்டறி நெஞ்சேயென் மோகம் இறுவதின்றே.

இ—ன்

ஆரணம் - வேதங்களாலும்
கண்டு அறியா - அறிந்து கொள்ளமுடியாத
புகழ்சேர் - மகிமை சேர்ந்துள்ள
நன்குஓர் - தெளிவுடன் ஆராய்ந்தறியும்
அணங்குஅண்டு - ஆசை பொருந்திய
அறிவு - பேரறிவினை

செந்தில் – திருச்செந்தூரின்
ஆதியனை - தலைமையான கடவுளை
பூரணம் கண் – எங்கும் நிறைந்த பரத்தினிடம்
தறி - கிளைகள் வெட்டப் அடிமரத்தை
போல்வாருக்கு – ஒப்ப பந்தம்விட்ட யோகி களுக்கு
எய்தும் – எளிதில் கிடைக்கத் தக்க
பொருள்என-தெய்வ மென்பதாக
எய்தினல்லால் -பெற்றாலன்றி
மலர் – பூக்களையணிந்த
ஓதியர் – கூந்தல் மாதர்களின்
செவ் – செம்மையான
ஏர் – அழகினையுடைய
அணம் – வாய்ப்புறத்தை
கண்டுஅறி - பார்த்து மகிழ் கின்ற
நெஞ்சே - மனமே
என் - என்னுடைய
மோகம் – பெருமானைக்காண வேண்டியபேரவா
இறுவது – முடிவுறுதல்
இன்று - இல்லையாம். 16

இறுகுந் தனத்திரு மங்கைதன் பங்கன் இகலவரைச்
செறுகுந் தனத்திய வாறருள் சேய்திருச் செந்திலிடத்(து)
உறுகுந் தனத்திருப் பூணல் ஒருகவிக் கோகைநல்கல்
மறுகுந் தனத்தீச்சை கொள்பா வலரும் வழுத்தவென்றே.

இ—ள்.

இறுகும் - இறுக்கமான
தனத்து-கொங்கைகளுடைய
இருமங்கைதன் – வள்ளி தெய்வயானை என்பவரின்
பங்கன் – பங்கினையுடையவன்
இகலவரை – பகைவர்களை
செறு – போரில் வெற்றி கொள்ளும்
குந்தன் - வேற்படையுடை யவன்
தத்தியவாறு-விரும்பியபடி
குந்தன – ரத்தினங்கள் பதித்த
திருப்பூணல் – அழகிய பதக்கத்தால்
*ஒருகவிக்கு - ஒப்பற்ற பகழிக்கூத்தருக்கு உதவி
ஓகை – மகிழ்வினை
நல்கல் – உண்டாக்கிய அருட்செயலானது
மறுகும் - வறுமையால் மனம் வாடி

---

*திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் நூலை, முருகன் அருளுரைப்படி பாடி, அரங்கேற்றத்திற்கு தடை நேர்ந்தபோது வருந்திய பகழிக்கூத்தர் கனவில் முருகன், தனது பதக்கம் ஒன்றை ஈடாக உதவியும் பின் அரங் கேற்றிய சபையில் மீண்டும் பெற்று அணிவிக்கவும் நேர்ந்த செய்தி.

அருள் - அடியவருக்கருளும்
சேய் செவ்வேட்பரமன்
திரு - அழகுமிக்க
செந்திலிடத்து – திருச்செந்தூரில்
உறு - தனக்கென ஏற்பட்டுள்ள
தனத்து - பொருளின்மீது
இச்சைகொள் - ஆவல்கொண்ட
பாவலரும் – புலவர்களும்
வழுத்த - அதுபோற்றன்னைப் பாடவேண்டும்
என்று – என்ற காரணம் பற்றியேடாம்
எ. று. ஏ. அசை 17

வழுவின் றியதமிழ்ப் பாமாலை யாவும் வனையுமன்பர்
குழுவின் றியமனும் அஞ்சுறக் கூடிடக் கூட்டியருள்
முழுவின் றியன்பருள் செந்தூர னேயென் முருகையனே
கழுவின் றியக்கமுன் சாரணர்க் கீந்து களித்தவனே.

இ-ள்

வழுஇன்றிய - குற்றமில்லாத
தமிழ் - தமிழ்மொழியாலான
பாமாலை - பிரபந்தங்கள்
யாவும் – எல்லாவற்றையும்
வனையும்-பாடும் வல்லமையுற்ற
அன்பர்-புலமையன்பரது
குழுவு-கூட்டத்தில்
இன்று-இந்நேரத்தில்
யமனும்-நமனும்
அஞ்சுற – பயமடையுமாறு
கூடிட – அடியேன் சேரும்படி
கூட்டிஅருள்–கூடச் செய்வீராக
முழுவின்-நிறைவுபெற்ற
தி–அறிவும்
அன்பும் – பக்தியும்
அருள் - தந்தருள்கின்ற
செந்தூரானே - திருச்செந்திற் கடவுளே
என்–அடியேனுக்குரித்தான
முருகையனே–முருகப் பெருமானே
கழுவின்-கழுமரத்திலேறும்
தியக்கம் – சஞ்சலத்தை
முன் – அந்த நாளில்
சாரணர்க்கு – சமணர்கட்கு
ஈந்து - ஞானசம்பந்தராக வந்து உதவி
களித்தவனே–மகிழ்ந்த பெருமானே

களிக்கும்பல் வண்டு முரல்கின்ற செம்பொற் கடம்பணிந்தோன்
ஒளிக்கும்ப யோனிக்கோர் உண்மைசொன் னோன்செந்தி லூர்க்குமரன்
விளிக்கும் பகுவமுற் றேனவன் சந்நிதி மேவிநின்றேன்
வளிக்கும் பனிமல னுங்கொண்டு வாற்கஞ்சல் மாறிலனே.

இ—ள்.

களிக்கும் - தேனுண்டு மகிழ்கின்ற
பல்வண்டு - பலதேனீக்கள்
முரல்கின்ற - இசை பாடுவதான
செம்பொன்-சிவந்த அழகுள்ள
கடம்பு - கடம்பமாலை
அணிந்தோன்-அணிந்தவனும்
ஒளி - ஞானப்பிரகாசமிக்க
கும்பயோனிக்கு - அகத்தியருக்கு
ஓர் உண்மை - ஒப்பற்ற மெய்ப்பொருளை
சொன்னோன் - உபதேசித்தவனுமாகிய
செந்தில்—திருச்செந்தூரென்ற
ஊர்க்குமரன் - பதித்தலைவன்
விளிக்கும் - அழைத்தருளத் தக்க
பருவம் - பக்குவ நிலையை
உற்றேன் - அடியேன் பெற்றிருக்கிறேன்
அவன் - அப்பெருமானுடைய
சந்நிதி - திருமுன்பாக
மேவி நின்றேன் - சென்று வணங்கினேன்
வல் இக்கும் - எனினும் வலிய கரும்பாகிய வில்லும்
பனி மலரும் - பாணமாகிய குளிர்ந்த மலர்களும்
கொண்டுளாற்கு - கைக்கொண்ட மன்மதனுக்கு
அஞ்சல் - பயப்படுவதை
மாறிலன் - நீங்கப் பெற்றேனில்லை
ஏ. று. ஏ. அசை. 19

மாறிய மானத் தகைசார்ந்து வாடும் மனத்தில்உன்னைத்
தேறிய மானம் வருவதென் றோதிருச் செந்திலுக்குள்
வீறிய மானனம் ஆறுகொண் டாய்!தினம் வேண்டுதுதி
கூறிய மானருள் மங்கைசொல் லாமெனக் கொண்டருளே.

இ—ள்.

மாறிய - அன்புக்குமாறுபட்ட
மானத்தகை - ஆணவத் தன்மை
சார்ந்து - சேரப்பெற்றதனால்
வாடும் - வருந்துகின்ற
மனத்தில் - என் உள்ளத்தி
உன்னை - தேவரீரது பெருமையை
தேறிய-அறிந்து கொள்ளும்
மானம்-பெருமையானநேசம்
ஆனனம் - திருமுகங்கள்
ஆறுகொண்டாய்-ஆறினை உடையவரே
தினம் - நாடோறும்
வேண்டுதுதி-விருப்பமுள்ள துதியாக
கூறிய - அடியேன் பாடியவைகளை
மான் அருள்-மானாற் பெறப்பட்ட

வருவது-ஏற்படப்பெறுவது மங்கை-வள்ளிநாயகியின்
என்றோ -எந்த நாளிலோ சொல்லாமென - இனிய
திருச்செந்திலுக்குள்-திருச் மொழிபோல்
செந்தூரில் கொண்டருள் - ஏற்றருள்
விறு-வெற்றிகரமான வீராக
இபம் புகழுடன் விளங்கும் ஏ. று. ஏ. அசை 20

தொண்டலைத் தண்டருட் காவல னுமெனக் கொள்குமரன்
தண்டலைத் தண்டருச் செந்தூர் விசாகன் றனைக்குறிக்கும்
தொண்டலைத் தண்டருங் கூற்றுவன் கையிற் றொலைக்குங்கொலோ
மண்டலைத் தண்டரு மாய்த்தமிழ் தேர்கவு மாரரையே.

இ—ள்.

தொண்டல்ஐ- மேகங்கட்குத் தலைவனான இந்திரனை
தொண்டு- வழிபாடானது அலைத்து - பல வகையில்
து - நிறைந்து விளங்கும் உழலச் செய்து
அண்டருள் - தேவர் அண்டு - நெருங்குகின்ற
கூட்டத்துக்கு அருங் கூற்றுவன் - கொடிய
காவலனும் ஏன - அரசனாக எமனது
வாழும்படி கையில் - கைவசப்படும்படி
கொள் -(அசுரரைக்கொன்று) தொலைக்கும்கொல் - சேர்த்து
ஆட்கொண்ட விடுமோ
குமரன் - குமாரக்கடவுளை மண்தலை - பூவுலகில்
தண்டலை - சோலைகள் தண்டரும் ஆய் - வணக்கம்
தண்தரு - குளிர்ச்சியை புரிபவர்களும்
உதவுகின்ற தமிழ் - தமிழ்ப் புலமையில்
செந்தூர் - திருச்செந்தூரை தேர் - தேர்ச்சிபெற்றுள்ளவர்
புடைய களுமாகிய
விசாகன்றனை- விசாகப் கவுமாரரை - கௌமார
பெருமானை நெறிச்சீலர்களை
குறிக்கும் - சிறப்பாகப்
போற்றுகின்ற ஏ. று. ஏ. அசை.

விசாகன்றனைக் குறிக்கும் தொண்டு, கூற்றுவன் கையில் தொலைக்குமோ? அப்படித் தொலைக்காது எனக்கொள்க. 21

மாரன் றனக்குவட் டுச்சேனை யோடு மயங்குமெழில்
வீரன் றனக்குப்பை சேர்மறு கார்செந்தில் வித்தகன்,நற்
கீரன் றனக்குமுன் நின்றபி ரான்முன்பு கெஞ்சிவருந்
தீரன் றனக்குரி யாள்வரை பாழ்விதிக் கென்செய்வதே.

இ-ள்

மாரன்-மன்மதன்
தன-கொங்கைகளான
குவட்டு-மலைகளைக்கொண்ட
சேனையோடு-தன் மாதர்
படையுடன்
மயங்கும்-கண்டு மயங்கத்தக்க
எழில்-அழகுமிகுந்த
வீரன்.வெற்றிப்பெருமானே
தன-செல்வங்கள்
குப்பைசேர்-குவியலாகவுள்ள
மறுகுஆர்-வீதிச்சிறப்பமைந்த
செந்தில்-திருச்செந்தூரில்
விளங்கும்
வித்தகன்-ஞானவடிவானவனே
நற்கிரன்றனக்கு-நற்கீரரான
பெரும் புலவருக்கு
முன்நின்ற-கற் குகையிற்
காட்சி உதவிய
பிரான்-முருகக் கடவுள்
முன்பு-அவன் சந்நிதிமுன்
சென்று
கெஞ்சி-குறைகளைக் கூறி
நயந்து
வருந்தீர்-வருந்தாதவர்களே
அன்று-முந்நாளில்
அனக்கு-அன்னவாகனத்துக்கு
உரியான்-உரியவனை
பிரமதேவன்
வரை-உமது தலையிலெழுதிய
பாழ்-தீமையாயுள்ள
விதிக்கு-ஊழின்கொடுமைக்கு
என்செய்வது-உம்மால் யாது
செய்யமுடியும்?
எ. று. ஏ. அசை. 22

என்று மருணசை யாலுனை நாடி யிளைக்குமென்முன்
நின்று மருணவை தீர்த்தருள் வாய்!செந்தில் நேயமிகத்
துன்று மருண கிரிநாதன் செஞ்சொற் றுதிக்குவந்தாய்
இன்று மருண நிறவேல்கொண் டாடும் எழிற்கந்தனே.

இ—ள்.

என்றும்-எப்போதும்
அருள்நசையால்-திருவருள்
விருப்பால்
உனைநாடி-தேவரீரைக் கருதி
இளைக்கும்-வருந்துகின்ற
என்முன்-அடியேன் எதிரில்
நின்று-எழுந்தருளிவந்து
மருள்-அஞ்ஞானமாகிய
நவை-குற்றத்தை
தீர்த்து-நீக்கி
அருணகிரிநாதன்-அருணகிரி
நாத சுவாமிகளது
செஞ்சொல்-செம்மையான
சொற்சிறப்புள்ள
துதிக்கு-தமிழ்ப்பாடல்கட்கு
உவந்தாய்-திருவுள்ளம்
மகிழ்ந்தாய்
இன்றும்-இக்காலத்தும்
அருணநிற-சூரியன்போற்
சிவந்த

அருள்வாய்-ஆண்டு கொள்வாயாக
செந்தில்-திருச்செந்தூரில்
நேயம்-அபிமானம்
மிகத்துன்றும்-மிகவும் கொண்டுள்ள
வேல்-வேலாயுதத்தை
கொண்டு-திருத்தோளில் அணிந்து
ஆடும்-அருளாடல்புரியும்
எழிற்கந்தனே-அழகிய கந்தக்கடவுளே 23

கந்த மலரவன் குட்டுண்டு வாடுமக் காலம்நின்முன்
வந்த மலரவன் கேட்டுக் களித்தமெய்ம் மந்திரத்தை
எந்த மலர வனியைவிட் டோட இயம்புவையோ
நந்த மலர வதிதீர் பொழிற்செந்தில் நாயகனே

இ—ள்

கந்த-மணமுள்ள
மலரவன்-பூவிலிருக்கும் பிரமன்
குட்டுண்டு-தலையில் குட்டுப் பட்டு
வாடும்-வருந்திய
அக்காலம்-அந்தநாளில்
நின்முன்-உனது திரு முன்பாக
வந்து-எழுந்தருளி
அமலர்-நிமலரான சிவபிரான்
அவண்-அவ்விடத்தில்
கேட்டு-உபதேசம் பெற்று
களித்த-மகிழ்ந்த
மெய்-உண்மையான
மந்திரத்தை-பிரணவப் பொருளை
எம்தம்-அடியேங்களது
அலர்-பழிபாவங்கள்
அவனியை-உலகத்தை
விட்டோட-விட்டு நீங்கும்படி
இயம்புவையோ-உபதேசம் செய்வீரோ
நந்து-தன்பாலடைகின்ற
அமலர் மும்மலம் நீக்கிய அடியார்களின்
அவதி-துன்பங்களை
தீர்-நீக்கியருள்கின்ற
பொழில்-சோலைச் சிறப்பமைந்த
செந்தில்-திருச்செந்தூரின்
நாயகனே-தலைவனே 24

நாயக னாகிப் பலகோடி தேவர் நடுவிருக்கும்
நீயக னிலத் தென்னை முன் ஆண்கை நிசமல்லவேல்
தூயக னில்நிற் போலவந் தாரெவர் சொற்றருள்வாய்
சேயக னுடுங் கழலாய்செந் தூர்க்குரு தேசிகனே

இ—ள்

நாயகனுகி-தலைமைப் பொருளாகி
பலகோடி-எண்ணிறந்த
தேவர்-தெய்வங்களுக்கு
நடுஇருக்கும்- நடுநாயகமா யுள்ள
நீ-தேவரீர்
அகல்-விசாலமான
நானிலத்து-உலகத்தில்
என்னை அடியேனை
முன்-அந்நாளில்
ஆள்கை-தடுத்தாண் டருளியது
நிசமல்லவேல்-உண்மை யல்ல என்றுல்
நாயகனுவில்-எனது மன வெளியில்
நின்போல-உம்மைப்போன்று
வந்தார்-சாட்சிதந்தவர்
எவர்-யாராயிருக்கலாம்?
சொற்றருள்வாய்-விளக்கி யருள்வீராக
சேய-உயரமான
கல்-பல மலைகளையும்
நாடும் வசிப்பிடமாக விரும்பும்
கழலாய்-திருவடிகளை யுடையவனே
செந்தூர்-திருச்செந்தூரின்
குருதேசிகனே-குமரகுருபரக் கடவுளே 25

சிகரிக் குமரங்கு தோருடு வாய்!அலைச் சீர்கொள்செந்தில்
நகரிக் குமர குருபர னேஅன்பர் நன்மனத்தைத்
தகரிக் குமரவொப் பாமலர் வாளியும் தாங்குநன்பாற்
பகரிக் குமர விழியுங் குலாவு படையுமுண்டே

இ—ள்.

சிகரிக்கும்-மலையுச்சியாகிய
அரங்குதோறும்-மன்றங் களிலெல்லாம்
ஆடுவாய்-திருநடம் புரிபவரே
அலை-அலைகளோடு கூடிய கடலின்
சீர்கொள்-சிறப்பமைந்த
செந்தில் திருச்செந்தூ ரென்கின்ற
நகரி-பெரும்பதியில் எழுந் தருளியுள்ள
தகர்-சிதைக்கின்ற
இக்கும்-கரும்பாகிய வில்லும்
அரவுஒப்பதாம்-பாம்பைப் போன்ற
மலர்வாளியும்-மலர் அம்புகளும்
தாங்குநன்பால்-கொண்டுள்ள மன்மதனிடத்து
பாரிக்கும்-கூறும் இனிய சொற்களையும்
அர-அரத்தை ஒத்த
விழியும்-கண்களையுங்கொண்டு
குலாவு-விளங்குகின்ற

குமரகுருபரனே-குமர குருபரக்கடவுளே
அன்பர்-அடியவர்களது
நன்மனத்தை-நல்ல உள்ளத்தை
படையும்-மாதர்சேனையும்
உண்டு-இருக்கின்றது
எ. று. ஏ அசை
எனவே, அவை தாங்காமல் காக்கவேண்டும் என்பது கருத்து 26

படையனந் தப்புனை கையான் மயூரப் பரியிவர்ச்சி
உடையனந் தப்புனை கைதொறும் சேர்செந்தி லூரன்,வெற்றிக்
குடையனந் தப்புனை கையுரைக் கேற்ற குகன்இகல்முற்
றடையனந் தம்புனை கைதீர்த்தன் போரை யளிப்பவனே

இ—ள்.

படை-ஆயுதங்களை
அனந்தம்-பலவாக
புனை-அணிந்துள்ள
கையான்-திருக்கரங்களையுடையவன்
மயூரப்பரி-மயில் வாகனத்தில்
இவர்ச்சி-ஏறிவரும் உலாவை
உடையன்-உடைய பெருமான்
நந்தம்-சங்குகள்
புனை-புன்னை மரங்களின்
கைதொறும்-இடங்களில்
சேர்-இருக்கப்பெற்ற
செந்திலூரன்-திருச்செந்தூரின் தலைவன்
வெற்றி-சிறப்பான
குடையன்-குடைக்கூத்துடையவன்
அந்தம்-அழகுபட
புனை-புனைந்து கூறப்படும்
கையுரைக்கு-புகழுரைகளுக்கு
ஏற்ற-தகுதி வாய்ந்த
குகன்-முருகப்பெருமான்
இகல்-பகைகள்
முற்றடைய-முழுதும் அழியுமாறு
நம்தம்-அடியேங்களுடைய
புன்-இழிவான
நைகை-வருத்தத்தை
தீர்த்து-நீக்கியருளி
அன்போரை-அடியவர்களை
அளிப்பவனே-காப்பவனே
எ. று. 27

புன்னை-நெய்தல் நிலக் கருப்பொருள். சங்குகள் கடலிற் பிறப்பன. அவை புன்னை மரத்தின்பால் ஊரும். கடலும் கடல்சார்ந்த இடமும் நெய்தலாம். குடை என்பது முருகன் கூத்தின் பெயர்.

பவனந் தகர அவுணேச னூரினிற் பாயுமொற்றுள்
ளவனந் தகப்பன் அணிச்செந்தி லான்ஒப்பில் ஆறுமுகச்
சிவனந் தகனை யுதைத்தாற் குரைத்தசொற் றேரினல்லால்
கவனந் தகக்கொண்டு வாடுமென் சிந்தை களிப்பதென்றே

இ—ள்.

பவனம்-பூமி
தகர்-சிதையும்படி
அவுணேசன்-சூரபன்மனுடைய
ஊரினில்-தலைநகரில்
பாயும்-உதைந்தெழுந்து சென்ற
ஒற்று-ஒற்றரான வீரவாகு தேவரை
உள்ளவன்-துணையாகப் பெற்றவன்
நம்-அடியேங்களுக்கு
தகப்பன்-தந்தையானவன்
அணி-அழகுமிக்க
செந்திலான்-திருச்செந்தூரினன்
ஒப்பில்-இணையற்ற
ஆறுமுகச்சிவன்-ஆறுமுகத்துப் பெருமான்
அந்தகனை-இயமனை
உதைத்தாற்கு-திருவடியால் உதைத்த சிவபிரானுக்கு
உரைத்த-உபதேசித்தருளிய
சொல்-பிரணவப் பொருளை
தேரின் அல்லால்-உணர்ந்தாலன்றி
கவனம்-உபாசனையின் நாட்டத்தை
தகக்கொண்டு-மிகவும் ஏற்று
வாடும்-அருளைநோக்கி வருந்துகின்ற
என்சிந்தை-அடியேனது மனம்
களிப்பது-மகிழ்ச்சி பெற்றிருப்பது
என்று-எந்தநாள்
எ. று. ஏ. அசை 28

களிப்பாடு வண்டு பெறத்தேன் பிலிற்றும் கடம்பன்என்பாள்
நெளிப்பாடு வண்டு விழுவாள்செந் தூர்நல நேர்மையென்பாள்
ஒளிப்பாடு வண்டுடைக் கையான் மருகன்என் உள்ளனென்பாள்
துளிப்பாடு வண்டுணைக் கண்ணிற்கொள் வாளென் கரிகுழலே

இ-ள்.

களிப்பாடு-உவகையை
வண்டுபெற தேனீக்கள் அடையும்படி
ஒளிப்பாடு-(வெண்மையான) ஒளியுடைய
வண்டுஉடை-சங்கைத்தரித்த

தேன்பிலிற்றும்-தேனைச் சொரிகின்ற
கடம்பன்-கடம்ப மாலை யுடையவன்
என்பாள்-என்று கூறுவாள்
நெளிப்பாள்-உடலைச் சுளிக்கின்ருள்
துவண்டு-சோர்வடைந்து
விழுவாள்-கீழே விழுவாள்
செந்தூர்-திருச்செந்தூர்த் தலத்தின்
நலநேர்மை-நேர்மை நன்ருகும்
என்பாள்-என்று சொல்கின்ருள்
கையான்-கையினரான திருமாவின்
மருகன்-மருகோன்
என்உள்ளன்-எனது மனத்துள்ளான்
என்பாள்-என்று உரைக்கின்ருள்
துளிப்பாடு-நீர்துளிக்கும் [தன்மையை
வண்-மிகவும்
துணைக்கண்ணில்-இரு விழிகளிலும்
கொள்வாள்-கொண்டிருக் [கின்ருள்
என்-எனது
சுரிகுழல்-மகள்
எ. ஹு. ஏ. அசை 29

(இது நற்ருயிரங்கல் துறை)

சுரிப்பாருங் கைக்களிற் ருனனத் தான்றுணை தூயதுதி
விரிப்பாருங் கையந் தவிர்ந்துய்யச் செய்யும் விசாகன்செந்தூர்
அரிப்பாருங் கையகல் வானமும் போற்றலென் றண்டுமென்னைச்
சிரிப்பாருங் கைப்பின்றி யேத்தலெந் நாள்அதைத் தேர்ந்திலனே

இ-ள்.

சுரிப்புஆரும்-சுருக்கமுள்ள
கை-துதிக்கையுடைய
களிறு-யானையினது
ஆனனத்தான்-முகத்தினரான கணபதியின்
துணை-துணைவராயுள்ளவன்
தூய-குற்றமற்ற
துதி-தோத்திரங்களைச்
விரிப்பார்-சொல்லும் அடியவர்கள்
உங்கு-உள்ளத்தில் தோன்றும
ஐயம்-சந்தேகங்கள்
தவிர்ந்து-நீங்கி
செந்தூர்-திருச்செந்தூரானது
அரி-கடலால் சூழப்பெற்ற
பாரும்-பூவுலகமும்
கைஅகல்-இடமகன்ற
வானமும்-மேல்உலகமும்
போற்றல்-போற்றற்குரியது
என்று-என்றறிந்து
அண்டும்என்னை-வந்தடைந்த அடியேனை
சிரிப்பாரும்-பரிகசிப்பவரும்
கைப்புஇன்றி-வெறுப்பு இல்லாமல்
ஏத்தல்-பாராட்டுவது

உய்யச்செய்யும்-ஈடேறப் புரியும்
விசாகன் விசாகப் பெருமானின்
எந்நாள்-எந்தக்காலமோ
அதை-அந்தநாளை
தேர்ந்திலன்-தெரிந்தேனில்லை
எ. று. ஏ. அசை 30

தேரா மனம்பயந் தேங்குகின் றேற்குச் சிலையுறுங்கைச்
சீரா மனம்பர முண்டோன் வியக்கும் திறலளித்தாள்
சோரா மனம்பவல் லார்பகை மாய்க்கும் சுடர்த்துங்கவேல்
வீரா மனம்பர் குரவா திருச்செந்தில் வித்தகனே.

இ-ள்.

தேரா-தேற்றம்பெருத
மனம்-உள்ளமானது
பயந்து-அச்சமடைந்து
ஏங்குகின்றேற்கு-ஏக்க முறும் எனக்கு
சிலைஉறும்-வெற்றி வில் ஏந்திய
கை-திருக்கரங்கொண்ட
சிராமன்-இராமபிரானும்
அம்பரம்-சமுத்திர நீரை
உண்டோன்-உண்ட அகத்தியரும்
வியக்கும்-வியந்து பேசுகின்ற
திறல்-பேராற்றலை
அளித்துஆள்-கொடுத்தருள் வாயாக
சோராமல்-தளராமல்
நம்பவல்லார்-நம்பும்அடியவரது
பகை-எதிரிகளை
மாய்க்கும்-வெல்லுகின்ற
சுடர்-ஒளிமிக்க
துங்கவேல்-வெற்றிவேல்ஏந்திய
வீரா-வீரமிக்கவனே
மன்-நிலைபெற்றுள்ள
நம்பர்-சிவபிரானது
குரவா-குருநாதனே
திருச்செந்தில்-திருச்செந்தூரில் விளங்கும்
வித்தகனே-ஞானப்பொருளே
31

வித்தக னத்தை மகளார் இருவர் விரும்பவத்தம்
ஒத்தக னத்தைமுத் துங்கும ரேசன் உவாக்களிற்றின்
மத்தக னத்தைத் திருமேனி யான்,செந்தில் வாணன் என்னுள்
வைத்தக னத்தைய முற்றே வருந்தினன் மாநிலத்தே

இ-ள்.

வித்தகன்-அறிவுமயமான வன்
அத்தை-மாமியான திருமகளின்
களிற்றின்-திருஞானவேழம் என்ற யானையினது
மத்தக-பிடரியின் மீதிருக்க
நத்து-ஆவல் கொள்கின்ற

மகளார்-பெண்களாயுள்ள
இருவர்-வள்ளி தெய்வயானை
என்ற இருவரும்
விரும்ப-ஆசையுறும்படி
அத்தம்ஒத்த-கண்ணாடி
போன்ற
க(ன்)னத்தை-கன்னங்களில்
முத்தும்-முத்தமிடுகின்ற
குமரேசன்-குமாரக் கடவுள்
உவா-சந்திரனையொத்த
வெண்ணிற
ஐ-அழகிய
திருமேனியான்-வடிவமுடைய
தலைவன்
செந்தில்வாணன்-திருச்செந்
தூரில் வதிபவன்
என்னுள்-அடியேன்மீது
வைத்த-கொண்டுள்ள
கனத்து-மேலான மதிப்பில்
ஐயம்உற்று-சந்தேகம்கொண்டு
மாநிலத்து-இவ்வுலகில்
வருந்தினன்-துயரமடைந்தேன்
எ- று. ஏ. அசை 32

**நிலம்பு கழட்டசித் துங்கொடுத் தாட்கொண்டு நீடுதண்டை**
**புலம்பு கழலும் தரவேண்டும், ஆணவம் பொங்குதலின்**
**அலம்பு கழகத் துயர்தீர்த்த வா,செந்தி லாய்அருட்சீர்**
**நலம்பு கழல்வண்ண னேவிண்ணு ளார்தொழும் நற்குகனே**

இ—ள்.

நிலம்புகழ்-உலகம்
போற்றுகின்ற
அட்டசித்தும்-அட்டமா
சித்துகளும்
கொடுத்து-அடியேனுக்கு
உதவி
ஆட்கொண்டு-அடிமையாக
ஏற்று
நீடுதண்டை-பெரிய
காலணிகள்
புலம்பு-ஒலிக்கின்ற
கழலும்-திருவடிகளையும்
தரவேண்டும்-கொடுத்
தருள வேண்டும்
ஆணவம்-அகங்காரம்
ஆகிய குற்றம்
பொங்குதலின்-மிகுதிப்
பட்ட தன்மையால்
அலம்பு-சஞ்சலப்பட்ட
கழக-சங்கத்துப் புலவர்களது
துயர்-உண்மைப்பொருளறி
யாது கொண்ட துன்பத்தை
தீர்த்தவா-உருத்திரசன்மர்
என்ற ஊமைக்குழந்தை
யாகித் தீர்த்தவனே
செந்திலாய்-திருச்செந்தூரனே
அருட்சீர்-கருணைமிக்க
நலம்புகு-நன்மையமைந்த
அழல்-தீயைஒத்த செந்நிற
முள்ள
வண்ணனே-வடிவமுடையவனே
விண்ணுளார்-தேவர்கள்
தொழும்-வணங்குகின்ற
நற்குகனே-சிறந்த முருகப்
பெருமானே
33

**நற்குரு வானவன் செந்தூர னேயென நாடுமென்னைப்**
**பொற்குரு வானவப் பொன்செய்பு மாறு புதுக்குங்கொலோ**
**தெற்குரு வானவ சந்தரச் செய்புங்கொல்? செம்பவள**
**விற்குரு வானவ னுமவற் காணலென் வேட்கையதே**

இ—ள்.

*நற்குரு-சிறந்த குரு*
*ஆனவன்—ஆகியருள்பவன்*
*செந்தூரனே-திருச்செந்தி வாதிபனே*
*என—என்பதாக*
*நாடும்—தியானிக்கின்ற*
*என்னை—அடியேனை*
*பொற்குருவால்-வேதிக்கும் சிந்தூரத்தால்*
*நவப்பொன்-புதுமையான தங்கமாக*
*செய்புமாறு-தாமிரத்தைச் செய்வதுபோல*
*புதுக்கும்கொலோ—குற்ற மகற்றி ஏற்றுக் கொள்வானோ*
*தெற்கு-தென்றிசைக்கு*
*உருவான்-உரியவனாகிய யமன்*
*அவசம்-மிகுதியான இடர்ப் பாட்டை*
*தர-கொடுத்து வருத்தும்படி*
*செய்புங்கொல்-இயற்றுவானோ (அறியேன், ஆனால்)*
*செம்-செந்நிறமுள்ள*
*பவள-பவளம் போன்ற*
*விற்கு-ஒளியினுக்குரிய*
*உரு-திருவுருவையுடைய*
*வானவனும்-தெய்வமாகிய*
*அவன்-அந்த முருகக் கடவுளை*
*காணல்-நேரே காணவேண்டுமென்பது*
*என்வேட்கை-எனது பெரு விருப்பமாகும்*
*எ, று, அது, ஏ, அசைகள்* 34

**வேட்கைக் குவந்த படியாடல் செய்குகன் வேண்டும்ஒரு**
**பூட்கைக் குவந்த நெடுமால் மருகன் புகல்செந்திலான்**
**தாட்கைக் குவந்தன மென்றலை மீதொரு சற்றமைத்து**
**தேட்கைக் குவந்தறல் தீவெளி நாளுந் திறல்நல்கவே**

இ—ள்.

*வேட்கைக்கு-விருப்பத்துக்கு*
*உவந்தபடி-ஏற்றவாறு*
*ஆடல்செய்-திருவிளையாட லியற்றும்*
*குகன்—குகக்கடவுள்*
*வேண்டும்—தன்னைக் கூவி அழைத்த*
*கைக்கு—திருக்கரங்கட்கும்*
*வந்தனம்-வணக்கம் உரியது. ஏனெனில்*
*என் தலைமீது-அடியேனது சிரத்தில்*
*ஒரு சற்று-ஒரு கணநேரம்*
*அமைந்து-பொருந்தியிருந்து*

இ-ள்

ஞானக்கண்-ஞானவிளக்கத்தை
ஆயிரம்கோடி-மிகப்பல மடங்கு
கொண்டோன்-பெற்றுள்ளவன்
செந்தில்-திருச்செந்தூருக்கு
நாதன்-தலைவனுன முருகப்பிரான்
அகல்-விசாலமாகிய
வான-மேல்உலகை
கண்ணார்க்கு-இடமாகவுள்ள தேவர்கட்கு
ஒரு-ஒப்பற்ற
தாயகன்-பற்றுக்கோடாயிருப்பவன்
ஆண்மை-வலிமை
மலிந்து-மிகுதியாகக் கொண்டு
எழும்பும்-உலகினைத் தாக்கப் புறப்பட்ட
ஏனக்கு-(திருமாலவதாரமான) பன்றிக்கு
அண்ணு-பொருந்தும்படி
அதம்-அழிவை
ஈந்த-அருளிய
வைவேலன்-கூரிய வேற்படையினன்
என்று-என்றவிதமாக
ஏத்துகிலார்-துதிபுரியாதவர்கள்
ஈன-இழிவான
கண்-கண்களையும்
நாறிய-நாற்றமுடைய
வாயினராய்-வாயையுமுடையவராக
பிறந்து-உலகிற் பிறந்து
எய்ப்பவரே-துன்பப்படுபவர்களேயாவர்
எ. று.— 38

எய்யா விதத்தில் உனைப்போற்றி டாதிங் கிருக்குமென்றன்
பொய்யா விதத்தீற் புகாதருள் வாய்!புனம் போய்த்திரும்பும்
ஐயா விதத்தினில் ஆளவல் லாய்செந்தி லாதிபனே
உய்யா விதத்தியின் தோளுடை யார்தொழும் உத்தமனே

இ—ன்.

எய்யாவிதத்தில்-சோர்வில்லாதபடி
உனை-தேவரீரை
போற்றிடாது-துதிக்காமல்
இங்கு-இவ்வுலகில்
இருக்கும-அறியாமையோடு வாழும்
என்றன்-அடியேனுடைய
இரும்பும்-வெற்றியுடன் மீண்ட
ஐயா-ஐயனே
இதத்தினில்-இனிமையான முறையில்
ஆள-அன்பர்களை ஆண்டருள
வல்லாய்-வல்லபெருமானே
செந்தில்-திருச்செந்தூரின்
ஆதிபனே-தலைவனே

பொய்ஆவி-நிலையற்ற உயிரானது தத்தில்-பல ஆபத்தில் புகாது சிக்கி வருந்தாதபடி அருள்வாய்-காத்தருள் வாயாக புனம்-தினைப்புனத்தில் போய்-வள்ளியை நாடிச் சென்று உய்யா-நிறைவுபெறுத விது-பிறைச்சந்திரனையும் அத்தியின்தோல்-யானைத் தோலையும் உடையார்-கொண்டுள்ள சிவபிரான் தொழும்-வணங்கிய உத்தமனே-மேலான தெய்வமே 39

உத்தம ரான வடியாரைச் சேர்ந்திலன் உண்மையற்ற
பொய்த்தம ரானவ லோகமுந் தேடினன். பூத்தகொன்றைக்
கொத்தம ரானவன் மைந்தா!செந் தூரினிற் கொற்றவைவேல்
புத்தம ரான வனிவாழ மால்முன் புரிந்தவனே

இ—ள்.

உத்தமர் ஆன-மேலானவர்களாகிய அடியாரை-திருத்தொண்டரை சேர்ந்திலன்-கூடிவாழவில்லை உண்மைஅற்ற-நேர்மையில்லாதவரும் பொய்-நிலையில்லாதவர்வர்களுமான தமரால்-சுற்றத்தினர்களால் நவலோகமும்-பலவகைப் பொருளையும் தேடினன்-நாடி அலைந்தேன் பூத்த-நன்கு மலர்ந்து கொன்றைக்கொத்து-கொத்தாகவுள்ள கொன்றைப் பூக்கள் அமர்-அணிந்தவரும் ஆன்அவன்-இடபவாகனத்தினருமான சிவனாரது மைந்தா-புதல்வனே செந்தூரினில்-திருச்செந்தூரில் கொற்ற-வெற்றியையுடைய வைவேல்-கூறியவேலாயுதத்தைக்கொண்டு புத்துஅமரான்-கன்னிப்போரை அவனிவாழ-உலகம் உய்யும் பொருட்டு மால்-திருமாலின் முன்-எதிரில் புரிந்தவனே-ஏற்றுச் செய்தவரே எ. று.— 40

புரிமருப் பாட்டுக் குரற்கஞ்சி னேர்சொல் புகழ்புனைந்தான்
எரிமருப் பாட்டுக் குராமுடித் தோன்.செந்தில் மேவிநின்றேன்
கிரிமருப் பாட்டுக் குமரிதன் பால்முலை கேட்டமுதான்
அரிமருப் பாட்டுக் குவப்பானென் றேதுமிவ் வம்புவியே

இ—ள்.

புரி-முறுக்காயுள்ள மருப்பு-கொம்பினையுடைய ஆட்டு-யாகத்திற்றோன்றிய ஆட்டினது குரற்கு-அதிர்ந்த குரலோசைக்கு அஞ்சினோர்-பயந்த தேவராதியோர் சொல்-போற்றிக்கூறிய புகழ்-பெருமைகளை புனைந்தான்-ஏற்றுக் கொண்டவன் விரி-இதழ்விரிந்து மருப்பாட்டு-வாசனையுடைய குரா-குராமலர்மாலையை முடித்தோன்-அணிந்துள்ளவன் செந்தில்-திருச்செந்தூரில் மேவிநின்றோன்-எழுந்தருளியுள்ளவன் கிரி-இமயமலையின் மருப்பு-பக்கங்களில் ஆட்டு-திருவிளையாடலைப் புரியும் குமாரிதன்-பார்வதிதேவியின் பால்முலை-தனத்தின்பாலை கேட்டு-தரும்படிவிரும்பி அழுதான்-அழுதகுழந்தைப் பெருமான் அரி-திருமாலின் மரு-மருகன் பாட்டுக்கு-அன்பர்களின் தோத்திரப்பாடல்களுக்கு உவப்பான்-மனம் மகிழ்பவன் என்றுஒதும்-என்றுசொல்பவர் இவ்அம்புவி-இவ்வுலகத்து அறிஞர்

எ. று. ஏ. அசை

41

அம்புவி லாழியொப் பாவன நாணும் அயிற்செந்திலான்
பம்புவி லாழி மறுகார்செந் தூரினைப் பாடுதொழிற்
கும்புவி லாழி புனைந்துல காளினும் கோவணச்சீர்த்
தொட்புவி லாழினும் மெய்ஞான வீரச் சிறப்பினதே

இ—ள்.

அம்பு-கூரியபாணமும் வில்-தனுசும் ஆழி-சக்கராயுதமும் ஒப்பாவன-அதுபோன்ற ஆயுதவகையும் நாணும்-வெட்கக்கூடிய அயில்-வேலாயுதத்தை யுடைய செந்திலான்-திருச்செந் தூர்ப்பெருமான் பம்பு-விசாலமான நீரையும் தொழில்-தொண்டினை மேற்கொண்ட கும்பு-அடியவர் திருக்கூட்டம் இல்-இல்லறவாழ்விலிருந்து ஆழி-ஆணைபுரிந்து ஆட்சி புரிவதை புனைந்து-ஏற்று உலகுஆளினும்-அரசுசெய்தா ராயினும் கோவண-லங்கோடுகௌபீனந் தரித்த

வில்-ஒளியையும் உடைய
ஆழி-கடலின்
மறுகுஆர்-பக்கத்தி
லமைந்த
செந்தூரினை-திருச்செந்தி
லின் புகழை
பாடு-பாடிப்பணிகின்ற
சீர்-தவச்சிறப்பினரான
தெம்புவில்-புத்துணர்ச்சியில்
ஆழினும்-ஆழ்ந்த தவத்தின
ராயினும்
மெய்ஞான-உண்மைஞானம்
வீர-பெருமிதமுடைய [பெற்ற
சிறப்பினதே-மேம்பாட்டினை
எ. று.— [யுடையதேயாம் 42

**சிறந்தவ ராகத்தை வென்ற வைவேலன் செழுங்கனலிற்**
**கறந்தவ ராகத்தை யன்றிருச் செந்திற் கடிநகரிற்**
**பிறந்தவ ராகத்தைத் தெய்யென ஆடும் பிரான் அருள்பெற்(று)**
**இறந்தவ ராகத்தை யந்தவிர்ந் தோர்களுக் கெய்துமன்றே**

**இ—ள்.**

சிறந்த-சிறப்புமிக்க
வராகத்தை-(திருமா
லவதாரமான)பன்றியை
வென்ற-கொன்று வெற்றி
பெற்ற
வை,வேலன்-கூரியவேலை
யுடையவன்
செழும்கனவில்-மலையான
நெருப்பாக
கறந்தவர்-அயன் அரிகளுக்
காக மறைந்த சிவபிரானின்
ராகத்து-விருப்பத்துக்குரிய
ஐயன்-தலைவனான முருகப்
பிரான்
திருச்செந்தில்-திருச்செந்
தூரான
கடிநகர்-அழகிய தலத்தில்
வாழும் பேறு
இல்பிறந்தவர்-நற்குடியில்
பிறந்தவர்களுக்கும்
ஆகத்தை-முற்பிறவிச்சரீரத்தை
தெய்யென் ஆடும்-நடனம்
புரியும்
பிரானருள்பெற்று-சிவபிரா
னது அருளை அடைந்து
இறந்தவர்-நீத்தவர்களுக்கும்
ஆகத்து உள்ளத்திலே
ஐயம்-சந்தேகவிபரீதங்கள்
தவிர்ந்தோர்களுக்கும்-நீங்கப்
பெற்ற ஞானிகளுக்கும்,
எய்தும்-வந்துசேரும்

செந்திலில் வாழும் பேறு நற்குடியில் பிறந்தார்க்கும், சிவ னடியார்களுக்கும், ஞானிகளுக்கும் கிடைக்கும். 43

**மன்றந் தனிற்றித்தெய் என்றுடு வார்சுதன் மன்னுமெண்ணில்**
**குன்றந் தனின்மல ஞானு நுபூதி கொடுக்கும்பிரான்**
**என்றந் தனித்தியன் ஈடில்செந் தூர்க்குகன் யான்விரும்பும்**
**பொன்றந் தனியர்தம் பாலிர வாமற் புரக்கின்றன்றே.**

மன்றந்தனில்-கனகசபையில்
இந்தெய்என்ற — ந்தெய்
என்ற தாளப்படி
ஆடுவார்-நடம்புரியும்
பரமனின்
சுதன்-திருக்குமாரர்
மன்னும்-நிலைபெற்றதும்
எண்ணில்-அளவுபடாதது
மான
குன்று-மலைகளையுடைய
அந்தன்-அழகுக்கடவுள்
நின்மல-குற்றமில்லாத
ஞானஅநுபூதிரூமெய்யுணர்ச்
சியை
கொடுக்கும்-உதவி
அருள்கின்ற
பிரான்-தலைமையானவர்
என்-அடியேனை
தந்த-ஈன்றருளிய
நித்தியன்-அழிவற்ற
பெருமான்
ஈடுஇல்-இணையில்லாத
செந்தூர்-திருச்செந்திலில்
மருவும்
குகன்-குகக்கடவுள்
யான்விரும்பும்-நான் ஆசைப்
படுகின்ற
பொன்தந்து-பொருளைக்
கொடுத்து
அ(ன்)னியர்தம்பால்-வேறு
ஒருவரிடத்தும்
இரவாமல்-யாசிக்காத
வண்ணம்
புரக்கில்-காத்தருளினால்
நன்று-நன்மையாகும்
எ. று. ஏ. அசை. 44

புரந்தர னாதிய வானவர் என்பு புனைந்தருளும்
நிரந்தர னாதியந் தங்கடந் தோன்தொழும் நின்னையன்றி
வரந்தர னாதி யறியாது செந்திலில் வந்தனன்,பூஞ்
சரந்தர னாதியற் றானென நாடினன் சண்முகனே

இ—ள்.

புரந்தரன்-தேவேந்திரன்
ஆதிய-முதலாயுள்ள
வானவர்-தேவர்களுடைய
என்பு-எலும்புகளை
புனைந்தருளும்-மாலையாக
அணிந்த
நிரந்தரன்-நித்தியப்
பொருளானவரும்
ஆதியந்தம்-முதலும் முடிவும்
கடந்தோன்-தாண்டியபெரு
மானுமாகிய சிவபெருமான்
தொழும்-வணங்குகின்ற
அறியாது-காணமுடியாமல்
செந்திலில்-திருச்செந்தூர்ப்
பதியில்
வந்தனன்-உமது சந்நிதிமுன்
எய்தினேன்
பூஞ்சரம்-பூக்களாலாய
அம்புகளை
தரன்-தரித்துள்ள மன்மதன்
ஆது-போர்செய்யும்
குற்றத்தை
இயற்றான்என-என்னிடம்
தொடரமாட்டான்என்பதாக

நின்னையன்றி-தேவரீரை யல்லாமல்
வரந்தர-விரும்பியவற்றை உதவுதற்கு
நாதி-பற்றுக்கோடாயுள்ளவரை
நாடினன்-எண்ணியிருக்கின்றேன்
சண்முகனே-ஆறுமுகக் கடவுளே
எ, று. 45

முகமன் பகரச் சலியாது பன்மனை முன்றிலிற்போய்
இகமன் பகர வகரப் பிணிக்கச்சம் இன்றிநொந்தேன்
குகமன் பகர மயிற்செந் திலாய்புனக் கோதைநெஞ்சத்
தகமன் பகரங் கொடுத்தாள வேண்டும் தருணமிதே

இ—ள்.

முகமன்-உபசார மொழிகளை
பகர-புனைந்துசொல்வதற்கு
சலியாமல்-மனச்சோர்வில்லாமல்
பன்மனை-செல்வர் பலரது வீடுகளின்
முன்றிலில்-தலைவாயிலிடத்து
போய்-அடுத்துச்சென்று
இகு-இழியும்படிசெய்யும்
அ-அந்த
மன்-என்பால் நிலைபெற்ற
பகரவகரப்பிணிக்கு-பவமாகிய வறுமைநோய்க்கு
அச்சம்இன்றி-பயப்படாமல் (அதனால்)
நொந்தேன்-வருத்தமடைந்தேன்
குக-முருகப்பெருமானே
மன்-நிலைத்த
பகர-அழகினையுடைய
மயில்-மயில்வாகனத்தைக் கொண்ட
செந்திலாய்-திருச்செந்தூர்க் கடவுளே
புனக்கோதை-தினைப்புனத்து வள்ளியம்மை
நெஞ்சத்து-மனத்தின்
அக-உள்ளாக வசிக்கும்
அன்ப கருணையனரே
கரம்-உமது திருக்கையை
கொடுத்து-மாற்றும்படி உதவி
ஆளவேண்டும்-மேலெடுத்தருளவேண்டும்
தருணம்இதே-சமயம் இதுவேயாகும்
எ. று. 46

தருண மறியவல் லாயென நாடித் தயங்குமென்முன்
அருண மறியதன் மீதேறி வந்தருள் ஆரணமின்
வருண மறியலைச் சாகரம் போற்ற மகிழ்செந்திலாய்
சருண மறியத் தமிழ்வாய னேமற்றோர் தஞ்சமின்றே

இ—ள்.

தருணம்-ஆட்கொள்ளும் சமயத்தை
அறியவல்லாய்-தேவரீர் நன்கறிந்தவர்
எனநாடி-என்று கருதி
தயங்கும்-துன்பத்தால் உழலும்
என்முன்-அடியேன் எதிரில்
அருண-செந்நிறமான
மறியதன்-ஆட்டுவாகனத்தின்
மீதுஏறி-மேலே இருந்து
வந்து-காட்சி வழங்கி
அருள்-திருவருள்புரிவீராக
ஆரண-வேதத்தின் பொருளானவரே!
மின்-மின்னலைப்போன்ற
வருண-பிரகாசமுடையவரே!
மறி-புரளுகின்ற
அலை-அலைகளோடு கூடிய
சாகரம்போற்ற-கடல் வணங்க
மகிழ்-மனம்உவக்கின்ற
செந்திலாய்-திருச்செந்திலாண்டவரே
சர்-வெம்மையான
ருணம்-ஊழ்வினையை
அறு-நீக்குகின்ற
இயல்-தேவாரத்துதியான
தமிழ்-தமிழ்க் கவிகளைப் பாடிய
வாயனே-திருவாயுள்ள ஞான சம்பந்தமூர்த்தியே
மற்று-உம்மையல்லாமல் வேறு
ஓர் தஞ்சம்-ஒரு ஆதரவும்
இன்று-அடியேனுக்கு இல்லை
எ. று. ஏ. அசை 47

**தஞ்ச முனையன்றி மற்றறி யேன்நின் தடங்கரத்து**
**நஞ்ச முளைக்கதிர் வேற்புக ழன்றி நவில்கின்றிலேன்,**
**கொஞ்ச முனைத்திறம் கூறிய தெண்ணிக் கொதித்துளன்,என்**
**பஞ்ச முனைகொலென் செய்வேன் செந்தூரிற் பழையவனே**

இ—ள்.

தஞ்சம்-எனக்கு ஆதர வளிப்பவர்
உனையன்றி-தேவரீரை யல்லாமல்
மற்றுஅறியேன்-வேறு ஒருவரையும் தெரியேன்
நின்-உம்முடைய
தடம்-விசாலமான
கரத்து-திருக்கையில் உள்ள
மு(ன்)னைத்திறம்-பூர்வ நிலையின் தன்மையை
கூறியது-அடியேனுக்குத் தெரிவித்ததை
எண்ணி-நினைத்து (அதற்குரிய பலிதம்காணமல்)
கொதித்துளன்-மனம்வருத்தியிருக்கிறேன்
என்-அடியேனது

நஞ்ச-விடத்தைக்கொண்ட
தும்
முனை-கூர்மையுடையதும்
ஆகிய
கதிர்வேல்-ஒளிமயமான
வேலாயுதத்தின்
புகழ்அன்றி-சிறப்பைத்தவிர
நவில்கின்றிலேன்-வேறு ஒன்
றைப் போற்றியறியேன்
கொஞ்சம்-ஒருசிறிது
பஞ்சம் வறுமையின் நிலையை
உன்னைகொல்-திருவுள்ளத்
தில் எண்ணமாட்டீரா!
என்செய்வேன்-யாதுசெய்யக்
கடவேன்
செந்தூரில்-திருச்செந்தூரில்
விளங்கும்
பழையவனே-அநாதியான
முதல்வரே
எ. று— 48

பழைய திருப்புக ழையன்றோர் தொண்டன் பழுதில்நின்முன்
உழைய திருப்புக ழையன்மன் னிருண்கை யொக்கவிடல்
விழைய திருப்புக ழையன்ன கோட்படை வேட்கொல்குமோ
தழைய திருப்புக ழையன்செந் தூரிற் சரவணனே

இ—ள்.

பழைய-முதுமையான
திருப்புகழை-சந்தப்
பாடல்களை
அன்று-அந்நாளில்
ஓர்தொண்டன்-ஒப்பற்ற
அருணகிரிநாதர்
பழுதில்-குற்றமற்ற
நின்-தேவரீருடைய
முன் உழை-சந்நிதானத்தில்
அ-அந்த
திரு-தெய்வீகமான
புகழ்-கீர்த்திவாய்ந்த
ஐயன்-அகத்திய முனிவர்
மன்-எப்போதும் உள்ள
(நிலைத்த)
நீர்-சமுத்திரத்தை
உண்கை-முன்பு உண்டதை
ஒக்கவிடல்-முழுதும்வெளியில்
செல்லவிடுவதுபோன்று
விழை அது.விரும்பப்படுகின்ற
அந்தத் தன்மைக்கு
இருப்பு-நிலைக்களமாகிய
அடியேன் உள்ளம்
கழைஅன்ன-கரும்புஆகிய
கோள்படை-குற்றமுடைய
ஆயுதம் தரித்த
வேட்கு-மன்மதனுக்கு
ஒல்குமோ-நாணுமோ
தழைய-திருவருள் பெருகும்படி
திருப்பு-(அடியேனை) நல்வழிப்
படுத்துவீராக
கழைஅன்-மூங்கில் நிறைந்
துள்ள
செந்தூரில்-திருச்செந்
தூரினிடத்துள்ள
சரவணனே-முருகப்
பெருமானே

அகத்தியர் தான்உண்ட கடலை மீண்டும் வெளியிடுவது போன்று அன்று அருணகிரிநாதர் திருப்புகழ் பாடிய ஆற்றலை விழையும் உள்ளத்தை உடையேன்-வேலனுக்கு நானுவதோ? எனவே அடியேனை நல்வழிப்படுத்துவீராக. 49

சரவண வாவியற் றண்குருந் தாகித் தழைத்தெழுஞ்சிந்
துரவண வாவிய தோகை மயூர துகளில்அறு
சிரவண வாவியந் தோளீ ரிரண்டுடைச் செல்வ!செந்திற்
புரவண வாவிப் புலவோருள் யானும் புகச்செய்திடே

இ-ள்

சரவண-தாமரை (தருப்பை) மிகுந்த
வாவியில்-தடாகத்தில்
தண்-இனிமைதருவதான
குருந்தாகி-குழந்தை வடிவிலிருந்து
தழைத்து-வளர்ச்சிபெற்று
எழும்-விளங்கும்
சிந்துர-குங்குமம்போன்ற
வ(ண்)ண-திறமுடைய பெருமானே
வாவிய-தாவிப் பறக்கின்ற
தோகை-நீண்டதோகையுடைய
மயூர-மயில்வாகனக் கடவுளே
துகள்இல்-மாசுஇல்லாத
அறுசிர-ஆறுமுகத்தெய்வமே
வண் மிகுந்த வெற்றியை
அவாவு-எப்போதும் விரும்புகின்ற
இயல்-தன்மையுடைய
தோள்-திருப்புயங்கள்
ஆறிரண்டுஉடை-பன்னிரண்டினைக்கொண்ட
செல்வ-திருவருட்செல்வரே
செந்திற்புர-திருச்செந்திற் பதித்தலைவரே
வ(ண்)ண-சந்தப்பாடல்களை
ஆவி-உயிர்போலக் கருதிப் போற்றுகின்ற
புலவோருள்-கவிஞர் கூட்டத்தில்
யானும்-அடியேனும்
புக-ஒருவனாகத் தங்கும்படி
செய்திடு-திருவருள்புரிவீராக
எ. று. 50

புகழாறு மானமும் நீதரப் பெற்றும் புவியினர்சொல்
இகழாறு மாஎன வாடும்புன் மார்க்கத்தில் ஏகிநொந்தேன்
அகழாறு மால்தொழும் தேவரு ளாற்றரும் ஐயசெந்தில்
திகழாறு மாமுகத் தேசிக னேயினிச் செய்வதென்னே

புகழ்-கீர்த்திமிக்க
ஆறும்-நன்னெறியும்
மானமும்-பெருந்தன்மையும்
நீ-தேவரீர்
தரப்பெற்றும்-அறிவிக்கப் பெற்றும்
புவியினர்சொல்-உலகினர் கூறுகின்ற
இகழ்-பழிமொழிகள்
ஆறுமாஎன-தீருமா என்று கருதி
வாடும்-மனம்வருந்துகின்ற
புன்மார்க்கத்தில்-தீய வழியில்
ஏகி-ஈடுபட்டு
நொந்தேன் - துன்பப்பட்டேன்
அகழ்-இருபிரிவாயுள்ள
ஆறு-ஆற்றின் மத்தியில் விளங்கும்
மால்-திருமால்
தொழும்-வணங்கத்தக்க
தேவு தெய்வமானசிவபிரான்
அருளால்தரும்-கருணையால் அளித்த
ஐய-தலைவரே!
செந்தில் திருச்செந்தூரிடமாக
திகழ் எழுந்தருளியுள்ள
ஆறுமுக-சண்முகங்களையுடைய
கேசிகனே-சற்குருநாதரே
இனி-இனிமேல்
செய்வது-யான்செய்யத்தக்கது
என்னே-யாதுஉள்ளது
எ. று. 51

செய்ய கலாப மயில்வாகன ஞ! திருச் செந்திலில்வாழ்
ஐய்ய கலாப மயில்வாழ் இடத்தாற் கருள்விளக்கும்
மெய்ய கலாப மயில்வாவு சீர்க்குக! மேதினியில்
பொய்ய கலாப மயில்வாரொத் தேன்வினைப் போர்விஞ்சியே

இ-ள்

செய்ய-சிறந்த அழகுபெற்ற
கலாப-தோகையையுடைய
மயில்வாகன-மயிலை வாகனமாகக்கொண்ட
திருச்செந்தில்-திருச்செந் தூரிடத்தில்
வாழ்-திருக்கோயில்கொண்ட
ஐய-அழகிய தலைவரே
கல்-இமயமலையின்
லாப-அதிட்டமாகத் தோன்றிய
மெய்ய-உண்மைவடிவினரே
கலா-கலைகள்பதினாறும்
பம்-செறியப்பெற்ற
அயில்வாவு-வேலாயுதம் தாங்கப்பெற்று
சீர்க்குக-சிறந்த குகக் கடவுளே
மேதினியில்-இவ்வுலகில்
பொய்-அசத்தியத்தை
அகலாபம்-அதிகஆதாய மென்றுகொண்டு

மை-கரிய நிறமமைந்த
இல்-(உமாதேவியாகிய)
மனைவி
வாழ் பொருந்தியுள்ள
இடத்தாற்கு-இடப்பாகத்
தினரான சிவனுருக்கு
அருள்விளங்கும்-திருவருளைத்
தெளியக்கூறிய

அயில்வார்-நுகரும்அறிவில்லா
தவரை
ஒத்தேன்-ஒத்திருக்கின்றேன்
வினை-தீவினையின்
போர்-போராட்டமான
இடர்கள்
விஞ்சி-அதிகப்பட்டு
எ. று. ஏ- அசை 52

போரா டமரர் துயர்தீர ஏறிப் புலைமலியும்
சூரா டமரவர் தம்மோடு மாயத் தொலைத்துச்செந்தில்
ஊரா டமரப் புகழ்வேல! நீமுன் ஒருத்திகண்முற்
சீரா டமரமொப் பாயதன் போர்களைத் தேற்றுகைக்கே

இ-ள்

போர்-போரிட்டெழுந்த
ஆடு-ஆட்டுக் கடாவை
அமரர்-தேவர்களது
துயர்தீர-துன்பம் நீங்கும்படி
ஏறி-வாகனமாகக்கொண்டு
புலைமலியும்-பொல்லாப்
புடைய
சூராள்-சூரபதுமன் முதலி
யோர்
தமரவர்-சுற்றத்தினராகிய
தம்மோடு-இனத்தாரோடு
மாய-அழியும்படி
தொலைத்து-கொன்றருளி
செந்தில்-திருச்செந்தூரென்ற
ஊர்ஆடு-நகரத்தில் ஆடல்
புரிகின்ற

அமரப்புகழ்-தெய்விகச்சிறப்
புற்ற
வேல-வேலாயுதக்கடவுளே
நீ-தேவரீர்
முன்-அக்காலத்தில்
ஒருத்தி-வள்ளிநாயகியின்
கண்முன்-எதிர்சென்று
சீராட-ஊடல்காட்ட
மரம்ஒப்பாயது-மரம்போல
உருவெடுத்தது
அன்போர்களை-அடியவர்களை
தேற்றுகைக்கே-தெளிவுபடுத்
தும் பொருட்டேயாம்
எ. று. 53

தேற்றுகைக் குந்துயர் தீர்க்கைக்கும் உன்னைத் திருச்செந்திலிற்
போற்றுகைக் கும்பலுன் என்னையுஞ் சேர்க்கும் பொழுதுள்ளதே
வேற்றுகைக் கும்பெரு மான்மைந்த னேஒளவை ஏக்கமுற்று
மாற்றுகைக் குஞ்சரத் துக்கிளை யாய்செக்கர் வண்ணத்தவே

இ-ள்

தேற்றுகைக்கும்-ஐயங்களைத் தெளிவித்தற்கும் துயர்-துன்பத்தை தீர்க்கைக்கும் மாற்று வதற்கும் உன்னை-தேவரீரை திருச்செந்தில்-திருச்செந் தூரினில் போற்று-வணங்குகின்ற கை-கைகளையுடைய கும்பலுள்-அடியவர் கூட்டத்துள்ளாக என்னையும்-அடியேனையும் சேர்க்கும்-சேரும்படிச் செய்யும் பொழுது-நல்லசமயம் உள்ளதோ-இருக்கின்றதா ஏற்று-இடப வாகனத்தை டகைக்கும் செலுத்துகின்ற பெருமான் சிவபிரானுடைய மைந்தனே புதல்வரே ஒளவை ஒளவைப் பிராட்டியின் ஏக்கம் மனவருத்தம் முற்றும் பூராவும் மாற்று-இல்லாமற்செய்கின்ற கை-துதிக்கையுடைய குஞ்சரத்துக்கு யானைமுகக் கடவுளுக்கு இளையாய்-இளையதுணைவரே செக்கர் அந்திப்போதின் வண்ணத்தனே-செந்நிறப் பெருமானே 54

வண்ணத் தமிழ்புனை மார்பலங் காரன் வனக்குறத்தி
எண்ணத் தமிழ்ந்துகன், ஈசர்தம் பங்கினள் ஏந்துகொங்கைக்
கிண்ணத் தமிழ்துண்ட வாயான்,செந் தூரைக் கிளத்துநலம்
நண்ணத் தமிழ்தரும் முற்பிறப் பிற்செய்த நற்றவமே

இ—ள்

வண்ணத்தமிழ்-ஓசைமிக்க சந்தப்பாடல்களை புனை-அணிந்துள்ள மார்பு-திருமார்பினையுடைய அலங்காரன்-அழகுப் பெருமான் வனக்குறத்தி-வேடமகளான வள்ளியின் எண்ணத்து நினைவில் அமிழ்-மூழ்கியுள்ள கிண்ணத்து-செப்பிலிருக்கும் அமிழ்து-ஞானப்பாலை உண்ட-அருந்திய வாயான்-திருவாயை யுடையவர் செந்தூரை-திருச்செந்திற் பதியை கிளத்து-போற்றுகின்ற நலம்-பெரும்புண்ணியத்தை நண்ண விரும்பிச்செய் வதற்குக்காரணம்

குகன்-குகக்கடவுள்
ஈசர்தம்-சிவபிரானது
பங்கினள்-இடப்பக்கத்திருக்கும் உமையம்மையின்
ஏந்து-எடுப்பான
கொங்கை-தனங்களான
தமிழ்தரும்-இனிமை தருவதான
முற்பிறப்பில்-முன்னைய பிறவியில்
செய்த-அடியேன்புரிந்த
நற்றவமே-மேவான தவத்தின் பயனேயாகும்
எ. று 55

நற்றவ மானவற் றைப்புரி யேன்,கொடும் நஞ்சுறழ்சொற்
சொற்றவ மானம் பிறரைச்செய் வேன்,தினம் தொண்டைச்செவ்வாய்
விற்றவ மானனை யார்கெஞ்சு வேன்எனை விட்டுவிடேல்
கற்றவ மானத்து சீர்ச்செந்தில் மாநகர்க் காவலனே.

இ-ள்

நல்தவம்-சிறந்த தவச்செயல்களான
ஆனவற்றை-சரியை கிரியை முதலியவற்றை
புரியேன்-நெறியோடு செய்யவில்லை
கொடும்-கெடுதலைப்புரியும்
நஞ்சுஉறழ்-விடத்தைப் போன்ற
சொல்சொற்று-வார்த்தை களைப் பேசி
அவமானம்-மானக்கேடான இகழ்வை
பிறரை-அன்னியர்களிடம்
செய்வேன்-செய்துமகிழ்வேன்
தினம்-நாள்தோறும்
தொண்டை-கோவைக் கனிபோன்ற
செவ்வாய்-இதழ்ச்சுவையை
விற்ற-பொருளுக்காக உதவுகின்ற
அம்-அழகிய
மான் அனையார்-மான்போன்ற பொதுமாதரை
கெஞ்சுவேன்-இன்பம்நாடி இரப்பேன்
எனை-அத்தகைய அடியேனை
விட்டுவிடேல்-கைவிடாமல் ஏற்றருளவேண்டும்
கற்றவ-யாவும் உணர்ந்த பெருமானே
மால்-விட்டுணுமூர்த்தி
நத்து-உடனிருந்துமகிழ்கின்ற
சீர்ச்செந்தில்-சிறந்த திருச்செந்தூராகிய
மாநகர்-பெரியநகரத்தின்
காவலனே-பேரரசான கடவுளே 56

காவகங் காரமர் சீர்காட்டும் செந்திற் கடவுள்கைவேற்
சேவகங் காரணங் குன்றுத வண்ணம் செயும்குமரன்
பூவகங் காரகன் போற்றும் அகோரன் புகழ்உரைக்கும்
நாவகங் கார மணிநா வறுக்கைக்கொர் ஞாயம்உண்டே

இ—ள்.

கா-சோலைகளை
அகம்-இடமாகப்பெற்று
கார்அமர்-மேகங்கள்
தங்கியுள்ள
சீர்காட்டும்-சிறப்பைக்
கொண்ட
செந்தில்-திருச்செந்தூரிடத்
தமர்ந்த
கடவுள்-முருகப்பெருமான்
கை-கையிடத்தில்
வேல்-வேலாயுதத்தைக்
கொண்டு
சேவகம்-அன்பர்களைக் காக்
கின்ற தொழிலாகிய
காரணம்-உபாயம்
குன்றுதவண்ணம்-குறையாத
செயும்-புரியும் [படி
குமரன்-குமாரக்கடவுள்,
பூவகு-பூமிதேவிபெற்ற
அங்காரகன-செவ்வாயான
வன்
போற்றும்-வணங்கியேத்தும்
அகோரன்-உக்கிரத்தலைமை
யினர்
புகழ்-அப்பெருமானது
சிறப்பை
உரைக்கும்-பேசுமியல்புடைய
நா-நாவானது, எனவே
அகங்காரம்-ஆணவத்தை
அணி-பெற்றுள்ள
நா-தீயர்களின் நாக்கை;
அறுக்கைக்கு-அடக்குவதற்கு
ஓர்ஞாயம்-ஒருநீதி
உண்டு-இருக்கின்றது
ஏ, று, ஏ. அசை

57

நாயங்க ளைச்சற்றும் நண்ணுதபாவி,நன் நாரியர்தம்
வாயங்க ளையமின் றென்றேதும் தீயன்றின் வார்கழலின்,
சேயங்க ளைக் குறிப்பதென் றேதிருச் செந்திலெந்தாய்
மாயங்க ளைவல் லாய்வடி வேற்றிண்கை வானவனே

இ—ள்

நாயங்களை-நேர்மையான
வற்றை
சற்றும்-சிறிதும்
நண்ணுத-விரும்பிக்
கொள்ளாத
பாவி-தீவினையுடையவன்
நல்-நன்மைமிக்க
நாரியர்தம்-மாதர்களுடைய
வாய்-வாயில் ஊறுகின்ற
அம்-நீரானது
கள்-தேன்போன்றது
சேய்-செம்மையான
அம்-அழகினது
களை-பிரகாசப்பொலிவை
குறிப்பது-நினைப்பது
என்றோ-எந்தநாளோ
திருச்செந்தில்-திருச்செந்
தூரிடத்துள்ள
எந்தாய்-எமது தந்தையே
மாயம்-மாயையின்
வலிமையை
களைட-இல்லாமற்செய்யும்

ஐயம் இன்று-இதில் சந்தேகமில்லை
என்று ஓதும்-எனக்கூறுகின்ற
நீயன்-கொடியேன்
நின்-தேவரீரது
வார்கழலின்-வீரகண்டையணிந்த திருவடிகளின்
வல்லாய்-வலிமையுடையவரே
வடிவேல்-கூர்மையான வேலையுடைய
திண்கை-திரண்ட கைகளைக் கொண்ட
வானவனே-தேவனாகிய முருகக்கடவுள் 58

வானத்த னத்தத் தறலோ டளித்த மகளிருக்கக்
கானத்த னத்தத் தடிபேணுங் காமுகக் கள்வனென்னும்
ஆனத்த னத்தத் தவம்காட்டிச் செந்திலில் ஆண்மயில்மேல்
தானத்த னத்தத்த என்றாடு வானையித் தாரணியே

இ-ள்

வானத்தன்-தேவேந்திரன்
அத்தத்து-தேவரீரது கையிடத்து
அறலோடு-தத்தம்செய்த நீருடன்
அளித்த-முறையுடன் கொடுத்த
மகள்-தெய்வயானையம்மை
இருக்க-அணிமையிலிருக்கும்போது
கானத்து-காட்டினிடமிருந்த
அ(ன்)னத்து-அன்னம்போன்றுள்ள வள்ளிநாயகியின்
அத்து-செந்நிறமான
அடி-திருவடிகளை
பேணும்-பணிகின்ற
காமுக-இச்சைமிகுந்த
கள்வன்-கபடநாடகமுடையவர்
என்னும்-என்றுகூறும்
ஆன்-இடபவாகனத்தினனை
அத்தன்-சிவபிரான்
நத்த-வேண்டியவாறு
தவம்-தவவேடத்தை (குருவடிவை)
காட்டி-காணச்செய்து
செந்திலில்-திருச்செந்தூரில்
ஆண்மயில்மேல்-வீரம்மிக்க மயிலின்மீது
தானத்தனத்தத்தஎன்று-தானத்தனத்தத்த என்றபடி தாளம்பொருந்த
ஆடுவானை-திருநடம்புரிகின்ற முருகப்பெருமானை
இத்தாரணியே-இந்தப்
எ. று.— பூலோகம்
(இந்தப் பூலோகம் கள்வன் எனக்கூறும்-என முடிக்க) 59

தாரணி யானத்த காதென நீத்துன் சரண்பணியும்
சீரணி யானத்த காமியங் கொள்ளவும் செய்குவையோ
நாரணி யானத்த கான்முனை யாஞ்செந்தில் நாயகவேற்
போரணி யானத்த காலரந்த கன்றொழும் புங்கவனே

இ—ள்

தாரணி-இந்த உலகத்தை
ஆள—அரசபுரியும்படியான பேறும்கூட
தகாதுஎன—கூடாது என்பதாக
நீத்து-துறவுகொண்டு
உன்சரண்—உமது திருவடிகளை
பணியும்-போற்றுகின்ற
சீர்-பெருஞ்செல்வத்தை
அணி-பொருந்தப்பெற்ற
ஆள்—அடிமையாகிய என்னை
அத்த-பொருளிடத்து
காமியம்-இச்சையை
கொள்ளவும்-அடையும் படியும்
செய்குவையோ-இயற்றுவீரோ
நாரணியாள்-உமாதேவியின்
அத்த-திருக்கரங்களில் ஏந்தப்பெற்ற
கான்முளையாம்-குழந்தை யாகவுள்ள
செந்தில்நாயக—திருச்செந் தூர்த் தலைவரே
வேல்-வேலாயுதம்கொண்டு
போர்-யுத்தம்செய்கின்ற
அணிஆள்-படைவீரர்கள் பலருக்கு
அத்த—தலைமையான
கால-எமனுக்கு (பெருமானே
அந்தகன்—எமனைசிவபிரானால்
தொழும்-வணங்கப்பெற்ற
புங்கவனே—தூயமுருகப் பெருமானே 60

புங்கக் கரும்புடை மாரனை வென்ற புனிதர்குழாம்
முங்கக் கரும்புனற் சாகரம் நாளும் முழங்குசெந்தூர்ச்
சிங்கக் கரும்புகழ்ச் செவ்வேட்கு வேற்கரச் சேவகற்குச்
சங்கக் கரும்புகுந் தாளான வண்மையைச் சாற்றறிதே

இ—ள்

புங்க-(மலரான) அம்புகளோடு கரும்புஉடை-வில்லான கரும்பை உடைய
மாரனை—மன்மதனை
வென்ற-செயித்தவரான
புனிதர்குழாம்—அடியவர்கள் திருக்கூட்டம்
முங்கு-முழுகியெழுகின்றதான
அ-அத்தகைய
கரும்புனல்—நீலநிறமான
சாகர—கடலானது
நாளும்-சதாவும்
முழங்கு-ஆரவாரம் செய்கின்ற
செவ்வேட்கு-முருகப்பெருமானுக்கு
வேற்கர-வேலாயுதமணிந்த கையுள்ள
சேவகற்கு-வெற்றிப் பெருமானுக்கு
சங்கு குண்டலமாகச் சங்கையும்
அக்கரும்-உருத்திராக்கமு மணிந்த பரமனும்
புகுந்து-சரணமாக அடைந்து
ஆளான-தொண்டரா யமைந்த

செந்தூர்-திருச்செந்தூரில் விளங்கும்
சிங்கக்கு-வீரமிக்க சிங்கம் ஒத்த குமாரக்கடவுளுக்கு
அரும்புகழ்-மேலான சிறப்பமைந்த
வண்மையை-பெருமையை
சாற்ற-எம்மாற்பேச
அரிதே-மிகவும் அருமையேயாம்
எ-று. 61
அக்கரும்-உண்மை உயர்வு பற்றிய சிறப்பு

அரிதான வப்பகை தன்மரு கா!செந்தி லாதிபனே
பெரிதான வப்பணி செஞ்சடை யார்விழி பெற்றமைந்தா
கிரிதான வப்பய னல்குமென் பார்துதி கேட்டுமிகப்
புரிதான வப்படி நீசொன்ன வார்த்தையும் பொய்க்குங்கொலோ

இ-ள்

தானவ-அசுரர்களின்
பகை-எதிரியான
அரிதன்-திருமாலின்
மருகா-மருகரே
செந்தில்-திருச்செந்தூரின்
ஆதிபனே-தலைமைக்கடவுளே
பெரிதான-பரந்துவந்த
அப்பு-கங்கை நீரை
அணி தரித்துள்ள
செம்சடையார்-சிவந்த சடையினரான பரமன்
விழி-கண்கள் மூலம்
பெற்ற-தோற்றுவித்தருளிய
மைந்தா-திருக்குமாரரே
கிரிதான்-உமது பணியான கிரியையே
நவப்பயன்-புதிய நல்ல பயனை
நல்கும்-கொடுக்கத்தக்கது
என்பார் என்னும் தவத்தோரது
துதிகேட்டு-தோத்திரங்களை வினவி
மிக-அதிகமாக
புரி-அவர்கட்குச் செய்யும்
தான-ஈகையையுடைய வள்ளலே
அப்படி-அந்தவிதமாக
நீசொன்ன-தேவரீர் கூறிய
வார்த்தையும்-திருவாய் மொழியும்
பொய்க்குங்கொல்-பயன் தராது போய்விடுமா?

பொய்யாம் பலகவி சொல்லஅஞ் சாதளம் போலிகட்கும்
செய்யாம் பலகவி தழ்வாய் திறந்தருள் செய்யும்பிரான்
கையாம் பலக வியதோகை யாடுடைக் கந்தன்பங்கின்
மையாம் பலகவிர் கண்ணார்கள் என்னை வளர்ப்பவரே

இ-ள்

பொய்யாம்·உண்மையற்ற  
பலகவி செந்தமிழ்ப்பாடல்கள் பல  
சொல்ல·பாடுவதற்கு  
அஞ்சாத-நாணமடையாத  
எம்போலிகட்கும்·எம்போன்ற சிலருக்கும்  
செய்·சிவந்த  
ஆம்பல்·அல்லிமலரின்  
அகஇதழ்—உள்இதழ்போன்ற  
வாய்திறந்து·கனிவாய் மலர்ந்து  
அருள்செய்யும்·திருவருள் புரிகின்ற  
பிரான்·தலைமைக் கடவுள்  
கை-துதிக்கை உடைய  
ஆம்பல்·யானையையும்  
அகவிய·கூவுகின்ற  
தோகை மயிலையும்  
ஆடு·ஆட்டினையும்  
உடை·வாகனமாகக் கொண்ட  
கந்தன்·கந்தப்பெருமானது  
பங்கின்·இருபுறத்தும் உள்ள  
மை-கண் மை  
ஆம்பு-அணியப் பெற்ற  
அலகுஅவிர்-அம்பு போன்றுள்ள  
கண்ணார்கள்-கண்களையுடைய தேவிமார்கள்  
என்னை·அடியேனை  
வளர்ப்பவர்·காத்தருளும் தாய்மாராவர்  
ஏ. று. ஏ. அசை 63

**வளரா கவலை முதலாய நோய்வெல்ல வானரமாம்**  
**தளரா கவனிகர் தன்மையுண் டாகும் தமிழ்ப்பெருஞ்சீர்**  
**உளரா கவந்தவிழ்ந் துய்யுஞ்செந் தூரிடத் துற்றுயர்வேல்**  
**கிளரா கவள்ளல்முற் கின்னைசொற் பாடல் கிளத்துனர்க்கே**

இ-ள்

தமிழ்ப்பெருஞ்சீர்-தமிழ்ப் புலமை  
உளராக-உடையவர்களாகி  
வந்து-தென்றற் காற்று  
அவிர்ந்து-தவழ்ந்து  
உய்யும்-சிறக்கின்ற  
செந்தூரிடத்து-திருச்செந்தூரில்  
உற்று·வந்தடைந்து  
உயர்வேல்-மேலான வேலாயுதம்  
கிளர்·விளங்குகின்ற  
பாடல்-திருப்புகழ்க் கவிகளை  
கிளத்துநர்க்கு·தோத்திரம் புரியும் அன்பர்கட்கு  
வளரா·மிகுதியாகாத  
கவலை-மனவருத்தம்  
முதலாய நோய்-முதலாகிய பலநோய்களை  
வெல்ல-வெல்வதற்கு  
வானரமாம்·குரங்குகளாகிய  
தள-சேனையினை உடைய  
ராகவன்நிகர்·ராமபிரானைப் போல

ஆக-திருமேனி கொண்ட
வள்ளல்முன்-குமாரக்கடவுள் முன்பு
இன்னைசொல்-அருணகிரிநாதர் பாடிய
தன்மை-பகையை வெல்லும் வீரம்
உண்டாகும்-அமையும்
எ. று. ஏ. அசை 65

இளத்துங் கவிதைத் தமிழ்வாணர் தந்துதி கேட்டுமகிழ்
உளத்துங் கலிதவிர்த் தென்னையும் ஆட்கொள உன்னிலையே
வளத்துங் கவேற்படை வானவ னேசெந்தில் வாழ்குமரா
அளத்துங் கசந்தநெஞ் சார்நிந்தை யாலிளைப் பாகினனே

இ-ள்

இளத்தும்-பலவிதமாகக் கூறுகின்ற
கவிதை-பாடல்களை இயற்றும்
தமிழ்வாணர் தம்-தமிழ்ப் புலவரது
துதி-தோத்திரப் பாடலை
கேட்டு-செவியில் ஏற்று
மகிழ்-இன்புறுகின்ற
உளத்தும்-தேவரீரது திரு உள்ளத்தில்
கலி-அடியேனுடைய வறுமையை
தவிர்த்து-நீக்கி
என்னையும்-அடியேனையும்
ஆட்கொள-அடிமை கொள்ள
உன்னிலையே-நினைக்கவில்லையே
வள-வலிமையும்
துங்க-வெற்றியும் நிறைந்த
வேற்படை-வேலாயுதம் தாங்கிய
வானவனே-முருகக் கடவுளே
செந்தில்-திருச்செந்தூரில்
வாழ்குமரா-எழுந்தருளியுள்ள பெருமானே
அளத்தும்-உப்பளத்தைவிட
கசந்த-கைக்கும் (வெறும்) தன்மையுள்ள
நெஞ்சார்-மனக்கயவர் கூறும்
நிந்தையால்-அவதூறன வசைமொழியால்
இளைப்பு-மனதில் மிகுந்த சோர்வை
ஆகினன்-அடையப்பெற்றேன்
எ. று. ஏ, அசை 65

ஆகார வன்னமும் நீரும் பகிரும் அரிமருகோன்
நாகார வன்னம்பர் தங்கனற் கட்சுதன் நற்பணையில்
வாகார வன்னம் துயில்செந்தி லான்திரு வாயிலுக்குட்
போகார வன்னருட் காளாவ ரோஇந்தப் பூதலத்தே

இ-ள்

ஆகார - உணவுக்குரிய
அன்னமும் - சோற்றையும்
நீரும் தண்ணீரையும்
பகிரும் - உயிர்கட்குப் பங்கிட்டுத்தருகின்ற
அரி - விட்டுணு மூர்த்தியின்
மருகோன் - மருகனானவர்
நாக - பாம்புகளை
ஆர - மாலைகளாகப் புனைந்த
வல் - அருளாற்றலுடைய
நம்பர் தம் சிவபிரானது
கனற்கண் - நெருப்புக்கண்வழி வந்த
சுதன் - திருக்குமாரர்
நல்பணையில் - நன்செய் வயலிடத்து
வாகுஆர - அழகு அமையும்படி
அன்னம் - அன்னப் பறவைகள்
துயில் - தூங்கும் சிறப்புள்ள
செந்திலான் - திருச்செந்திற் பெருமான்
திரு அப்பெருமானது திருக்கோயிலின்
வாயிலுக்குள் - சந்நிதி வாயிலுள்
போகார் - சென்று வணங்கப் பெருதவர்
அவன் - அக்கடவுளுடைய
அருட்கு - திருவருட்பேற்றினுக்கு
ஆள் ஆவாரோ - உரியவர்கள் ஆகத்தக்கவரோ? இல்லை என்றபடி
இந்தப்பூதலத்தே - இந்த மண்ணுலகத்தினிடமாக
எ. று 66

பூதலங் கண்ணிமை யார்வா னுலகும் புயங்கமுறும்
பாதலங் கண்ணிமை யாதிய மூன்றிற் பரவத்தக்க
மாதலங் கண்ணிமை வண்டார்தண் சோலை மருவுசெந்தூ
ராதலங் கண்ணிமை வாகனற் போற்றி யறிந்தனமே

இ-ள்

பூதலம் - நிலவுலகமும்
கண் இமையார் - கண் இமை யாதவர்கள் வாழும்
வானுலகும் - தேவருலகும்
புயங்கம் - நாகர்கள்
உறும் - வாழ்கின்ற
பாதலம் - பாதாள உலகமும்
கண்ணி - மதித்து
மைஆதிய - ஆடுமுதலாகச் சொல்கின்ற
கண்ணி - பூங்கொத்துக்களில்
மை - கரிய நிறமான
வண்டு ஆர் - வண்டுகள் மொய்க்கின்ற
தண்சோலை - குளிர்ந்த சோலைகள்
மருவு - பொருந்தியிருக்கின்ற
செந்தூர் ஆதல் - திருச்செந்தூர் ஆகும் என்பதை

மூன்றில்-மயில், யானை ஆகிய மூன்று வாகனத்தில்
பரவத்தக்க-தேவரீரை வணங்கக்கூடிய
மா-மாண்புபொருந்திய
தலம்-பெரும்பதியாவது
அம்கண்-அழகிய தோகையில் கண்களையுடைய
மை-மயிலை
வாகனன்-வாகனமாகவுடையமுருகனை
போற்றி-துதிசெய்து
அறிந்தனம்-தெரிந்துகொண்டேன் 67

அறிந்தவித் தாரக் கவிவாணர் போற்றும் அயில்முருகோன்
மறிந்தவித் தாரக் கடற்செந்தி லான்,முழு வஞ்சர்நெஞ்சைப்
பிறிந்தவித் தாரக் கனமார்பி னன்,புலப் பேயினத்தை
எறிந்தவித் தாரக்க மானன்விண் ணாடர்க் கினியவனே

இ—ள்.

அறிந்த-ஞானநுபவமிக்க
வித்தார-பலவிதக்கவிகளைப் பாடுகின்ற
கவிவாணர்-பெரும்புலவர்கள்
போற்றும்-புகழத்தக்க
அயில்-கூரியவேலாயுதம் புனைந்த
முருகோன்-குமாரக்கடவுள்
மறிந்த-அலைகள்புரளுகின்ற
வித்தார-விசாலமான
கடல்-கடற்கரையில் உள்ள
செந்திலான்-திருச்செந்திலாண்டவன்,
முழுவஞ்சர்-கபடம் நிறைந்தவரின்
நெஞ்சை-உள்ளத்தை
பிரிந்து-நீங்கிய
வி-சிறப்புடையதான
தார-மாலைகளையணிந்த
கன-பெருமைமிக்க
மார்பினன்-திருமார்புடையவர்
புல-ஐம்புலன்களாகிய
பேய்இனத்தை-அலகைக் கூட்டத்தை
எறிந்த-அடக்கிய
வித்தார்-ஞானவித்தாக உள்ளவரது
அக்கம்ஆனன்-கண்போன்றவரானமுருகப்பெருமான்
விண்நாடர்க்கு-தேவர்களுக்கு
இனியவன்-இன்பமளிக்குந் தலைவர் ஆவார்

எ. று. ஏ. அசை. 68

இனிய வனத்திருந் தாளிடத் தேகி இறைஞ்சிநிற்கும்
தனிய வனத்திருக் காளநல் வேள்வித் தலைவன்,செம்மை
கனிய வனத்திரு மேனியி னன்செந்தில் காத்தருளும்
மனிய வனத்திருங் கோவில்செல் டார்க்கெய்தும் மாதவமே

இ-ள்

இனிய-இன்பந்தருகின்ற
வனத்து-தினைப்புனத்
தினிடமாக
இருந்தாள்-காவல்செய்த
வள்ளிநாயகி
இடத்துஏகி-பக்கம்சென்று
இறைஞ்சி-அவனைப்பணிந்து
நிற்கும்-கெஞ்சிநிற்கின்ற
தனியவன்-ஒப்பற்றவன்
அ-அத்தகைய
திருக்கு-கொலைமுதலிய
குற்றங்கள்
ஆளா-கலவாத
நல்வேள்வி-புனித
யாகத்துக்கு
தலைவன்-முதல்வரானவர்
செம்மை-சிவப்புநிறம்
கனி-மிகுந்த
யவன-இளமையான
திருமேனியினன்-திருவுருவை
உடையவர்
செந்தில்-திருச்செந்தூர்ப்
பதியை
காத்தருளும்-பரிபாலிக்கின்ற
மன்-தலைவர்,
நியவனத்து-சிற்பமுறைப்படி
செய்த
இரும்-பெரிய
கோயில்-திருக்கோவில்
அழகை
கண்டார்க்கு-பார்த்தவர்
கட்கும்
எய்தும்-உண்டாகும்
மாதவமே-சிறந்த தவச்சிறப்பு
எ, று. 69

மாதவஞ் செய்யவல் லாரெதி ரேகி வளைக்கரும்பாற்
போதவஞ் செய்யனங் கன்றனக் கஞ்சிப் புலருகின்றேன்
சீதவஞ் செய்யக லாச்செந்தி லாஅயிற் செய்கைகொண்ட
நாதவஞ் செய்ய மயிற்றேருகை நீழல் நடுவிருந்தே.

இ—ள்

மாதவம்-மேலான தவத்தை
செய்ய-நியதியுடன்புரிய
வல்லாரெதிர்-தக்கவர்முன்பு
ஏகி-பனடகளோடுசென்று
வளை-வில்லாகவளைத்த
கரும்பால்-கரும்பினால்
போத-மிகுதியாக
அஞ்ச-பூங்கணைகள் ஐந்தை
எய்-செலுத்துகின்ற
செய்-வயல்களில்
அகலா-நீங்காத
செந்திலாய்-திருச்செந்தூர்க்
கடவுளே
அயில்-வேலாயுதத்தை
செங்கைகொண்ட-அழகிய
கையிலேந்திய
நாத-தலைவரே
அம்-அழகியதும்

அனங்கன் தனக்கு-மன்மதனுக்கு
அஞ்சி-மனம்பயந்து
புலருகின்றேன்-வருந்துகின்றேன்
சீத-குளிர்ந்த
அம்-தண்ணீர்ப்பொலிவு
செய்ய-செம்மையானதுமான
மயில்-மயிலினது
தோகை-கலாபத்தின்
நீழல்-அடியில்
நடு-மத்தியாகவிளங்கும்
விருந்தே-கண்விருந்தாகவுள்ள பெருமானே 70

நடுவிருந் தும்பரை யாள்வானைத் தேனுண்கை நத்திவரப்
படுவிருந் துத்தும்பி போற்றுங் கடம்பனைப் பண்டைமன்னர்
தொடுவிருந் துங்கக் கடற்செந்தி லானைத் துதிப்பதின்றிக்
கெடுவிருந் துன்பமெவ் வாற்றுற் றளரும் கிளத்துமினே

இ—ள்

நடு-நடுநிலையில்
இருந்து-நின்று
உம்பரை-தேவர்களை
ஆள்வானை-காத்தருள்பவரை
தேன்-மதுவை
உண்கை-உண்ணுவதை
நத்தி-விரும்பி
வரப்படு-வருகின்ற
விருந்து-அதிதிகளான
தும்பி-தேனீக்கள்
போற்றும்-புகழும்
கடம்பனை-கடம்பமாலை பூண்டவரை
பண்டை-அக்காலத்திருந்த
மன்னர்-சகரஅரசர்கள்
தொடு-தோண்டியதான
இரும்-விசாலமான
துங்க-புனிதமுற்ற
கடல்-கடலருகமைந்த
செந்திலானை-திருச்செந்தூரின் கடவுளை
துதிப்பது-தோத்திரம் புரிவதை
இன்றி-இல்லாமல்
கெடுவிர்-கெட்டழிபவரே
உம்-உங்களுடைய
துன்பம்-வருத்தங்கள்
எவ்வாற்றால்-எவ்விதத்தால்
தளரும்-நீங்கப்பெறுவீர்கள்
கிளத்துமின்-சொல்வீர்களாக
ஏ. று. ஏ. அசை 71

மின்றந்த மாதரை வேண்டித் துதித்துவில் வேள்கணையால்
பொன்றந்த மாதரை யாற்கலி நோயிற் பொருந்துகிலேம்
மன்றந்த மாதரை முற்றுஞ்சொல் சீர்த்தி மருவுசெந்தூர்
மன்றந்த மாதரை யென்றேத்தி யின்ப வளங்கொள்வமே.

## இ—ள்

மின் தந்த-மின்னலை ஒத்துள்ள
மாதரை-பெண்களை
வேண்டி-விரும்பி
துதித்து-பாராட்டி
வில்-கரும்பு வில்லையுடைய
வேள்-மன்மதனது
கணையால்-அம்புகளால்
பொன்றம்-அழியமாட்டோம்
தமாது-தங்கள்
அரையால்-வயிற்றுணவுக்காக
கலிநோயில்-வறுமைப்பிணியில்
பொருந்துகிலேம்-சேரமாட்டோம்
வந்துஅந்து-காற்றினால் சூழப்பட்டதும்
அம்-அழகியதும்
மா-பெரியதுமான
தரைமுற்றும்-உலகமுழுவதும்
சொல்-கூறுகின்ற
சீர்த்திமருவு சிறப்புப்பொருந்திய
செந்தூர்-திருச்செந்திற்பதிக்கு
மன்-தலைவரான முருகப்பெருமான்
தம்தம்-அவரவர்கட்கும்
ஆதர்-பற்றுக்கோடான
ஐ-தலைவனவர்
என்றுஏத்தி-என்பதாகச் சொல்லி
இன்பவளம்-பேரின்ப அநுபவத்தை
கொள்வம்-பெற்றுக் களிப்போம் 72

வளங்காட்டும் செந்திற் பதியானை உம்பரும் மாதவரும்
துளங்காட்டு வாகன மேறிய சேயைத் துணர்ப்பொழில்சூழ்
இளங்காட்டு வள்ளிக் கிசைந்தானை ஏத்துநர்க் கில்லை:உள்ளக்
களங்காட்டுன் மார்க்க தமதூதர் வாதனை காமனம்பே

## இ—ள்

வளம்-பலவளங்களையும்
காட்டும்-தன்பால்தோற்று விக்கச்செய்யும்
செந்தில்-திருச்செந்தூராகிய
பதியானை-பதிக்குரிய தலைவரை
உம்பரும்-தேவர்களும்
மாதவரும்-முனிவர்களும்
இளம்-இளமைப்பருவத்தோடு
காட்டு-தினைக்கொல்லையிலிருந்த
வள்ளிக்கு-வள்ளிநாயகிக்கு
இசைந்தானை-ஏற்றகணவரை
ஏத்துநர்க்கு-போற்றுவார்க்கு
இல்லை-இல்லாமல்நீங்கும்
உள்ள-மனத்தில்

துளங்கு-கண்டு அஞ்சம்படி
ஆட்டுவாகனம்-ஆட்டை
வாகனமாக ஏற்று
ஏறிய-செலுத்திய
சேயை-முருகக்கடவுளை
துணர்-பூங்கொத்துக்கள்
மலிந்த
பொழில்சூழ்-சோலைநிறைந்த
களம்-கள்ளமான அஞ்ஞானம்
என்ற
காள்-கருப்புபொருந்திய
துன்மார்க்கம்-தீயவழியும்
நமதூதர்-எமதூதர்கள்புரியும்
வாதனை-துன்பங்களும்
காமன்-மன்மதனுடைய
அம்புகளைகளின் இன்னலும்
73

காமனம் பாவன வற்ரு லிளைத்துக் கலங்குமென்றன்
தீமனம் பாவனம் ஆவதென் ரே,திருச் செந்தில்வாழ்
மாமனம் பாவனக் கொங்கைஉண் டாய்!வஞ்ச மாந்தரைச்சே
ராமனம் பாவனல் லோர்க்கெளிய யாய்சபி லாதிபனே

இ—ள்

காமன்-மன்மதனது
அம்பு-பாணங்கள்
ஆவனவற்ருல்-மற்றும்பல
தொடர்பால்
இளைத்து-மனம்சோர்ந்து
கலங்கு-கலக்கமடைகின்ற
என்றன்-அடியேனது
தீமனம்-கொடியஉள்ளம்
பாவனம்-புனிதத்தன்மையை
ஆவது-அடையப்பெறுவது
என்ரே-எந்தக்காலமோ
திரு-தெய்வத்தன்மையான
செந்திலில்-செந்தூர்த்
தலத்தில்
வாழ்-எழுந்தருளியுள்ள
மா-மாண்பமைந்த
மன்-தலைவரே
வன-அழகிய
அம்பா-உமாதேவியாரது
கொங்கை-தனப்பாலை
உண்டாய்-உண்ட
பெருமானே
வஞ்ச-கபடமிகுந்த
மாந்தரை-மனிதர்களிடத்தில்
சேராமல்-கூடாதபடி
நம்பு-தேவரீரை நம்பி
ஆவல்-அன்போடுவணங்
கின்ற
நல்லார்க்கு-உத்தமர்கட்கு
எளியாய்-எளிதில்
அருள்பவரே
சபில்-எல்லாமலைகட்கும்
ஆதிபனே-தலைவரே
எ. று. 74

சயிலாதி யாயநின் தானங்கள் தோறும் தமிழ்க்கவிதை
பயிலாதி யானென தென்றிறு மாந்து பரிசுகெட்டேன்
அயிலாதி யானிக்கும் அன்பர்கள் வாழ்செந்தி லாய்அகவும்
மயிலாதி யாசில் கவுமார ருடெனை வைத்தருளே.

இ-ள்

சயிலம் ஆதியாய-மலைகள் முதலான
நின்-தேவரீரது
தானங்கள்தோறும்-தலங்கள் எல்லாவற்றிலும்
தமிழ்க்கவிதை-தமிழ்ப் பாடல்களை
பயிலாது-கூறிவணங்காமல்
யான்எனது-அலங்கார மமகாரம்
என்று-என்பதால்
இறுமாந்து-செருக்கடைந்து
பரிசுகெட்டேன்-பண்பினை இழந்தேன்
அயிலா-வேலாயுதப் பெருமானே
தியானிக்கும்-உபாசனைபுரியும்
அன்பர்கள்-அடியவர்கள்
வாழ்-வசிக்கின்ற
செந்திலாய்-திருச்செந்தூரை யுடையவரே
அகவும்-ஓசையுடன் கூவுகின்ற
மயில்-மயிலையுடைய
ஆதி-முதல்வரே
ஆசு இல்-குற்றமற்ற
கவுமாரருடு-உமது அடியவர் குழுவில்
எனை-அடியேனை
வைத்து-சேரும்படி செய்து
அருள்-காத்தருள்வீராக
ஏ. று. ஏ. அசை

யான் - தானல்லாத உடலை நான் என்பதும், தனக்குப் புறம்பான பொருளைத் தனது என்பதும் மயக்கம், யானெனதென்னும் செருக்கு'' என்பது திருக்குறள்.

'நான்தான் என்றேதும் இரண்டும் கெட்டாலன்றித் தோன்றாது'' கந்தரலங்காரம். 75

வைத்த மனத்தைய மேவாநுன் அன்பை வளர்த்துமிவ்வா(று)
எய்த்த மனத்தை யமர்நீக்கிச் செய்யாவன் இன்பம்நல்காய்
பைத்த மனத்தை யலசியன் ஞரும் பரவுசெந்தூ
ரைத்த மனத்தைய வென்றுடு வார்க்கருள் ஆனந்தனே

இ—ள்.

வைத்த-தேவரீரது திருவடியின்மீது பதித்த
மனத்து-அடியேன் உள்ளத்தில்
ஐயம்-சந்தேக விபரீதங்கள்
மேவாது-பொருந்தாமல்
உன்-தேவரீரிடத்து
அன்பை-பத்தியை
வளர்த்தும்-மிகஏற்படுத்தியுங்கூட
இவ்வாறு-இவ்விதமாக
எய்த்தம்-மனஇளைப்புற்றேம்
அனத்து-அன்னவாகனத்து
ஐ-படைப்புக் கடவுளான பிரமனது
அமர்-தீ விதியின் போரை
நீக்கி-அழித்து
செய்யவள்-திருமகள் உதவுகின்ற
இன்பம்-பொருளின் மகிழ்வை
நல்காய் கொடுத்தருள்வீராக
பைத்த-பச்சை நிறமுடைய
மன்-காத்தற் கடவுளான திருமால்
அத்தை-இலக்குமி
அலரி-சூரியன்
அன்னரும்-போன்ற கடவுளர்கள்கூட
பரவு-வணங்கும் சிறப்பமைந்த
செந்தூர்-திருச்செந்தூரில்
ஐ-தலைவராக எழுந்தருளியுள்ள
தமன-வீரரே
தையஎன்று-தைய என்ற தாளத்தில்
ஆடுவார்க்கு-நடனம்புரியும் பரமனுக்கு
அருள்-உபதேசித்தருளிய
ஆனந்தனே-பேரின்ப வடிவினரே
எ. று. 76

ஆனந்த மாறு பொறியேயென் றோர்ந்தும் அவற்றைநம்பும்
நானந்த மாறு தவிர்நெறிக் கேகிலன் நன்மைதந்தாள்
சேனந்தமாறு குளமென் றுலாம்பணைச் செந்திற்செக்கர்
வானந்த மாறுணைக் கண்ணீந் துளாரை மணந்தவனே

இ—ள்

ஆனந்தம்-பேரின்பத்தை யுதவுவது
ஆறுபொறியே-சடாக்கர மந்திரமே
என்றுஓர்ந்தும்-என்பதாக உணர்ந்திருந்தும்
சேல்-மீன்களும்
நந்தம்-சங்குகளும்
ஆறு-நதி
குளம்-குளம் ஆகியவற்றை
என்று-நீர்நிலைகள் என்று கருதி

அவற்றை-அம்மந்திரத்தை
நம்பும்-நம்பிச்செபிக்கின்ற
நான்-அடியேன்
அந்த-அந்த உபாசனை
முறைக்கு
மாறுதவிர்-வேறுபாடில்லாத
நெறிக்கு-நல்லவழியில்
ஏகிலன்-செல்லாமலிருக்கின்
றேன்
நன்மை-அத்தகைய நல்ல
பண்பினை
தந்து-கொடுத்து
ஆள்-ஆண்டுகொள்வீராக
உலாம்-ஆர்வத்துடன் நீந்தி
விளையாடுகின்ற
பணை-வயல்வளமுடைய
செந்தில்-திருச்செந்தூரில்
செக்கர்-செந்நிறமான
வான்-ஆகாயம் போன்ற
அந்த-அழகினையுடையவரே
மால்-திருமாலின்
துணைக்கண்-இரண்டு
விழிகளும்
ஈந்துளாரை-பெற்ற மகளிரை
மணந்தவனே-மனைவியாக
ஏற்றவரே 77

மணத்த கடம்பலர்த் தாரால்மின் னார்தம் மனங்கவரும்
குணத்த கடம்பங் குலாவுசெந் தூர கொடுமையெல்லாம்
பணத்த கடம்படு சூர்மார்பு கீன்ற பரிதிவைவேல்
கணத்த கடம்பயில் வள்ளி மணாளமுன் நின்றருளே

இ-ள்

மணத்த-வாசனையுடைய
கடம்பஅலர்-கடப்ப
மலராலாகிய
தாரால்-மாலைகளால்
மின்னார்தம்-மாதர்களது
மனம்-உள்ளத்தை
கவரும்-தன்வசப்
படுத்துகின்ற
குண-பண்பினையிடைய
தக-தக்கவரே
டம்பம்குலாவு-ஆடம்பரமிக்க
செந்தூர-திருச்செந்தூர்
ஐயனே
கொடுமை-குரூரச்செயல்
எல்லாம்-அனைத்தும்
பணத்தகு-செய்ய
வல்லனா
அடம்படு-கோபம் நிறைந்தவ
னான
சூர்-சூரனது
மார்புகீன்ற-மார்பைப்பிளந்த
பரிதி-சூரியன்போல் ஒளி
மிகுந்ததும்
வை-கூர்மையுடையதுமான
வேல்-வேலாயுதத்தில்
நிணத்த-அமைந்த பகைவரின்
மாமிசத்தை உடையவரே
கடம்-மலைச்சரிவில்
பயில்-வசித்தவளான
வள்ளி-வள்ளிநாயகியின்
மணாள-கணவரே
முன்நின்று-எனதுநேரில்காட்சி
அருள்-அருள்புரிவீராக [யுதவி
எ, று. 78

நின்றசை தன்னிய மாங்குக! பார்ப்பதி நேமியம்புள்
என்றசை தன்னியப் பால்உண்ட வாய எழிற்செந்திலாய்
புன்றசை தன்னிய மத்திற்கு மாம்எனும் புல்லர்எய்தக்
குன்றசை தன்னியங் கேளாமெய் வாழ்வைக்
கொடுத்தருளே.

இ-ள்.

நின்ற-நிலைபெற்ற
சைதன்னியமாம்-பரம்பொருளாகிய
பார்ப்பதி-உமாதேவியின்
நேமியம்புள்-சக்கரவாகப் பறவையினை
என்று-போன்று
அசை-அசைகின்ற
தன்னிய-கொங்கைகளிலுண்டான
பால்உண்ட-பாலை அருந்திய
வாய-திருவாயுடையவரே
எழில்-அழகு நிறைந்த
செந்திலாய்-திருச்செந்தூருடைய பெருமானே
புன்-இழிவான
தசை-மாமிசத்தை
தன்-தனது
நியமத்திற்கும்-வழிபாட்டினுக்கும்
ஆம்எனும்-ஆகுமென்று கூறும்
புல்லர்-தாழ் மக்கள்
எய்தா-அடையமுடியாத
குன்ற-பல மலைகளையுடைய வரே
சை,தன்-இகழ்ச்சியோடுகூடிய
இயம்-சொற்களை
கேளா-அடியேன்காதிற் கேளாத
மெய்வாழ்வை-உண்மையான நிலைமையை
கொடுத்தருள்-உதவியருள்வீராக 79

கொடுங்காம ராயனை நான்முக வேதனைக் கூற்றையெண்ணி
நடுங்காமல் நின்னருட் பேறுதந் தாண்டருள் நாற்புறத்தும்
நெடுங்கா மருவுசெந் தூர்க்கந்த னேசெழு நீபமலர்த்
தொடுங்காமர் நீங்கருந் தோளா றிரண்டுடைச் சுந்தரனே

இ-ள்

கொடும்-கொடுமைமிகு
காமராயனை-மன்மதனையும்
நெடும்-நீண்டுவளர்ந்த
காமருவு-சோலைகள்சூழ்ந்த

நான்முக-நான்கு முகங்களையுடைய
வேதனை-பிரமதேவனையும்
கூற்றை-இயமனையும்
எண்ணி-மனதில் நினைத்து
நடுங்காமல்-அஞ்சிவருந்தாமல்
நின்-தேவரீருடைய
அருட்பேறு-திருவருட் செல்வத்தை
தந்து-கொடுத்து
அருள்-ஆண்டுகொள்ள வேண்டும்
நாற்புறத்தும்-நான்கு திசைகளிலும்
செந்தூர்-திருச்செந்தூரில் எழுந்தருளிய
கந்தனே-கந்தசுவாமியே
செழும-வளமாக மலர்ந்த
நீபமலர்-கடப்பமலர்மாலைகளை
தொடும்-அணிந்துள்ள
காமர்-அழகானது
நீங்கஅரும்-மாறாத
தோள்-திருப்புயங்கள்
ஆறுஇரண்டு-பன்னிரண்டு
உடை-கொண்டுவிளங்கும்
சுந்தரனே-அழகுத்தெய்வமே
எ. று. 80

சுந்தர மேவிய தோகையின் மீது சுடர்அயிலோ(டு)
அந்தர மேவிய ஞாருக வந்தினி தாண்டருள்வாய்
எந்தர மேவியற் கண்ணார்க் குருகி இளைக்கும்நெஞ்சை
உந்தர மேவிய வாறுஞ்செய் யேம்செந்தில் ஊரவனே

இ—ள்.

சுந்தரம்-மிகுந்த பேரழகு
மேவிய-பொருந்தியுள்ள
தோகையின்மீது-மயில் வாகனத்தில்
சுடர்-ஒளிவீசுகின்ற
அயிலோடு-வேலாயுதத்துடன்
அந்தரமே-ஆகாயமே
வியன்-பெரியதான
ஆறுஆக-வழியாக்கொண்டு
வந்து-எழுந்தருளி
இனிது-நல்லமுறையில்
ஆண்டருள்வாய்-திருவருள் புரிவீராக
ஏவு-அம்பையும்
இயல்-ஒத்ததான
கண்ணார்க்கு-கண்களையுடைய மாதர்கட்கு
உருகி-மனங்கசிந்து
இளைக்கும்-சோர்வடைகின்ற
நெஞ்சையும்-அடியேன் மனதையும்
தரம்-தேவரீருக்கு உரியதாக
அர்ப்பணியாதிருக்கின்றேம்
ஏவியவாறும்-சொன்ன வண்ணமும்
செய்யேம்-பணிபுரியாமல் இருக்கின்றேம்

எந்து-வஞ்சிக்கின்ற
அரம்-கூரிய அரத்தையும்
செந்தில்-திருச்செந்திலென்ற
ஊரவனே-திருத்தலமுடைய
வரே 81

ஊரகந் தான்கதி யென்றிரந் துண்ணும்
ஒருவன் உண்மைத்
தாரகந் தாங்க விரித்துரைத் தாய்! அருட் சத்திவைவேல்
வீரகந் தானைத் திருச்செந்தி லாய்! புன வேடமகள்
வாரகந் தாவெனப் போற்றேன் எண் சித்தும் வழங்குதியே

இ-ள்.

ஊர்-நகரினிடத்துள்ள
அகம்தான்-வீடுகள் தாம்
கதிஎன்று-புகலிடம் என்
பதாக எண்ணி
இரந்து-யாசித்து
உண்ணும்-அருந்தியவ
ரென்கிற
ஒருவன்-ஒப்பற்ற சிவபிரான்
உண்மை-உறுதிப்பொரு
ளான
தாரகம்-பிரணவத்தின்
உட்பொருளை
தாங்க-மனம்கொள்ளும்படி
விரித்து-விளக்கமாக
உரைத்தாய்-செவியில்
கூறியவரே
அருட்சத்தி-திருவருள் ஞான
சத்தியையே
வைவேல்-கூரிய வேலாயுத
மாகப்பெற்ற
வீர வெற்றிப்பெருமானே
கந்து-கட்டுத்தறியில்
ஆனை-யானைகள் விளங்கும்
திருச்செந்திலாய்-திருச்செந்
தூரையுடையவனே
புன-தினைப்புவத்தில்வாழ்ந்த
வேடமகள்-வள்ளிநாயகியிடம்
வார-அன்புடையவரே
கந்தா-கந்தக்கடவுளே
என-என்றுகூறி
போற்றேன்-துதியாமலிருக்
கின்றேன் ஆனாலும்
எண்-எட்டுவகைப்பட்ட
சித்தும் சித்திகளையும்
வழங்குதி-கொடுத்தருள்
வீராக
எ. று. ஏ. அசை 82

வழங்கு மருமைத் தமிழ்ப்பாட லாலுனை
வாழ்த்திலன், கைக்
கழங்கு மருமை விழியாருக் கேங்கினன் காத்தருள்வாய்
மழங்கு மருமை தருபால னேசெந்தில் வாழ்குகனே
கிழங்கு மருமை வனவேட ருந்தொழு கேகயனே

இ-ள்

வழங்கும்- அன்பர்கூறியுள்ள
அருமை-அரும்பொருள் செறிந்த
தமிழ்ப்பாடலால்-தமிழ்க் கவிகளைச் சொல்லி
உனை-தேவரீரை
வாழ்த்திலன்-துதிசெய்தே னில்லேன்
கை-தமது கைகளில்
கழங்கு-கழங்குக்காய்களை
மரு-பொருந்தக்கொண்டு
மை-மை தீட்டப்பெற்ற
விழியாருக்கு-கண்ணை யுடையமாதருக்கு
ஏங்கினன்-மனம் ஏக்க முற்றேன்
காத்து-அடியேனைக் கண் நோக்கி
அருள்வாய்-ஆட்கொள்ள வேண்டும்
மழம்-இளமையும்
குமர்-கன்னித்தன்மையையும் கொண்ட
உமை-பார்வதியம்மை
தரு-ஈன்றருளிய
பாலனே-குழந்தைப் பெருமானே
செந்தில்-திருச்செந்தூரில்
வாழ்குகனே-எழுந்தருளிய குகக்கடவுளே
கிழங்கும்-வள்ளிக்கிழங்கும்
அரும்ஐவன-அரிய மலைநெல்லை யும் உணவாகக்கொள்ளும்
வேடரும்-வேட்டுவ மக்களும்
தொழும்-வணங்கி வழிபடு கின்ற
கேகயனே-மயில்வாகனப் பெருமானே 83

கேகய வாகனத் தையன்,செஞ் சேவலன் கிள்ளையுறும்
வாகய வாகனத் தையமர் செந்திலில் வாழ்குமரன்
மாகய வாகனத் தையச கோதரன் வந்தெனதுன்
ஒகய வாகனத் தையகுன் தாள் உல குய்யுமன்றே

இ—ள்

கேகய-மயிற்பறவையான
வாகனத்து-ஊர்தியை யுடைய
ஐயன்-முருகப்பெருமான்
செம்-செம்மையான
சேவலன்-சேவற்கொடிப் பெருமான்
மா-பெருமையுள்ள
கய-யானையின் (சிரமமைந்த)
ஆகன்-திருவுருவினரான விநாயகர்
நத்து-விரும்புகின்ற
ஐய-அழகுடைய
சகோதரன்-இளைய நயினவர்

கிள்ளை-(அருணகிரிநாதரான) கிளி
உறும்-தான் தங்கியுள்ள
வாகு-புயங்களிலிருந்தும்
அயவா-விட்டுநீங்கப் பெருதவராகி
கல்நத்து-மலைகளில் வீற்றிருக்கும்
ஐ-அரசர்
அமர்-மதில்களோடு கூடிய
செந்திலில்-திருச்செந்தூரினிடத்து
வாழ்குமரன்-எழுந்தருளியுள்ள குமரன்
வந்து-எழுந்தருளி
எனதுள்-அடியேன் மனதுள்
ஓகை-மகிழ்ச்சியுண்டாக
அவா-என் விருப்பங்களையும்
கனத்தை-பெருமையையும்
அருள்நாள்-கொடுத்தருளும் நாளில்
உலகு-இவ்வுலகமானது
உய்யும்-நன்மையடையும்
அன்றே-அசை
எ. று. 84

**உய்யக் கனகவு மாரர்தம் மோடெனை யூடிருத்தி**
**வையக் கனகம் விளைப்பதென் றோ,செந்தில் வாழ்முருகா**
**மையக் கனகனைக் கீன்றோன் மருக! மதன்பொடியச்**
**செய்யக் கனகம் பிரியா உரித்துடைத் தேசிகனே**

### இ-ள்

உய்ய-அடியேன் ஈடேறும்படி
கன்-பெருமை மிகுந்த
கவுமாரர் தம்மொடு-தேவரீரது அடியார் கூட்டத்தில்
எனை-அடியேனை
ஊடு-நடுவாக
இருத்தி-இருக்கும்படி
வை-வைக்கின்றதான
அ-அவ்வித
கனகம்-பெருஞ்செல்வத்தை
விளைப்பது-அமையச்செய்வது
என்றோ-எந்தக்காலமோ
செந்தில்-திருச்செந்திலம் பதியில்
வாழ்குமரா-வீற்றிருக்கும் கடவுளே
மைய-ஆணவ இருள்மலிந்த
கனகனை-இரணியனை
கீன்றோன்-பிளந்த திருமாலின்
மருக-மருகரே
மதன்-மன்மதன்
பொடிய-சாம்பலாகும்படி
செய்-செய்தருளிய
அக்கன்-அக்கமாலை பூண்ட பரமனது
அகம்பிரியா-மனதைவிட்டகலாத
உரித்துடை-உரிமை உடைய
தேசிகனே-சற்குருநாதரே 85

தேசி யணிக்கனி நேர்முலைக் குஞ்சரி செம்பவளப்
பாசி யணிக்கனி யாம்வள்ளி கேள்வன் பசியமயில்
வாசி யணிக்கனி லந்தொறும் போங்குகன் மன்னு
செந்தூர்
ஆசி யணிக்க னியமோவெண் டாமரை அங்கனையே

இ-ள்

தேசி-எலுமிச்சையின்
அணி-அழகிய
கனிநேர்-பழந்தனை ஒத்த
முலை-தனங்களையுடைய
குஞ்சரி-தெய்வயானை
யம்மைக்கும்
செம்-செந்நிறமுடைய
பவள-பவள மணியாலான
பாசிஅணி-மாலையைப்பூண்ட
க(ன்)னியாம்-கன்னியாகிய
வள்ளி-வள்ளிநாயகிக்கும்
கேள்வன்-கணவராவர்
பசிய-பச்சை நிறமான
மயில்-மயில் என்கின்ற
வாசி-வாகனத்தையுடையவன்
அணி-நெருங்கி
கல்நிலம்தொறும்-மலைநிலங்
களிலெல்லாம்
போம்-சென்றுவரும்
குகன்-குகக்கடவுள்
மன்னு-நிலையாகத்தங்கிய
செந்தூர்-திருச்செந்தூர்த்
தலத்தில்
ஆசி-பெறும் நல்லாசிகள்
அணிக்கு-அணிகலன் முதலிய
பிற செல்வங்களுக்கு
அனியமோ-புறம்பாயுள்ளதா?
(இல்லையென்றபடி)
வெண்தாமரை-வெண்ணிறத்
தாமரை மலரில் வாழும்
அங்கனையே-கலைமகளே
எ, று. 86

அங்கச மானனை யாராடுங் கோயி லவிர்செந்தில்வேல்
துங்கச மானமில் லாக்குரு நாத துதிக்கைவென்னை
வெங்கச மானவில் வீரகெம் பீர விஞோதவென்றி
தங்கச மான மழியாது காத்தெனைத் தாங்கலென்றே

இ—ள்

அங்கச-இச்சையைவிளைக்கின்ற
மான் அனையார்-மான்போன்ற மகளிர்
ஆடும்-நாட்டியம் செய்யும்
கோயில்-திருக்கோயில்
அவிர்-விளங்குகின்ற
செந்தில்-திருச்செந்திலில் வாழும்
வேல்-வேலாயுதம் புனைந்த
துங்க-புனிதமானவரே
சமானமில்லா-இணையற்ற
குருநாத-சற்குருநாதரே
துதிக்கை-தும்பிக்கையும்
வெள்ளை-வெண்ணிறமும் கொண்ட
வெம்-விரும்பத்தக்க
கச-திருஞானவேழமென்ற யானைக்குரியவரே
மால்-விட்டுணுமூர்த்தி
நவில்-பாராட்டிக்கூறும்
வீர-வெற்றி மிகுந்தவரே
கெம்பீர-பெருமிதமுடையவரே
விநோத-ஆச்சரியப்படத்தக்க
வென்றி-வீரத்தன்மை
தங்கு-பொருந்தப்பெற்ற
அச ஆட்டுவாகனமுடையவரே
மானம்-அடியேனுடைய பெருமை
அழியாது-கெடாதபடி
காத்து-பாதுகாத்து
எனை-அடியேனை
தாங்கல்-ஆதரிப்பது
என்று-எக்காலம்?
எ. று, ஏ. அசை 87

தாங்கரு மானந்த வாரியி லாழ்த்தித் தழலெனவுள்
வேங்கரு மாவந்தச் செய்தருள் வாய்! அடல் வெள்விடையார்
பாங்கரு மானந்த குசெந்தில் வாழ் அயிற் பண்ணவனே
யாங்கரு மானந்த வாதையுற் றேம்அறிந் தில்லைகொல்லோ

இ—ள்.

தாங்க-சமாளிக்க
அரும்-முடியாத
ஆனந்தவாரியில்-பேரின்பக் கடலில்
ஆழ்த்தி-முழுகச்செய்து
தழல்என-தீயைப்போல
உள்-மனத்தில்
பாங்கர்-பக்கத்தில் அமர்ந்த
உமா-பார்வதிதேவியின்
நந்தன-குமாரரானவரே
செந்தில்வாழ்-திருச்செந்தூரில் விளங்கும்
அயில்-வேலாயுதமணிந்த
பண்ணவனே-முருகக்கடவுளே

வேம்-துயரால்வெதும்புகின்ற
கருமால்-பிறவித்துன்பங்களை
நந்த-கெடும்படி
செய்தருள்வாய்-திருவருள் புரிவீராக
அடல்-வலிமையுள்ள
வெள்-வெண்ணிறமான
விடையார்-இடப வாகனமுடைய சிவபெருமான்
யாம்-அடியேம்
கரு-அஞ்ஞான இருள்
மால்-ஆசைகள் [மூடியதால்
நந்த-மிகவளர
வாதைஉற்றேம்-துயரமடைந்துள்ளோம் (இதைத்தேவரீர்)
அறிந்திலைகொல்-தெரிந்ததில்லையோ
ஏ. று. ஏ. அசை 88

இல்லாமை யாலினைத் தேங்கிடு மென்றற்(கு) இரங்கிஒரு
சொல்லாமை யார்முதற் றரகம் ஈந்தருள் தொல்கடலில்
நல்லாமை யானவன் றன்மரு காசெந்தில் நாயகனே
எல்லாமை யாநின் செயலேயென் றெண்ணுவ
தென்எண்ணமே

இ—ள்

இல்லாமையால்-வறுமையினால்
இளைத்து-மெலிவடைந்து
ஏங்கிடும்-ஏக்கமுறுகின்ற
என்றற்கு-அடியேனுக்கு
இரங்கி-திருவுள்ளத்தைகொண்டு
ஒரு-ஒப்பற்றதாயும், ஒன்றாயுமுள்ள
சொல்ஆம்-வார்த்தையாகிய
ஐஆர்-தலைமைபெற்ற
முதல்-வேதத்தின் முதலாயமைந்த
தாரகம்-பிரணவப்பொருளை
ஈந்தருள் உபதேசித்தருள்வீராக
தொல்-மிகப்பழமையான
கடலில்-திருப்பாற்கடலில்
நல்-சிறந்த
ஆமை-அமுதம் கடைந்தபோது ஆமையுருவாகி
ஆனவன்தன்-தாங்கிய திருமாலின்
மருகா-மருகரே
செந்தில்-திருச்செந்திற் பதியின்
நாயகனே-தலைமைக்கடவுளே
எல்லாம்-உலகில் நிகழும் எச்செயலும்
ஐயா-ஐயனே
நின்-தேவரீருடைய
செயலே-திருவருள் விளையாட்டேல
என்று-என்பதாக
எண்ணுவது-நினைப்பது
என் அடியேனுடைய
எண்ணம்-கருத்தாகும்
ஏ. று. ஏ. அசை 89

என்னத்த னஞ்சம் நிகர்தாய் குருமுதல் யாவும்நின் னுள்
உன்னத்த னஞ்சடக் குந்திறல் ஈந்தருள் ஓதமுந்நீர்
வன்னத்த னஞ்சயன் போல்வார்பல் லோர்உறை வான்செந்திலாய்
அன்னத்த னஞ்சப் புடைத்தாய்மற் றில்லையோர் ஆதரவே

இ—ள்.

என்னத்தன்-எனக்குரிய அத்தன்-அறிவூட்டிய தந்தையும்
அஞ்சம்நிகர்-அன்னம்போன்ற தாய்-பெற்றதாயும்
குரு-ஞானநிலையுதவிய ஆசானும்
முதல்-உலகத்துக்குமுதன்மையான தெய்வமும்
யாவும்-மற்றும் எல்லாமும்
நின்னுள்-தேவரீரிடமே உள்ளன என்பதாக
உன்ன-எண்ணித்தியானிக்க
தன்-என்னிடத்தமைந்த
அஞ்சு-ஐந்து பொறிபுலன்களையும்
அடக்கும்-அவற்றின்வழிச் செல்லாமல் கட்டுப்படுத்தும்
திறல்-தவ வலிமையை
ஈந்தருள்-உதவியருள வேண்டும்
ஓத-ஒலிக்கின்ற அலைகளையுடைய
முந்நீர்-கடலினை ஒத்த
வன்ன-நிறத்தையுடைய
தனஞ்சயன்-அருச்சுனன்
போன்றார்-ஒத்த வீரர்கள்
பல்லோர்-பலபேர்
உறை-தங்கிப் பணிகின்ற
வான்-பெருமைமிக்க
செந்திலாய்-திருச்செந்திலாண்டவரே
அன்னத்தன்-அன்ன வாகனமுடைய பிரமன்
அஞ்ச பயந்து போற்றும்படி
புடைத்தாய்-குட்டிச் சிறை செய்தவரே
மற்று-தேவரீருக்குப்புறம்பாக
ஓர்ஆதரவு-ஒருபற்றுக்கோடு
இல்லை-அடியேனுக்குக் கிடையாது
எ. று. ஏ. அசை 90

ஆதவ னம்புலி யாதியர் போற்றும் அணிச்செந்திலான்
மாதவ னம்புலித் தோலுடை யான்அயன் வாழ்த்தும்பிரான்
சீதவ னம்புலி வாழ்வாள் கணவன் திருப்பதத்திற்
பூதவ னம்பு லிடுவாருக் கின்பப் பொலிவெய்துமே

இ—ள்

ஆதவன்-சூரியன்
அம்புலி-சந்திரன்
வாழ்வாள்-வாழ்ந்த வள்ளி நாயகியின்

ஆதியர்-முதலிய கோள்கள்
போற்றும்-வணங்குகின்ற
அணி-அழகு மிகுந்த
செந்திலான்-திருச்செந்தூர்க் கடவுள்
மாதவன்-திருமாலும்
அம்-அழகிய
புலித்தோல்-புலியினதுதோலை
உடையான்-ஆடையாகக் கொண்ட சிவபிரானும்
அயன்-பிரமதேவனும்
வாழ்த்தும்-துதிசெய்கின்ற
பிரான்-பெருமான்
சீத-குளிர்ச்சி உடைய
வனம்-காட்டினிடம்
பு(ல்)வி-பொருந்தி
கணவன்-கணவர்
திருப்பதத்தில்-அப்பெருமானது திருவடிகளில்
பூ-(உயர்ந்த மணமிக்க) மலர்களையும்
தவனம்-மருக்கொழுந்து போன்ற (இலைகளையும்)
புல்-அருகு முதலிய மணமற்ற வகைகளையும்)
இடுவார்க்கு-அன்புடன் அருச்சிப்பவர்கட்கு
இன்ப-மகிழ்ச்சியில்
பொலிவு-மனநிறைவு

எய்தும்-அப்பெருமான் அருளால் கிடைக்கும்
ஏ ம. ஏ. அசை 91

பொலியுங் களப முலைமாத ராடும் புனற்செந்திலாய்
மலியுங் களபன் மலர்த்தொடை யாய்இரு மாதர்பங்கா
புலியுங் களபமுங் கொன்றூர் புகழும் புலவதுதி
சொலியுங் களபயம் பெற்றுமென் நெஞ்சம் துயர்ப்பட்டதே

இ-ள்

பொலியும்-பொருந்தப் பூசிய (அழகிய)
களப-சந்தனத்தைஉடையதான
முலைமாதர்-தனங்களைக் கொண்ட பெண்கள்
ஆடும்-நீர் ஆடல் பயில்கின்ற
புனல்-நீர்நிலைகளையுடைய
செந்திலாய்-திருச்செந்திற் பெருமானே
மலியும்-அதிகமாக
களம்-கழுத்திலணிந்த
பல்மலர்-பலவித மலர்களாலாகிய
பங்கா-பக்கத்தில்-அமையக் கொண்டவரே
புலியும்-தாருகவன முனிவர் ஏவிய புலியையும்
களபமும்-யானையையும்
கொன்றூர்-கொன்று தோலைப் பூண்ட பரமன்
புகழும்-போற்றி செய்யும்
புலவ-முழுதுணர்புலவரே
துதி-துதிப்பாடல்களை
சொ(ல்)லிய-கூறித் துதித்த பயனாக
உங்கள்-தேவரீரது
அபயம்-அடைக்கலத்தை
பெற்றும்-அடைந்திருந்தும்

தொடையாய்-மாலைகளை உடையவரே
இருமாதர்-வள்ளி தெய்வயானை என்பவர்களை
என்நெஞ்சம்-அடியேன் மனம்
துயர்ப்பட்டது-சஞ்சலமடைந்தது
ஏ. று. ஏ. அசை 92

துயரா வினைத்திரள் மோகக் கடலிற் சுழன்றுமனம்
அயரா வினைய தமிழ்ச்சீருண் டாகும் அருள்பெருகும்
உயரா வினையிவர் வார்மைந்த னைச்செந்தி லூரவனைப்
பையரா வினைஅஞ்ச ஆடும யூரனைப் பாடுநர்க்கே

இ—ள்

துயரா-துன்பம் அடையச் செய்யாத
வினைத்திரள்-இருவினைக் கட்டங்கள்.
மோக-ஆசையென்கின்ற
கடலில்-சமுத்திரத்தில்
சுழன்று-தத்தளித்து
மனம்-நெஞ்சமானது
அயரா-சோர்வடையாது
விநய-இனிமையான
தமிழ்ச்சீர்-தமிழ்ப்புலமை
உண்டாகும்-ஏற்படும்
அருள்-திருவருட்பேறு
பெருகும்-மிகவும் அமையும்
உயர்-சிறந்த
ஆவினை-இடப வாகனத்தில்
இவர்வார்-ஏறிச்செலுத்தும் பரமனது
மைந்தனை-திருக்குமாரனை முருகப்பெருமானை
செந்தில்-திருச்செந்தில் என்ற
ஊரனை-தலத்தைக்கொண்ட கடவுளை
பை-விடப்பையுள்ள
அராவின்-பாம்புகளின்
ஐ-தலைவனை ஆதிசேடன்
அஞ்ச-பயமடையும்படி
ஆடும்-ஆடல்புரியும்
மயூரனை-மயில்வாகனப் பரமனை
பாடுநர்க்கு-தோத்திரம் புரியும் அடியவர்களுக்கு
ஏ று. ஏ. அசை 93

**பாடாண் மையிலுயர் பைங்கிளிக் கன்று பதங்கொடுத்தாய்**
**ஆடாண் மையிமிவர்ந் தாய்சேவ லைக்கொடி யாக்கிக்கொண்டாய்**
**கேடாண் மையில்லவர் சில்லோர்க்கும் கீர்த்தி கிடைக்கச்செய்தாய்**
**தாடாண் மையிலங்கு செந்தூர இன்றென் றனக்கிரங்கே**

இ-ள்

பாடு-இனிய திருப்புகழாற் பாடுகின்ற
ஆண்மையில்-அன்புத் திறத்தில்
கேள்-அன்பும் (உரிமையும்)
தாண்மை-பணிவுத்தன்மையும்
இல்லவர்-இல்லாதவராயிருந்த
சில்லோர்க்கும்-ஒருசிலர்க்கும்

உயர்-சிறப்பமைந்த
பைங்கிளிக்கு-பச்சைக்கிளி
வடிவுற்றஅருணகிரி
நாதருக்கு
அன்று-முன்னளில்
பதம்-திருவடியை
(உயர்ந்த பதவியை)
கொடுத்தாய்-உதவி
யருளினீர்
ஆடு-யாகத்திற்பிறந்த
ஆட்டை
ஆண்மையில்-வீரமிகுதியால்
இவர்ந்தாய்-ஏறிச்
செலுத்தினீர்
சேவலே-கோழியொன்றை
கொடி-வெற்றிக்கொடியாக
ஆக்கிக்கொண்டாய்-ஏற்
றருளினீர்
(பொய்யாமொழி, நக்கீரர்
ஆதியோர்)
கீர்த்தி-பெருஞ்சிறப்பினை
கிடைக்க-அடையும்படி
செய்தாய்-வலிந்து ஆண்டு
அருள்புரிந்தீர்
தாடாண்மை-தவமுயற்சி
யுடையோர்
இலங்கு-பலர் விளங்குகின்ற
செந்தூர-திருச்செந்திற்
பெருமானே
இன்று-இத்தினத்தில்
என்றனக்கு-அடியேனுக்கும்
இரங்கு-கருணைபுரிந்
தருள்வீராக
94

தனக்குங் குமத்துணைக் கோட்டாற் பொருது தவஞ்செய்யுமா
மனக்குங் குமத்துவம் நல்குமின் னார்மையல் வாரிசுற்றும்
எனக்குங் குமத்துவி தந்தரு வீர்கொல் எழிற்செந்திலீர்
கனக்குங் குமத்து முடிப்பார்க் குவைத்த கருணைகொண்டே

இ-ள்

தன-கொங்கைகளான
குங்கும-வாசனைச்
சாந்தணிந்து
துணை-இரண்டாயவிர்ந்த
கோட்டால்-கொம்புகளால்
பொருது-போரிட்டு
தவஞ்செய்யும்-தவம்புரி
கின்ற
மா-பெருமைமிக்க
மனக்கும்-உள்ளத்துக்கும்
குமத்துவம்-சஞ்சலத்தை
நல்கும்-உண்டாக்குகின்ற
மின்னார்-மாதர்களுடைய
மையல்வாரி-மோகக்கடலில்
உங்கு-இவ்விடத்தில்
உம்-தேவரீருடன்
அத்துவிதம்-இரண்டு
பாடற்ற அநுபூதியை
தருவீர்கொல்-கொடுத்
தருளுவீரோ
எழில்-அழகுமிக்க
செந்திலீர்-திருச்செந்தூரை
யுடையவரே
கன்-கல்போன்ற
அக்கும்-உருத்திராக்கமணியும்
கு-எளிய
மத்தும்-ஊமத்தை மலரையும்
முடிப்பார்க்கு-அணியும்
சிவபிரானுக்கு

சுற்றும்-சிக்கியுழல்கின்ற
எனக்கும்-அடியேனுக்கும் கூட
வைத்த-திருவருள்செய்த
கருணைகொண்டு-தயவை என்மீது கொண்டு
எ. று. ஏ, அசை 95

கருமற வன்றனை யன்ன வுருவம் கவினவந்தங்
கொருமற வன்றனை யன்ன வுருவம் உறச்செய்தவேன்
குருமற வன்றனை யன்ன வுருவங் குரிக்கும்செந்தூர்
மருமற வன்றனை யன்ன வுருவம் வகுத்தவனே

இ-ள்.

கருமறு-பிறவியில் அமைந்த
அவன்றனை-மனிதன் ஒருவனை
அன்ன-ஒத்தமைந்த
உருவம்-வடிவத்தை
கவினவந்து-பொருந்திவந்து
அங்கு-அங்கு மீன் குவியவில் காவல் செய்திருந்த விடத்தில்)
ஒருமறவன்தனை-ஒருமீனவனை
அல்-அஞ்ஞான இருள்
நவு-நீங்கப்பெற்ற
உருவம்-உண்மை வண்ணத்தை
உற-அடையும்படி
செய்தவேள்-திருவருள் புரிந்த ஆறுமுகக் கடவுள்
குரு-குருபரன்
மல்தவன்தன்-வலிய தவசியான அகத்தியருக்கு
ஐயன்-தலைவன்
அவ்-அத்தகைய
உரு-அழகு
அங்குரிக்கும்-தோன்றி விளங்குகின்ற
செந்தூர்-திருச்செந்தூரில்
மரும்-எழுந்தருளியுள்ள
அரவன்-பாம்பை ஆபரணமாக உடைய சிவபிரானது
தனையன்-திருக்குமாரர்
அவுருவம்-பல அதிசயங்களை
வகுத்தவனே-அவ்விடத்து நிகழ்த்தியவர்.

வகுப்பா னலந்தெரிந் தேத்துகி லேன்,நின்முன் வார்விழிநீர்
உகுப்பா னவன்பரை யெள்வேன் எனக்கென் றுதவிசெய்வாய்
மிகுப்பா னலியவுங் கண்டனை யேகன்றை விட்டுவரும்
தொகும்பா னருந்து மலர்ச்சோலைச் செந்திற் சுராதிபனே

இ-ள்.

வகுப்பால்-வகுப்புச் செய்யுளால்
நலம்தெரிந்து-தேவரீருடைய பெருமையறிந்து
உப்பால்-ஆசையினால்
நலியவும் வருந்தும்படி
கண்டனையே-பார்த்திருக்கின்றீரே

ஏத்துகிலேன்-போற்றினேனில்லை
நின்முன்-உமது திருமுன்பு நின்று
வார்விழி-நீண்டகண்களினின்று
நீர்-கண்ணீரை
உகுப்பான-வடிக்கின்ற
அன்பரை-உண்மையன்பர்களை
என்வேன்-ஏளனம்புரிவேன்
எனக்கு-அப்படிப்பட்ட அடியேனுக்கு
என்று-எப்போது
உதவி-திருவருளைக் கொடுத்து
செய்வாய்-ஆதரிப்பீர்
மிகு-அதிகப்பட்ட
கன்றை-தமது இளம் கன்றுகளை
விட்டு-இல்லத்தில் இருக்க விட்டு
வரும்-வெளியே சென்று மேய்ந்துவரும்
தொகுப்பு-கூட்டமான
ஆன்-பசுக்கள்
அருந்தும்-உண்ணும்படியான
மலர்-செழித்துவளர்ந்த
சோலை-பயிர்களும், பொழில்களுமுடைய
செந்தில்-திருச்செந்தூரில் விளங்கும்
சுர-தேவர்களது
அதிபனை-தலைவரான முருகக் கடவுளை 97

**கரபதி யாதியர் போற்றும் பெருமை துலங்குசெந்தில்**
**வரபதி யானை மயிலானை வள்ளி மணாளனைவேற்**
**கரபதி யாமுரு கோனைத் துதிப்பவர் கைக்குமவர்**
**சரபதி யான மடங்கலைப் பார்இது சத்தியமே**

இ—ள்.

கரபதி-தேவர் தலைவனான இந்திரன்
ஆதியர்-முதலானபல வானவர்
போற்றும்-துதிசெய்கின்ற
பெருமை-சிறப்புகள்
துலங்கு-விளங்குகின்ற
செந்தில்-திருச்செந்தூர்என்ற
வர-அருள்மிகுந்த
பதியானை-தலத்தைக் கொண்டவரை
மயிலானை-மயில்வாகனக் கடவுளை
பதியாம்-தலைவரான
முருகோனை-முருகப்பெருமானை
துதிப்பவர்-வணங்கி வழிபடும் கௌமாரர்களை
கைக்கும்அவர்-வெறுக்கின்ற கீழ்மக்கள்
சரப-எட்டுக்கால்களைக் கொண்ட சரபத்தை
தியான-நினைத்துமெலியும்
மடங்கல்-சிங்கத்தை
ஒப்பார்-நிகராவர்

வள்ளி-வள்ளிநாயகியின்
மணாளனை கணவரை
வேல்-வேலாயுதம்பூண்ட
கர-திருக்கையுடைய

இதுசத்தியம்-இம்மொழி
உண்மையாகும்
ஏ. று. ஏ. அசை

சிங்கத்தைக் காலால் பற்றிச்சென்று கொன்றும் உண்ணும் இயல்புடையது சரபப் பறவை. அதுபோல கௌமார அன்பரை இகழ்பவர் அவரால் அழிக்கப்பெறுவர் என்பது கருத்து. 98

சத்தியத் தைக்கரு தும்பரை வாழ்விக்கத் தானவரைக்
குத்தியத் தைக்கரு துங்கக் கடலும் கொளச்செய்தசேய்
சித்தியத் தைக்க ருதுநீடச் செய்யுந் திருச்செந்திலில்
நித்தியத் தைக்கரு துந்துமி யார்ப்பொடு நீடியவே

இ-ள்.

சத்தியத்தை-உண்மை நெறியையும்
கருது-தன்னைத் தியானித்த
உம்பரை-தேவர்களையும்
வாழ்விக்க-உய்யும்படிச்செய்ய
தானவரை—அசுரக் கூட்டத்தை
குத்தி-வேலாற்கொன்று
அத்தை-தனது முடிவை
கரு-நீலநிறம்பெற்ற
துங்க-பெரிய
கடலும்—சமுத்திரமும்
கொள-பெறும்படி
செய்த-வற்றச்செய்த
சேய்-குமாரக்கடவுள்

சித்தி-அட்டமாசித்திகளின்
அத்து-வல்லமையின்எல்லையை
ஐக்கருது-முத்தியடையும் தவத்தினைக் கொண்டவர்களுடையதாக
நீடச்செயும்-வளரக்கொடுக்கின்ற
திருச்செந்திலில்-திருச்செந்தூர்ப்பதியில்
நித்தியத்து-நிலையான
ஐ-அழகிய
கரு-கருவறையமைந்தஆலயம்
துந்துமி-வாத்தியங்களின்
ஆர்ப்பொடு-முழக்கம்மிகும்படி
நீடிய-சிறந்துவிளங்கும்
ஏ, று. ஏ. அசை 99

நீடிய மாலையஞ் சேரவொட் டாது நினைப்பவைகை
கூடிய மாலைய மாவது காட்டும் குலவுசெந்திற்
பாடிய மாலை யணிவான் முன் பன்றியும் பட்சியுமாய்த்
தேடிய மாலைவிற் கெய்தார் குரவன் திருவருளே

இ-ள்.

நீடு-நெடிதுஆகிய

அம்-அழகிய

இயமஅலயம்-இயமன் கோவிலை
சேரஒட்டாது-அடையவிடாது
நினைப்பவை-எண்ணிய எல்லாம்
கைகூடிய-கிடைக்கப் பெற்ற
மாலயம்-பெருமை மிக்க முத்தியை
ஆவது-அடைகின்ற வழியை
காட்டும்-தோற்றுவிக்கும்
குலவு-விளங்குகின்ற
செந்தில்-திருச்செந்தூர் என்னும்
பாடி-படைவீட்டை உடைய
மாலை-பூமாலைகளை
அணிவான்-சூடியிருக்கும் கடவுள்
முன்-முற்காலத்தில்
பன்றியும்-வராகமாகவும்
பட்சியுமாய்-அன்னப் புள்ளாகவும்
தேடிய-முறையே தேடிய
மால்அயற்கு-திருமாலுக்கும் பிரமனுக்கும்
எய்தார் காணக்கிடைக்காத சிவபெருமானது
குரவன்-குருபரருடைய
திருவருளே-கருணைவிலாசமே

**100**

## நூற் பயன்

**பந்திற் றிரிவித மாமல மாதிப் பகைவெதுப்ப**
**வெந்திற் றிரிவு படார்அருட் பேறு மிகப்பெறுவார்**
**தந்திற் றிரிவிசை யுங்கருங் கோட்டுத் தகர்ப்பெருமான்**
**செந்திற் றிரிபுக் கவிநூறுங் கற்றுணர் சீரியரே**

இ—ள்

பந்தில்-பந்த திசையின்
திரிவிதமாம்-மூன்றுவிதப் பட்ட
மலம்ஆதி-ஆணவம் கன்மம் மாயை என்னும் மலமுதலிய
பகை-எதிர்ப்புகள்
வெதுப்ப-துன்புறுத்துவதால்
வெந்து-மனம்நொந்து
இற்று-மெலிவடைந்து
இரிவுபடார்-அழிவடையார்
அருட்பேறு-திருவருட் செல்வத்தை
மிக-அதிகமாக
பெறுவார்-அடைந்தின்புறுவார்கள்
தந்தில்-யானையை ஒத்ததும்
திரிவு-கோணிய முறுக்கை
இசையும்-பொருந்திய
கரும்-கருப்பு நிறமான
கோட்டு-கொம்புகளைக் கொண்டதுமான
தகர்-ஆட்டுவாகனத்தையுடைய
பெருமான்-முருகக்கடவுளது
செந்தில்-திருச்செந்தூரைக் குறித்த
திரிபுக்கவி-திரிபு அணியையுடைய பாடல்
நூறும்-நூறினையும்
கற்று-நன்கு படித்து
உணர்-பொருளைத் தெரிகின்ற
சீரியர்-அறிஞர்கள்
ஏ. று. ஏ. அசை

ஓம் முருகா

# 4-வது யமக அந்தாதி

## முன்னுரை

### வெண்பா

அமரர்களும் போற்றுயில்வேல் அண்ணலின் செந்தூர்
யமகஅந்தா திப்பாட் டிசைப்போர்—குமர
குருபரற்கா ளாவார் குலவுகல்விப் பேறு
மருவியன்ப ராவார் மகிழ்ந்து.

சந்தனவெற்பு என்று கூறப்பெறும் பொதிகை, தமிழ்மொழி வளர்வதற்கு இடமானுற்போன்று, சந்தனு சலம் என்னும் திருச்செந்தூரும் தமிழ்ப்பெருக்கையுடைய தென்ருல் மிகையாகாது. இதுவரை எத்தனேயோ பெரும் புலவர்கள் போற்றிப் புகழ்ந்த சிறப்புடையது.

கற்பனைக் களஞ்சியமென்று பாராட்டப்பெறும், சிவப்பிரகாச சுவாமிகள், தமது இலக்கண ஆசிரியரான வெள்ளியம்பலவாணத் தம்பிரான் கருத்துப்படி, அவரிடம் அழுக்காறுகொண்ட புலவன் ஒருவனே, அடக்கிக் குருநாதருக்கு அடிமையாகச் செய்யும்பொருட்டுச் செந்திில் நிரோட்டம் என்ற முப்பது பாடல் கொண்ட அந்தாதி நூல் பாடி வெற்றி கொண்டார் என்பதும், அத்தலம் திருச்செந்தூரே என்பதும் யாவருமறிவர். இந் நூற் பாடல்கள் உதடுகள் ஒட்டுதலற்ற தன்மையிலமைந்தவை ஆகவேதான் நிரோட்டம் எனப் பெயர்பெற்றது.

திருவருணையில், வில்லிப்புத்தூராரிடம் வாதில் வெல்லும் பொருட்டு அருணகிரிநாத சுவாமிகள் பாடிய கந்தரந்தாதி இந்நூலைப்போன்ற யமகப் பாடலேயாம். யம-கம் என்ருல் யமனைத் தலையில் உடையது என்று

அவற்றைப், பனை ஓலையேட்டில் ஒரே தடவையிற் பாடி எழுதுவதும், தியான செபவழிபாடுகளை யியற்றுதல், பல தலசேவை ஆதிய வகையில் வாழ்ந்தனர். திருவள்ளுவர் பாடிய திருக்குறள் நடையில் "மநுநெறித் திருநூல்" நூற்றுமுப்பது அதிகாரத்தில் பல கருத்தைக் கூறினர். தமிழ் மொழியில் மொழி முதலில் வராத அக்கரங்களையும் உயிரொடு புணர்த்தி ஒவ்வோரெழுத்துக்கு ஒரு குறட்பா வீதம் 216 குறள் வருக்கக்குறள் என்ற பெயரிலியற்றினர். ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போன்ற நீதி நூல்களிலும்கூடக் கூறுத சிறப்புடையது இந்நூல் என்னலாம்.

அறுவகை யிலக்கணம் என்பதொன்று. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணங்களையும் கற்றுவரும் புலமைக்குரிய இலக்கணமே ஆறுவதாம். முதலில் தமிழ் எழுத்துக்களின் வரிவடிவத்தின் இயல்பு கூறுகின்றார். தமிழ் எண்கள் உருமாறி, ஏன் இல்லாமலே மறைந்துவரும் இக்காலத்தில் அதை விளக்க உறுதுணையாகும். இந்த வகையில் தமிழ்ப்புலமையும் தவச்சிறப்பும் அமைந்த தண்டபாணி சுவாமிகள் பலதலம் சென்று பனுவல்களியற்றித் திருவாமாத்தூர் என்ற சிவதலத்தில் தங்கியிருந்து ஞானசமாதியுற்றனர்.

இந்நூல் வரிசைப்பட பதிப்பாகி வருகிற தொடர்பில் திருச்செந்தூர் தேவத்தான வெளியீடாக வருகிறது. முருகன் அன்பர்கட்குப் பெரிதும் பலனுடையது. தேவத்தான அறங்காவலர்கட்குத் தமிழுலகம் பெரிதும் நன்றியுடையது.

வணக்கம்

இங்ஙனம்,

திருவாமாத்தூர்
விழுப்புரம் P.O.

தி. செ. முருகதாச ஐயா,
கௌமார மடாலயம்

உ

முருகன் துணை

# 4வது-யமக அந்தாதி

## பாட்டும் பொருளும்

### காப்பு - கட்டளைக் கலித்துறை

*கந்த னியமக வந்தாதி மார்பணி கைக்கொளச்சி*
*கந்த னியமக வந்தா திமதக் களிறுகொள்வார்*
*கந்த னியமக வந்தாதி யாடமர்க் காரன்செந்திற்*
*கந்த னியமக வந்தாதிக் காவல் கணபதியே.*

இ—ள்

கந்த-மணத்துக்கு
நியம-இடமாக
க(வ்)வு-பொருந்தியும்
அம்-அழகுடையதுமாகி
தாதி - பூந்துகளோடுடைய மாலைகள் உடையவர்
மார்பு-தன்மார்பில்
அணி-அணிசெய்வதாய்
கைக்கொள்-கையிற்றாங்கிய
அச்சி-வேலாகிய தாயால்
கந்தன்-ஒன்றாக்கப்பட்ட வடிவினன்
இயம்-ஒலியை
அக-உள்ளிற்கொண்ட
அந்து-பாதச்சிலம்பணிந்த
ஆதி-முதற்பொருளானவன்
மதக்களிறு-மதமுடைய அயிராவணம் என்ற யானையை
கொள்வார்-வாகனமாகவுடைய சிவனது
கந்து-பற்றுக்குரியவன்
அல்-இருள்போதில்
நியம-இணக்கமாக
கவந்தஆதி-குறையுடலும் பேயினமும்
ஆடு-ஆடிமகிழும்படி செய்யும்
அமர்க்காரன்-போர்க்களமுடையவன்
செந்தில்-திருச்செந்தூரினையுடைய
கந்தன்-கந்தக்கடவுளாவர் (அவரது)
யமக-யமகமென்ற சிறப்புள்ள
அந்தாதி-நூறுபாடலுடைய இந்நூற்கு
காவல்-துணையிருப்பது
கணபதியே-விநாயகப் பெருமானேயாகும்
எ, று.

## நூல்

*சீரனந் தந்தரும் பூவார் கமலம் செழுங்கயல்வெண்*
*சீரனந் தந்தரும் வாவிகள் சூழ்செந்திற் சேய்தெளிசொற்*
*சீரனந் தந்தரும் வாழப் புரியுந் திறன்முதலாம்*
*சீரனந் தந்தரும் பாக்கைத்து ளார்க்குத் தினம்நல்குமே*

## இ-ள்

சீர்-சிறப்பமைந்த
அனம்-அனங்களும்
தந்து-நூல்சேர்ந்ததண்டில்
அரும்-அருமையாக மலர்ந்த
பூ ஆர்-பூக்களையுடைய
கமலம்-தாமரைகளும்
செழும்-வளமான
கயல்-மீன் இனங்களும்
வெண்-வெண்ணிறமான
சீர-பால்போன்ற
நந்தம்-சங்குகளும், சேர்ந்து
தரும்- அழகைத்தருகின்ற
வாவிகள்-குளங்கள்
சூழ்-சூழப்பெற்றுள்ள
செந்திற்சேய்-திருச்செந்தூர்ப் பெருமான்
தெளி-பாசமகன்ற ஞான விளக்கத்தை
சொல்-உபதேசமொழியால் உதவுகின்ற
சீரன்-சிறப்பினையுடையவர்
நந்து-கெடுதலுடைய
அந்தரும்-கீழ்மக்களும்
வாழ-இன்பம் அடையும்படி
புரியும்- அருளவல்ல
திறன்முதலாம்-மேன்மை முதலிய
சீர் அனந்தம்-பல நன்மைகளை
தரும்-கொடுக்கவல்ல
பா-தெய்வீகப் பாடலாகிய அருட்செல்வத்தை
கைத்து-தமது கையகத்தே
உளார்க்கு-உடையஅன்பர்கட்கு
தினம்-நாடோறும்
நல்கும்-(தனது அருளை) உதவியருள்வான்
ஏ. று. அ. அசை 1

*தினமா தரிக்கு மொழியால் உருகித் திகைத்துவருந்*
*தினமா தரிக்குந் ததியிது காண்செந்திற் செல்வ! புல்லைத்*
*தினமா தரிக்கும் பிரானுக்கும் நாடொறுஞ் செங்கரத்தேந்*
*தினமா தரிக்கும் புதல்வா கலாபச் சிகண்டியனே*

இ-ள்

தினம்-நாள்தோறும்
மாதர்-பெண்களது
இக்கு-கருப்பஞ்சாறு போன்ற
மொழியால்-இனியமொழிகளால்
உருகி-மனம்தளர்ந்து
திகைத்து-செய்வதறியாமல்
வருந்தினம்-துன்படைந்துள்ளோம்
ஆதரிக்கும்-காக்கத்தக்க
ததி-சமயம்
இதுகாண்-இதுவேயாகும்
செந்தில்-திருச்செந்தூரின்
செல்வ-செல்வமான முருகப்பெருமானே!
புல்லை-பசும்புல்லை
தின்-உண்டுவாழ்கின்ற
அம்-அழகிய
ஆ-இடபத்தை
தரிக்கும்-கொடியாகக் கொண்டுள்ள
பிரானுக்கும்-சிவபிரானுக்கும்
நடொறும்-எப்பொழுதும்
செம்கரத்து-(உமது) அழகிய கையில்
ஏந்தின்-வேலாகத்தாங்கப் பெற்ற
மாதரிக்கும்-(தாயான) உமைக்கும்
புதல்வா-குமாரனானவரே!
கலாப-தோகைச்சிறப்புடைய
சிகண்டியனே-மயிலை வாகனமாகஉள்ள கடவுளே

"செங்கரத்து ஏந்தின" என்ற இடத்தில் குழந்தையாகக் கொண்ட எனக் கொள்ளலாமாயினும் அது ஏகதேசமாம், 'நாடொறும்' என்ற சிறப்புப் பற்றி வேலை உரையிற் கொள்ளலாயிற்று. 2

சிகண்டியன், சேவலன், செந்தூரன் பைங்கிளி செப்பிடுமா
சிகண்டியங் கும்புயத் தேற்றிவைத் தோன்கொலை செய்விடம்வா
சிகண்டி யருளும் புதல்வன்வெண் ணீற்றைச் சிறப்புறப்பூ
சிகண்டி யணிந்து தவம்புரி வார்எண்ணில் சித்தர்களே

இ-ள்

சிகண்டியன்-வாகனமாக மயிலை உடையவர்
சேவலன்-கொடியாகச் சேவலை உடையவர்
வாசி-தங்குதற்கிடமான
கண்டி-கழுத்தினரான சிவபெருமான்
அருளும்-உதவிய

செந்தூரன்–திருச்செந்தூரை இடமாகப் பெற்றவர்
பைங்கிளி–அருணகிரிநாதரான கிளி
செப்பிடும்–திருவாய் மலர்ந்தருளிய
ஆசி–துதிப்பாடல்களை
கண்டு–ஏற்று
இயங்கும்–பிரகாசிக்கின்ற
புயத்து–தனதுதோளிடத்து
வைத்தோன்–அமரச்செய்தவர்
கொலைசெய்–உயிருக்கு ஊறு செய்வதான
விடம்–ஆல்கால விடம்
புதல்வன்–குமாரக்கடவுள் (அவரது)
வெண்ணீற்றை–திருநீற்றினை
சிறப்புற–நன்றாக
பூசி–அணிந்தும்
கண்டி–உருத்திராக்கத்தை
அணிந்து–மாலையாகப் பூண்டும்
தவம்புரிவார்–தவமியற்றுபவர்கள்
எண்ணில்–அளவற்ற
சித்தர்கள்–சித்தர் கூட்டங்கள்
ஏ. று. ஏ. அசை

அருணகிரிநாதர் பாடலின் அருமை காரணமாக அவரைக் கிளியாக்கித் தன் தோளில் முருகன் அணிந்தான் என்று கொள்க.

சித்தத் தருக்குடை யார்மனை வாயிலிற் சென்றுடல்கூ
சித்தத் தருக்கு நிகராகி னேன்,பன்றித் திண்மருப்பொ
சித்தத் தருக்குநல் குங்கரத் தாய்,திருச் செந்திலில்வ
சித்தத் தருக்குணர் வார்பணி நாடொறுஞ் செய்யச்செய்யே

இ–ள்

சித்த–மனத்தினிடத்து
தருக்கு–ஆணவத்தை
உடையார்–கொண்டவர்களது
மனைவாயிலில்–வீட்டு முகப்பில்
சென்று–போய்நின்று
உடல்கூசி–சரீரம்குறுகி
அத்தருக்கு–தந்தையான சிவனுக்கு
நல்கும்–உதவிய
கரத்தாய்–திருக்கையினரே
திரு–சிறப்புமிக்க
செந்திலில்–திருச்செந்தூரில்
வசித்து–தங்கியிருந்து

தத்தருக்கு—இரப்பவர்களுக்கு
நிகர் ஆகினேன்—ஒப்பானேன் (அத்தகைய அடியேனை)
பன்றி-பன்றியின்
திண்—வலிமையான
மருப்பு—பல்லின் கொம்பை
ஒசித்து—பிடுங்கி வந்து
அ(ர்)த்த—பொருட் செறிவுடையருக்கு—வேதங்களை
உணர்வார்—கற்றறிந்த மேலவரது
பணி—ஏவற்றொண்டுகளை
நாள்தொறும்—தினமும்
செய்ய—நான்செய்யுமாறு
செய்—திருவருள் புரிவீராக
ஏ. அசை

திருமாலின் வராக அவதாரத்தில், இறைவன் சொற்படி முருகன் சென்று, அதன் பற்கொம்பை எடுத்து வந்து உதவினர் என்பது வரலாறு. சுப்பிரமணிய பராக்கிரமத்திற் காண்க. 4

செய்ய கவிப்புல வர்க்கருள் வாய்!கன்னல் செந்நெல்அருச்
செய்ய கவிப்புல வம்பொலி சீர்திகழ் செந்திலில்வாழ்
செய்ய கவிப்புல வம்போதி கொள்ளிற் சினந்தடங்கச்
செய்ய கவிப்புல வர்ப்புரந் தாய்!மெய்ச் சிரத்தைநல்கே

இ-ள்

செய்ய-செம்மையான
கவி-கவிகளைப்பாடுகின்ற
புலவர்க்கு—கவிஞர்களுக்கு
அருள்வாய்-கருணை செய்பவரே
கன்னல்—கரும்பும்
செந்நெல்-சிறந்த நெற்பயிரும்
அரு-என்றும் நீங்காத
செய்ய-வயல்களிடத்து
கவி-நிறைந்துள்ள
புலவு—சேற்று மணமும்,
கவு—உள்ளத்தைக் கவ்வியுள்ள
இ—இந்த
புல—ஐந்து புலன்களும்
வம்பு-வீம்புகொண்டு
ஒதிகொள்ளில்—போரிடும் போது
சினந்து—நீர் அவற்றைக் கோபித்து
அடங்க—செயலறும்படியும்
செய்-என்வசமாகவும் செய்வீராக!

அம்பு-நீர்பாய்கின்ற
ஒலி-ஓசையும்
சீர்திகழ்-சிறப்பாக விளங்குகின்ற
செந்திலில்-திருச்செந்தூரில்
வாழ்-எழுந்தருளியுள்ள
செய்ய-சிவந்த மேனியுடையவரே

அகவி-தன்னிடம் வரச்செய்து
புலவர்-தேவர்களை
புரந்தாய்-காத்தருளியவரே
மெய்-உண்மையான
சிரத்தை-உபாசனை முயற்சியை
நல்கு-கொடுத்தருள்வீராக.
ஏ. மு. ஏ. அசை

புலன்கள் விம்பு செய்தல், "ஓரவொட்டார்" என வரும் கந்தரலங்காரப்பாட்டினை நோக்குக. 5

சிரத்தைய வாவி அருகிற்செய் தார்புணர் சேந்த!வெளவச்
சிரந்தைய வாவிய வாறளித் தாய்!செந்திற் சேருப் அறு
சிரத்தைய வாவிய செந்தகர்ச் சேவக! சிங்கள்அஞ்சச்
சிரத்தைய வாவியற் பாடல்கொண் டந்தருள் செம்புகழே

இ-ள்

சிரத்தை-ஆலோல ஒலியை
அவ்-புனத்தினிடம் உள்ள
வாவி அருகில்-நீர் நிலையின் பக்கம்
செய்தார்-செய்த வள்ளி நாயகியாரை
புணர்-திருமணம்பூண்ட
சேந்த-முருகப்பெருமானே
வெளவ-உம்மையடைய விரும்பிய
சிரந்தை-[illegible]
அவாவியவாறு-விரும்பியபடி
அளித்தாய்-கொடுத்தருளியவரே!

வாவிய-தாவிச்சென்ற
செம்-செந்நிறமான
தகர்-ஆட்டுக்கடாவைச் செலுத்திய
சேவக-வீரமுடையவரே!
சிங்கள்-சிங்கமுகத்து அசுரன்
அஞ்ச-பயமுறும்படி
சிரத்து-கோபித்து அதட்டிய
ஐயவா-அழகிய தலைவரே!
இயல்-இயற்றமிழாலான
பாடல்-எனது துதிப் பாடல்களை
கொண்டு-ஏற்றருளி

செந்தில்-திருச்செந்தூரில் சேரும்-கோயில்கொண்டு அறு சிரத்து-ஆறு கிய திருமுகமுடைய ஐய-பெருமானே! ஈந்தருள்-கொடுத்து உதவவேண்டும் செம்-சிறப்பான புகழ்-மேம்பாடுகளை எல்லாம் எ. று. ஏ. அசை 6

செம்புக ரானனத் தான்றுணை யாங்குக தெர்ப்பயினாற்
செம்புக ரானப் புரிந்தான் மருக! சிவன்விழியிற்
செம்புக ரானல் லுருக்கொண்டு ளாய்! திருச் செந்திலெந்தாய்
செம்புக ராவதொக் குஞ்சிந்தை யேனைத் திருத்துதியே

இ-ள்

செம்-சிறப்பான புகர்-புள்ளிகளைக்கொண்ட ஆனனத்தான்-யானைமுகக் கணபதிக்கு துணை ஆம்-தம்பியாகிய குக-குகக்கடவுளே தெர்ப்பையினால்-தருப்பை புல்லரல் செம்புகர்-விளக்கமான சுக்கிரனது ஆன-கண்கெடும்படி புரிந்தான்-செய்த திரு மாலின் மருக மருகரே சிவன்-சிவபிரானுடைய விழியில்-நெற்றிக்கண்ணில் செம்-செந்நிறமாய்உதித்த புகரா-தீப்பொறியின் வழியாக நல்-அழகினையுடைய உரு-திருஉருவத்தை கொண்டுள்ளாய்-ஏற்ற வரே! திரு-தெய்வத்தன்மையான செந்தில்-திருச்செந் தூரிடமுள்ள எந்தாய்-எமதுதந்தையே! செம்பு-தாமிரமானது கரு-கருமையானகளிம்பை ஆனது-பெற்றதனை ஒக்கும்-ஒப்பான கசடமைந்த சிந்தையேனை-மனத்த னை என்னை திருத்துதி-நல்ல பண்புடை யவனாக அருள்புரிவீராக எ. று. ஏ. அசை

குறிப்பு: வாமனவதாரத்தில் திருமால் மாபலியிடம் தானம் வாங்கும் சமயம் நீர்க்கமண்டல வாயிலே வண்டுருவாகி சுக்கிரன் அடைத்தான். தருப்பைப் புல் ஒன்றால் வாயிலைக் குத்தினார் மால். கண்ணிற் பட்டு ஒருகண் குருடாயினன் சுக்கிரன் என்பது வரலாறு. 7

திருத்து திக்கையர் வெருண்டேகு மாறு செலுத்துவதாம்
திருத்து திக்கையன் றன்னோ டிகலும் சிறுவ! கஞ்சத்
திருத்து திக்கைய மருக செந்தூர்க்குக! செஞ்சொலன்பர்
திருத்து திக்கை யறிவினர்முற் போந்துயர் தீர்த்தருளே.

இ—ள்.

திருத்து-நிலைத்துள்ள
திக்கு-எட்டுத்திசைக்காவலரான
ஐயர்-இந்திரன் முதலியோர்
வெருண்டு-அச்சமுற்று
ஏகுமாறு-ஓடி ஒளியும்படி
செலுத்துவதாம்-ஆணை செலுத்திய
திரு-வரத்தினையுடைய
துதிக்கையவன்-யானைமுகத்தாருகனை
தன்னோடு-அசுரனுடன்
இகலும்-போர்புரிந்த
சிறுவ-குமாரக்கடவுளே!
கஞ்ச-தாமரைப்பூவுடைய
திரு-இலக்குமிதேவி
துதி-பாராட்டுகின்ற
கைய-அலங்காரமுடைய
மருக-மருகரே!
செந்தூர்-திருச்செந்தூரினையுடைய
குக-குகக்கடவுளே
செம்-செம்மையான
சொல்-சொற்களமைய
அன்பர்-அன்பர்கள் பாடுகின்ற
திரு-தெய்வீகமான
துதி-தோத்திரப்பாடல்களை
கை-வெறுக்கின்ற
அறிவினர்முன்-மூடர்களிடத்தில்
போம்-பொருளை விரும்பி ஏகும்
துயர்-வருத்தத்தை
தீர்த்து-அறச்செய்து
அருள்-திருவருள் புரிவீராக
ஏ. று. ஏ-அசை

திரத் தனத்தத்தை பாடிப் புனையும் திருப்புகழ்ச்சேய்
திரத் தனத்தத்தை நீக்கவல் லான்;திருச் செந்திற்சிந்து
திரத் தனத்தத் தயிலணிந் தோன்பதந் தேடிவருந்
திரத் தனத்தத்தை வேதன்செய் முத்தொழில் தீயனவே

இ—ள்

தீரத்தன—தவத்தின் வலிமைமிக்க
தத்தை—கிளியான அருணகிரிநாதர்
பாடி-திருவாய் மலர்ந்து
புனையும்-அணியப்பெற்ற
திருப்புகழ்-சந்தக்கவிகளை யுடைய
சேய்-முருகக் கடவுள்
தீர-முழுவதும்
தன-செல்வம் இன்மை காரணமாக
தத்தை—வரும்துன்பத்தை
நீக்க-நீங்கச்செய்ய
வல்லான்—வல்ல கடவுளாவர்
திருச்செந்தில்—திருச்செந்தூரில் உள்ள
சிந்து—கடலின்
தீரத்தன்-கரைக்கோயிலுடையவன்
அத்தத்து-கையினிடம்
அயில்-வேலாயுதத்தை
அணிந்தோன்-தரித்துள்ளவர்
பதம்-அப்பெருமான் திருவடியை
தேடி-அடையவிரும்பி
வருந்திர்-தவஞ்செய்யாதவர்களே
அத்தன்-சிவனும்
நத்தத்து-சங்கணிந்த
ஐ-திருமாலும்
வேதன்-பிரமனும்ஆகிய இவர்கள்
செய்- புரிகின்ற
முத்தொழில்-அழித்தல், காத்தல், படைத்தலான முச்செயலும்
தீயன-துன்பத்தைத் தருவனவே
எ. று. ஏ. அசை

எனவே-முத்தொழிலும் எய்தாவாறு தவம் செய்க, என்றதாம் 9

தியன்ன வாகலி மிக்குடை யேன்,வெஞ் சினப்பிணியைத்
தியன்ன வாகவ வீரருள் ளாய்!திருச் செந்திலெந்தாய்!
தியன்ன வாகத்த வேலாயு தம்புனை திண்புயமூர்த்
தியன்ன வாகனற் கஞ்சாத வாழ்வருள் சிக்கறுத்தே

இ-ள்

தீயன்-மிகக்கொடியவன்
அவா-ஆசைகளையும்
கலி-வறுமையையும்
மிக்கு-மிகுதியாக
உடையேன்-பெற்றுள்ளவன்
வெம்-வெம்மையுடைய
சினம்-கோபமென்ற
பிணியை நோயினை
தீயன்-போக்காதவன் ஆயினும்
நவ-ஒன்பதாகிய
ஆகவவீரர்-போர்வீரர்களை
உள்ளாய்-துணைவராயுடையவரே
திருச்செந்தில்-திருச்செந்தூரில் விளங்கும்
எந்தாய்-எமது தந்தையே!
தீ அன்ன-நெருப்பை ஒத்த
ஆகத்த-திருமேனியுடையவரே
வேலாயுதம்-வேற்படையை
புனை-தரித்திருக்கின்ற
திண்புய-வலிய தோள்களையுடைய
மூர்த்தி-முருகக் கடவுளே
அன்ன-அன்னப்பறவையின்
வாகனற்கு-வாகனமுடைய பிரமனுக்கு
அஞ்சாத-பயப்படாத
வாழ்வு-முத்திப்பேற்றை
அருள்-திருவருள்புரிவீராக!
சிக்கு-வினையின் பிணிப்பை
அறுத்து-அறவே இல்லாமல் செய்து
எ. று. ஏ. அசை 10

சிக்கன கங்களைச் சற்றுஞ்செய் யேன்புதுச் செல்வரைக்கெஞ்
சிக்கன கந்தரல் வேண்டிநிற் பேன்.நின் திருப்புகழ்பே
சிக்கன கந்தொறுஞ் சென்றிறைஞ் சேன்,எழிற் செந்திலேதே
சிக்கன கந்தைகொண் டேன்,எனை ஆண்டருள் சீக்கிரமே.

இ—ள்.

சிக்கன்-வினைப்பந்தமுடையவன்
அகம்-ஆணவமாகியவற்றை
களை-நீக்கும் தவத்தை
சற்றும்-சிறிதளவும்கூட
சென்று-போய்
இறைஞ்சேன்-வணங்காதவன்
எழில்-அழகுமிக்க
செந்திலே-திருச்செந்தூரில் வந்து

செய்யேன்—செய்யாதவன்
புதுச்செல்வரை-புதுப்பண
முடையவரை
கெஞ்சி—நயமொழிகூறி
கனகம்—பொருளை
தரல்வேண்டி-கொடுக்க
விரும்பி
நிற்பேன்-அவர்முன்
காத்திருப்பேன்
நின்—தேவரீருடைய
திருப்புகழ்—பெருமைகளை
பேசி—துதித்துக்கொண்டு
கல்நகம்தொறும்-மலைக்
கோவில்கள் எங்கும்

தேசிக்கன்—அன்பு
செய்யாதவன்
அகந்தை-எல்லாமறிந்தது
போன்ற இறுமாப்பை
கொண்டேன்—மிகவு
முடையேன்
எனை-அத்தகைய
அடியேனை
ஆண்டு-கருணையால்ஏற்று
அருள்—திருவருள் புரிய
வேண்டும்
சீக்கிரமே-அதிவிரைவாக
எ. று.

11

சிக்கிர கந்தனக் கேயுழைத் தெய்த்துவிண் சேரொன்பதாம்
சிக்கிர கந்தம் இகல்காட்ட நொந்தனன் செஞ்சிகிமேல்
சிக்கிர கந்தம் பதியாகி வந்தருள் செந்நிணவேற்
சிக்கிர கந்த,செந் தூர்முரு காதொண்டர் சித்தத்தனே

இ—ள்.

சீ—அறிஞர் இகழும்படி
கிரகம்தனக்கே-இல்வாழ்க்
கைக்கே
உழைத்து-பாடுபட்டு
எய்த்து—தளர்ச்சியுற்று
விண்சேர்—ஆகாயத்
தமைந்த
ஒன்பதாம்-ஒன்பது உருவி
லுள்ள
சீ—ஒளிமிக்க
கிரகம்-கோள்கள்
தம்இகல்—நமக்குள்ள
வலிமையை

சிகிமேல்—மயில்வாகனத்
தின்மீது
சீக்கிரகம்—அதிவிரைவாக
தம்பதியாகி-தேவிமாருடன்
வந்தருள்—வந்தருள
வேண்டும்
செம்—செந்நிறமான
நிண-ஊன்படிந்த
வேல்—வேலாயுதமென்ற
சீக்கிர படையை
உடையவரே
கந்த—கந்தக்கடவுளே
செந்தூர்—திருச்செந்
தூரினையுடைய

காட்ட என்பாற் செலுத்துவதால்
நொந்தனன்-வருந்தலானேன்
செம்-செழுமையான
முருகா-முருகப்பெருமானே
தொண்டர்-அடியவர்களது
சித்தத்தனே-மனதிற்குடியிருப்பவனே!
எ. று. 12

சிந்தைக் கவிகளைப் பாடும் புலவர் சிவந்தபெரும்
சிந்தைக் கவிகளைப் பொன்றும்நல் காளைச் செழுங்கனிகட்
சிந்தைக் கவிகள யின்றாடும் சோலைத் திருச்செந்திலூர்ச்
சிந்தைக் கவிகளைத் தூயர்பல் லோர்தினம் சேவிப்பரே.

இ—ள்.

சிந்தை-சிந்து முதலிய இசைப்பாடல்களையும்
கவிகளை-இயற்றமிழ்ப் பாடல்களையும்
பாடும்-இயம்பித் துதிக்கின்ற
புலவர்-கவிஞர்களுடைய
சிவந்த-செம்மையுற்ற
பெரும்-விசாலமான
சிந்தைக்கு-மனத்துக்கு
அவி-அழிவைத் தருகின்ற
களைப்பு-மனக்கவலைகள்
ஒன்றும்-ஒருசிறிதும்
நல்காளை-தா இசையாத முருகப் பெருமானை
செழும்-வளமுள்ள
கனிகள்-பழவகைகள்
சிந்து-பறித்து எறிந்தும்
ஐ-அழகிய
கவிகள்-குரங்குகள்
அயின்று-உண்டும்
ஆடும்-விளையாடுகின்ற
சோலை-பொழில் வளம் மிகுந்த
திருச்செந்தில்-திருச்செந்தூரென்ற
ஊர்-பதியினையும்
சிந்தை-அங்குள்ள கடலையும்
கவிகளை-அருட்புலவர்களையும்
தூயர்பல்லோர்-பலபேரன்பர்கள்
தினம்-நாடோறும்
சேவிப்பர்-கண்டு வணங்குவர்
எ. று. ஏ. அசை

கவிகளைச்சேவிப்பர் என்றது, கடலையும், ஊரையும் புலவரையும் தெரிசிப்பர் எனவும், முன்னிரண்டைத்

தெரிசித்தும், கவி பாடல்களைப் பாராயணம் புரிவர் எனவும் கொள்ளலாம். பாடல்களைச்சேவித்தல் என்பது வைணவ மரபு. 13

சேவித் தகரையர் ஆதியர் போற்றச் செலுத்துகையாய்
சேவித் தகரையன் றுண்டாய் உனைத்திருச் செந்திலிடம்
சேவித் தகரை யளகத்தர் கோவைச் சினப்பவர்முற்
சேவித் தகரையம் எய்த இகல்வதென் செப்புதியே.

இ—ள்.

சே-செந்நிறமமைந்து
வி-எதிர்த்து வந்த
தகர்-ஆட்டுக்கடாவை
ஐயர் ஆதியர்-தேவர் முதலியோர்
போற்ற-புகழும்படி
செலுத்து ஏறி நடத்திய
கையாய்-கைவலிமையுடையவரே
சே-இடபவாகனரான
வித்தகரை-சிவபிரானை
அன்று-முன்னொரு சமயம்
ஆண்டாய்-ஆண்டருளியவரே
உன்னை-தேவரீரை
திருச்செந்திலிடம்-திருச்செந்தூரிலிருந்து
சேவித்த-வணங்கும் அன்பர்கள்
கரு-கருப்பு நிறமும்
ஐ-அழகும் உடைய
அளகத்தர்-கூந்தல் மாதர்களது
கோவை-படைத்தலைவனை மன்மதனை
சினப்பவர்—கோபிப்பவராவர்
முன்-அப்பெரியோர் முன் இருந்து
சேவித்து-பணிசெய்தும் கூட
அகர்-என் மனத்துள்
ஐயம்-சந்தேகம்
எய்த-உண்டாகும்படி
இகல்வது-மன்மதன் போர் செய்வது
என்-யாது காரணம்
செப்புதி-சொல்லியருள்வீராக
ஏ. று. ஏ. அசை 14

செப்பந்த மான முலையார் மயலிற் றிகைத்தெறியும்
செப்பந்த மானக்க அந்தகற் கஞ்சினம் செந்நெல்வயல்
செப்பந்த மானற் கமலங்கொள் சீர்திகழ் செந்தில்வண்மை
செப்பந்த மானவின் றுள்வாய்கொ லோ?சிவ தேசிகனே

இ–ள்.

செப்பு–சிமிழ் போன்றுள்ள
அந்தம் ஆன–அழகு வாய்ந்த
முலையார்–தனங்களுடைய மாதரது
மயலில்–ஆசையிடத்து
திகைத்து–செய்வதறியாவாறு
எறியும்–விழச்செய்கின்ற
செப்பம்தமால்–இணக்கத்தின் காரணமாக
நக்க–இளப்பமாகச் சிரிக்கின்ற
அந்தகற்கு–எமனுக்கு
அஞ்சினம்–பயந்துள்ளோம்
செந்நெல்–உயர்ந்த நெல் விளையும்
வயல்–வயல்களிடத்து
செ–செந்நிறமான
பந்தமா–தீப்பந்தம் போல
நல்கமலம்–மேலான செந்தாமரைப் பூக்கள்
கொள்–நிறைந்துள்ள
சீர்திகழ்–சிறப்பு அமைந்த
செந்தில்–திருச்செந்திற் பதியில்
வண்மை–உமது மேன்மைகளை
செப்பம்–புகழாதிருக்கின்றோம் ஆயினும்
தம்ஆ–உமது சொந்தமாக
நவின்று–எங்களைக் கூவி
ஆள்வாய்கொலோ–அருள் புரிவீரோ!
சிவ–சிவபிரானுக்கு
தேசிகனே–குருநாதனானவரே
எ. று.

எமன் சிரிக்கும் இளப்பமாவது, இச்சைவழி உழல்வோர், உடல் நலம் குன்றி இறக்கநேரும். விரைவில் தன் பாசவலைக்கு ஆளாவார் என்ற கருத்தில் சிரிப்பதாம். 15

தேசிகச் சுந்தரச் செவ்வேள்முன் ஏனலிற் சென்றபர
தேசிகச் சுந்தரப் பொற்பூணும் பூண்டு, திரண்டகனித்
தேசிகச் சுந்தரத் தேகவல் லார்துணை செந்திலில்வாழ்
தேசிகச் சுந்தர வாமானை தோழனென் சித்தத்தனே

இ—ள்.

தேசிக–சிவகுருநாதன்
சுந்தர-அழகுடையவன்
ஏக–சென்றுதவம்புரிய
வல்லார்–வல்லபெரியோகட்கு

செவ்வேள்-சிவந்த முருகப்பிரான்
முன்-முன்னொருசமயம்
ஏனலில்—தினைப்புனத்தில்
சென்ற-வள்ளியை நாடிச் சென்ற
பரதேசி-தவவேடமுடையவன்
கச்சும்-மார்பிலணிந்த வாரும்
தர-தகுதி வாய்ந்த
பொற்பூணும்-பொன்னுபரணமும்
பூண்டு-அணியப்பெற்று
திரண்ட-திரட்சியுற்ற
கனித்தேசி-எலுமிச்சம்பழமொத்த தனத்து மாதர்களை
கச்சும்-வெறுகின்ற
தரத்து-தகுதியான துறவு நெறியில்
துணை-உற்றதுணையாயிருப்பவர்
செந்திலில்-திருச்செந்திற்பதியில்
வாழ்-எழுந்தருளியுள்ள
தே-தெய்வமாயிருப்பவர்
சிக-ஒளிவடிவினரான
சுந்தர்-சோமசுந்தரரான சிவன்
அவாம்-விரும்புகின்ற
ஆனை-விநாயகப் பெருமானுக்கு
தோழன்-துணையான கடவுள் அப்பெருமான்
என்-அடியேனது
சித்தத்தன்-மனத்தில் வசிப்பவனுவன் என்பதாம்
எ. று. ஏ. அசை

16

சித்தமஞ் சாத வனவேடர் கொட்டிற் சிறுமிமுனஞ்
சித்தமஞ் சாதல்செய் வானிகர் மேனித் திருமறைக்கும்
சித்தமஞ் சாதரஞ் செய்சந்த மால்வரைச் செந்திலையா
சித்தமஞ் சாதறும் ஆனந்தம் ஈந்துனிற் சேர்த்தருளே

இ-ள்.

சித்தம்—மனதில் (துட்ட மிருகங்கட்கு)
அஞ்சாத-பயமடையாமல்
வன—காட்டிடத்தில் வாழும்
வேடர்—வேடமக்களுடைய
மஞ்சு-மேகங்களுக்கு
ஆதாரம்செய்-தங்க வசதியான
சந்த-சந்தனச் சிறப்புற்ற
மால்வரை-பெரிய மலையுடைய

கோட்டில்-சிறுகுடியில் வாழ்ந்த
சிறுமி-வள்ளிநாயகியின்
முன்-முன்பாக
அஞ்சி-அச்சத்துடன்
தமம்-இருளை
சாதல்செய்-அழிக்கத்தக்க
வான் நிகர்-சூரியனை ஒத்த
மேனி-சிவந்த வடிவத்தின்
திரு-அழகினை
மறைக்கும்-மறைத்து, மாறுனகரிய வேட வடிவுடன் சென்ற
சித்த-சித்திவல்லமை யுடையவரே
செந்திலே-திருச்செந்தில் பதியிற்
ஆசித்தம்-உமதருளை நாடி வந்துள்ளோம்
அஞ்சு-ஐம்புலன்களின்
ஆது-குற்றம் (இச்சை)
அறும்-அறச் செய்கின்ற
ஆனந்தம்-பேரின்பத்தை
ஈந்து-அருள் செய்து
உன்னில்-உம்முடன்
சேர்த்து-ஒன்றுபடும்படி
அருள்-ஏற்றருள்வீராக
ஏ. று. ஏ. அசை

17

சேரன் பராவக் கனவூடன் றோர்மொழி செப்பச்சென்றாய்
சேரன் பராவல்க ளெல்லாம் உதவும் திருச்செந்திலாய்!
சேரன் பராவல் அவாவெனக் கண்டனை தீயருடன்
சேரன் பராவம் புவிமீதென் ஆண்மை திகழச்செய்யே

இ—ள்.

சேரன்-சேரஅரசன்
பராவ-வணங்கும்படி
கனவூடு-அவனது மன வெளியில்
அன்று-முன்னொரு சமயம்
ஓர்மொழி-பொன் உதவு தற்கான சொல்லை
செப்ப-கந்தசாமிப் புலவ ருக்காகச் சொல்வதற்கு
சென்றாய்-சென்ற கடவுளே
சேர்-உம்முடன் ஒன்றுபட வேண்டி
அன்பு-செய்யும்பத்தி யானது
அரு-நீக்கமில்லாத
வல்-வலிமையுடைய
அவா-பெருவிருப்பமாகும்
என-என்பதாக
கண்டனை-நீர் அறிந்துள் ளீர்
தீயருடன்-கொடியவர் களோடு

சேர்-தன்பால் அடைகின்ற
அன்பர்-அடியவர்களது
ஆவல்கள்-விருப்பங்கள்
எல்லாம்-முழுவதையும்
உதவும்-கொடுத்தருள்கின்ற
திரு-அழகிய
செந்திலாய்-செந்திற் பெருமானே
சேரன்-நான் இணங்க மாட்டேன்
பராவு-விசாலமான
அம்புவிமீது-உலகினிடம்
என்-அடியேனது
ஆண்மை-உறுதிப் பாட்டை
திகழ-விளங்கும்படிச்செய்ய
செய்-திருவருள்புரிவீராக
ஏ. று. ஏ. அசை 18

திகரப்ப டாமைபின் கொள்களி யாற்கடற் சேலேஉடுத்
திகரப்ப டாலெனத் தேவர்கள் வாடச் செகுத்தருள்மூர்த்
திகரப்ப டாமுகத் தாற்கிளே யான்திருச் செந்திலிவை
திகரப்ப டாவிடிற் முனவர்க் கெல்லவன் தேரஞ்சுமே

இ-ள்

திகர-(பாற்கடல் கடைந்த போது மத்தாக இருந்த மந்திரகிரிக்கு)முட்டாக
படு-தாங்கி உதவிசெய்த
ஆமை-(திருமாலாகிய) ஆமையானது
பின்-அமுதம் கடைந்து முடிந்தபின்பு
கொள்-தன்னுல் செயல் நிறைவேறியதென்று கருதிக்கொண்ட
களியால்-செருக்கினுல்
கடற்சேலே-கடலேப் புடவையாக
உடுத்தி-அணிந்த நில மகட்கு
கர-கைவசப்பட்டவனுக
அருள்-திருவருள்செய்து காத்தருளிய
மூர்த்தி-தீரமுடைய பெருமான்
கர-துதிக்கையும்
படாம்-முகபடாம் என்ற அணியையுமுள்ள
முகத்தாற்கு-யானைமுகக் கணபதிக்கு
இளேயான்-பின்றுனேயானவர்
திருச்செந்திலில்-திருச் செந்தூரில்
வைதிகர்-வேதியர்கள்
அப்பு-தர்ப்பண நீரை
அடாவிடில்-காலந்தோறும் விடாமலிருந்தா

படான்—திருமால் அமையான்
என—என்பதாக
தேவர்கள்—அமரர்கள் யாவரும்
வாட—வருந்தியது கண்டு
செகுத்து-அதனைக் கொன்று
தானவர்க்கு-அசுரக் கூட்டத்துக்கு
எல்லவன்—சூரியமூர்த்தி யின்
தேர்-ஓடிக்கொண்டே யிருக்கும் தேர்
அஞ்சும்—முறைப்படி செல் லப் பயப்படும்
ஏ. று. ஏ. அசை

காலை, உச்சி, மாலை என்ற மூன்று வேளையும் அந் தணராவார், சூரியனை நோக்கிச் செய்யும் சந்தியாவந்தன அர்க்கிய நீரால், அசுரச்செயல் அடங்குமென்பதாம். 19

தேரலங் காரமட் டோரும் புலமைத் திறலருள்சேய்
தேரலங் காரத் திருச்செந்தி லான்உயர் சிந்தையஞ்சம்
தேரலங் காரகப் பஞ்சாக்கி னன்தனைச் சிந்திக்கப்பேய்த்
தேரலங் காரம காமாயை தீரின்பம் சித்திக்குமே

இ-ள்

தேர்-தெளிவுபெற
அலங்காரமட்டு(ம்)— எழுத்து, சொல், பொருள் யாப்பு என்பனவற்றுடன் அணியிலக்கணம் வரையும்
ஓரும்—கற்றுணரத்தக்க
புலமைத்திறம்—அறிவாற் றலை
அருள்—கொடுத்தருள வல்ல
சேய்—முருகப்பெருமான்
தேர்-அழகிய தேரின்
அலங்கார—சிறப்பமைந்த
அலம்—செய்த துயரையும்
காரக—சிறைவாசத்தையும்
பஞ்சு—நெருப்பிற்பஞ்சைப் போல
ஆக்கினன் தனை—அழியச் செய்தவராகிய பெருமானை
சிந்திக்க—தியானம் செய்வ தால்
பேய்த்தேர்—கானல்நீர் போன்று
அலங்குஆர்—பொய்யான மன அலைவான எண்ணங்களாம்
அ—அந்த

திருச்செந்திலான்–திருச்செந்தூர்க்கடவுள்
உம்பர்–தேவர்களது
சிந்தை–மனமானது
அஞ்சும்–அச்சமடையச் செய்த
தேர்–இந்திரஞாலமென்ற சூரன்தேர்
மகாமாயை–பெரிய அஞ்ஞானம்
தீர்–அறவே நீங்குதற்கான
இன்பம்–பேரின்பம்
சித்திக்கும்–கைகூடுவதாகும்
எ. று. ஏ. அசை 20

சித்திக்கு மானந்த முத்திக்கும் நேயங்கொள் சிந்தை நொந்தி
சித்திக்கு மானந்த சேனையுங் கொள்மதன் செய்சமர்க்கஞ்
சித்திக்கு மானந்தச் செய்தருள் வாய்!செந்திற் சீரையிரட்
சித்திக்கு மானந்த மிழ்ப்பாடல் கொண்டணி சேயவனே

இ—ள்

சித்திக்கும்–திருவருட்பேற்றுக்கும்
ஆனந்த–பேரின்பப்பயனை
முத்திக்கும்–ஐக்கமுத்திக்கும்
நேயம்கொள்–விருப்பமுற்றுள்ள
சிந்தை–என் மனமானது
நொந்து–வருந்தும்படி
இசித்து–வளைப்பதான
இக்கு–கரும்புவில்லையும்
மான்–மானை ஒத்த
அந்த–அழகிய
சேனையும்–மாதர் படையையும்
கொள்–கொண்டுள்ள
மதன்–மன்மதன்
செய்–புரிகின்ற
சமர்க்கு–போரினுக்கு
மால்–அறிவின்மயக்கத்தை
நந்த–கெடுமாறு
செய்து–அருள்புரிந்து
அருள்வாய்–காக்கவேண்டும்
செந்தில்–திருச்செந்தூரின்
சீரை–எல்லாச் செல்வங்களையும்
இரட்சித்து–பாதுகாத்து
இக்கு–இனிய தேனை
மான்–ஒப்பான
அம்தமிழ்–அழகிய தமிழாலான
பாடல்கொண்டு–அன்பர் பாக்களை ஏற்று
அணி–அணிந்து விளங்கும்

| | |
|---|---|
| அஞ்சி–மிகவும் பயந்து | சேயவனே–முருகப் பெருமானே |
| திக்கும்-தயக்கம் அடைகின்ற எ.று. | 21 |

சேய வனசரத் தையல்சொற் கேட்கும் சிறுவமுதிர்
சேய வனச ரவனேற் பவ!துதி செய்கிலர்க்கோர்
சேய வனசரச் சூர்மாய்செந் தூரில்நிற் றேர்ந்தும்அரன்
சேய வனசரற் றீர்த்தோனென் பார்பலர் தேயத்திலே

இ—ள்.

| | |
|---|---|
| சேய–இளமைப் பொலிவுடன் | வன–மிகுதியான |
| வனசர–வேடர்களது | சர-போரினைச் செய்த |
| தையல்–மகளாக வளர்ந்த வள்ளிநாயகியின் | சூர்–சூரனை அசுரன் |
| சொல்–மொழியை | மாய்-அழியப்பெற்ற |
| கேட்கும்–இனிமையுறக் கேட்கின்ற | செந்தூரில்-திருச்செந்தூரில் |
| சிறுவ–குமாரக் கடவுளே | நின்றேர்ந்தும்-உம்மை உண்மைப்பொருளாக அறிந்தும்கூட |
| முதிர்–மிகுந்த | அரன்-சிவனது |
| சேய-செந்நிறத்தின் | சேய்-குமாரன் எனவும் |
| வன–அழகுடையவரே! | அவன்–அச்சிவபிரானின் |
| சரவண–சரவணப் பொய்கையில் | அசரல்-பிரணவப்பொருளின் ஐயத்தை |
| உற்பவ-தோன்றியவரே | தீர்த்தோன்–நீக்கித் தெரிவித்தவன் எனவும் |
| துதி–இனியதுதிப்பாடல்களை | என்பார்–இருவிதமாகச் சொல்வார் |
| செய்கிலார்க்கு–சொல்லி வணங்காதவர்களுக்கு | பலர்-பல மக்கள் |
| ஓர்–ஒப்பற்ற | தேயத்தில்-உலகினிடமாக |
| சேய–தூரத்திலிருப்பவரே | எ. று. ஏ அசை |

சிவனுக்குக் குமாரனாகவும், குருவாகவும். மற்றும் எல்லாமாகவும், உள்ள பொருள் முருகன் என்றறிவது உண்மையென்ற கருத்து.

*தேயா மதியன்ன ஆறு முகத்துச் சிவகுருவாம்*
*தேயா மதியன்ன மையம் வினவத் தெளிபுலவ*
*தேயா மதியன்ன மாவென்ற வாதிருச் செந்தில்உறும்*
*தேயா மதியன்ன டாமுன்ன மீந்தருள் செங்கரமே*

**இ-ள்**

**தேயா-குறைவுபடாத**
**மதிஅன்ன-சந்திரனை ஒத்த**
**ஆறுமுகத்து-ஆறுதிரு முகமுடைய**
**சிவகுரு-சாமிநாதனாக**
**ஆம்-விளங்குகின்ற**
**தேயா-ஏரகமான இடத்தை உடையவரே**
**மதி-அறிவு வடிவமான**
**அன்னம்-கலைமகள்**
**ஐயம்-கலைநூல்களின் சந்தேகத்தை**
**வினவ-கேட்கும்போது**
**தெளி-சொல்லி விளக்கும்**
**புலவ-புலமைப்பெருமானே**
**தேயா-ஒளிவடிவமானவரே**
**மதியன்-உம்மை மதியா திருந்த**
**அ-அந்த**
**மா-பெரிய சூரனை (மாமரத்தை)**
**வென்றவா-வென்ற விரனே**
**திருச்செந்தில்-திருச்செந்தூரில்**
**உறும்-எழுந்தருளியுள்ள**
**தே-தெய்வமே**
**யாம-யமனாகிய**
**தீயன்-கொடியவன்**
**அடாமுன்னம்-என்னை அழிக்காமுன்னம்**
**செங்கரம்-உமது திருக் கையால்**
**ஈந்து-அபயமளித்து**
**அருள்-திருவருள்புரிய வேண்டும்**
**எ. று. ஏ. அசை** 23

*செங்கதி ராகத் தவருள்ளந் தோறுந் தினம்விரிக்கும்*
*செங்கதி ராகத்த செந்தூர்க் குமரகண் திமதியம்*
*செங்கதி ராகத்தர் பாலநின் தோகையின் திக்கத்தக்கச்*
*செங்கதி ராகத் தகவல்பல் பாந்தனைச் சேதித்தவே*

**இ-ள்.**

**செம்-செம்மையான(நல்ல)**
**கதி-வழியில்**
**செங்கதிர்-சூரியனையும்**
**ஆகு-கொண்டுவிளங்கும்**

ராகத்தவர்-விருப்பமுள்ள அன்பரது
உள்ளம்தோறும்-மனங் களிலெல்லாம்
தினம்-நாடோறும்
விரிக்கும்-பரவச்செய்கின்ற
செங்கதிர்-சிவந்த ஒளியுள்ள
ஆகத்த-திருமேனியுடைய வரே!
செந்தூர்-திருச்செந் தூரில் விளங்கும்
குமர-குமாரக்கடவுளே!
கண்-கண்களாக
தீ-நெருப்பையும்
மதியம்-சந்திரனையும்
அத்தர்-சிவபிரானது
பால-திருக்குமாரரே!
நின்-உம்முடைய
தோகையின்-மயில் வாகனத்தின்
திக்கந்தக்க-திக்கத்கக்க என்ற தாளமுடைய ஆட்டத்தின்
செம்கதி-சிறந்தநடையும
ராகத்து-பேரோசையாக
அகவல்-கத்தும்ஒலியும
பல்பாந்தளே-பலபாம்புகளே
சேதித்த-அழியச்செய்வ தாகும்
எ. று. ஏ. அசை 24

சேதிக்கு மம்புய மாதியைம் பூவுங்கொள் சித்தசனைச்
சேதிக்கு மம்புலிங் கத்தழற் கண்ணர் தெளியச்சொன்ன
சேதிக்கு மம்புண்ட பாடற்கும் வேட்டனன் செந்திலர
சேதிக்கு மம்புவி யென்றுதி யோருந் தெரியநல்கே

இ—ள்.

சேது-செந்நிறமாயுள்ள
இக்கும்-கரும்புவில்லும்
அம்புயம்ஆதி-தாமரை முதலிய
ஐம்பூவும்-ஐந்து மலரம்பு களும்
கொள்-கைக்கொண்டுள்ள
சித்தசனை-மன்மதனை
சேதிக்கும்-அழித்தருளிய
அம்-அழகிய
புலிங்க-தீப்பொறிகளே யுடைய
உண்ட-அழிக்கப்பெற்ற
பாடற்கும்-எனது பாடல் களை மீளப்பெறு வதற்கும்
வேட்டனன்-விருப்பமுற் றுள்ளேன்
செந்தில்-திருச்செந்தூர்ப் பதியின்
அரசே-தலைவரான பெருமானே
திக்கும்-எட்டுத்திசை யினரும்

தழல்-நெருப்பான
கண்ணர்-விழியுடைய
சிவன்
தெளிய-ஐயம் நீங்க
சொன்ன-உபதேசித்
தருளிய
சேதிக்கும்-பிரணவப்
பொருளுக்கும்
அம்பு-கடல், நதி, குள
மாகிய நீர்நிலைகளில்
அம்புலி-சந்திரன்
என்று-சூரியன்
ஆதியோரும்-முதலிய
வர்களும்
தெரிய-நன்கறியும்படி
நல்கு-அந்தப்பாடல்களைக்
கொடுத்தருள்வீராக
ஏ. று. ஏ. அசை 25

தெரியலைக் கொண்ட லொடுவீசும் கார்கடற் செந்திநகர்த்
தெரியலைக் கொண்டல் மடவாரைப் பாடிச் சிலருய்ந்துளார்
தெரியலைக் கொண்டரு வேல்மயில் சேவற்குச் செங்கடப்பந்
தெரியலைக் கொண்ட புயத்துக்குப் பாடித் திகைத்தனனே

இ-ள்

தெரி-யாரும் காண
வருகின்ற
அலை-அலைகள்
கொண்டலொடு-மேகம்
வரை
வீசும்-தாவிப்பாய்கின்ற
கார்கடல்-கரியகடலருகான
செந்தில்-திருச்செந்
தூரான
நகர்-பதியினிடம்
அமைந்த
தெரு-வீதிகளின்
பாலுள்ள
இயலை-வீடுமுதலிய சிறப்
பையும்,
கொண்டல்-ஒருவித விளை
யாட்டையுடைய
தெரியலை-எனது அநு
பவத்திற்கண்ட
கொண்டு-உண்மையை
அறிந்த
அரு-அரியமேன்மையுற்ற
வேல்-உமது வேலாயுதத்
துக்கும்
மயில்-மயில்வாகனத்
துக்கும்
சேவற்கும்-கொடியான
சேவலுக்கும்
செம்-செந்நிறமான
கடப்பம்-கடப்பமலராகிய
தெரியலை-மாலைகளை
கொண்ட-அணியப்பெற்
றுள்ள

மடவாரை—மாதர்களையும் (அகம்—புறம் என்ற வகையில்)
பாடி—புகழ்ந்து பாடியும்கூட
சிலர்—சிலபுலவர்கள்
உய்ந்துளார்—நல்வாழ்வுற்றனர் (ஆனால் அடியேன் அவ்விதமின்றி)
புயத்துக்கும்—திருத்தோள் கட்கும்
பாடி—பலவிதமாகப் பாடல் கூறியும்
திகைத்தனன்—துன்ப மிகுதியால் மயங்கிக் கொண்டிருக்கிறேன்
ஏ. று. ஏ. அசை 26

திகையத்தி யானங் கனவாய் விடச்செய் சிறுவிரலா
திகையத்தி யானங் கலிதீர வந்துயர் சேந்த!வினை
திகையத்தி யானங்கள் செய்வார் மிகுசெந்திற் செல்வ!வெண்நந்
திகையத்தி யானங்கன் மைத்துன வேதத்த நிதஞ்சொல்லே

இ—ள்.

திகை—மலைக்கும்படியான
அத்தியான்·கடற்றலைவ னான வருணன்
அங்கு·மதுரையில் (அழிக்கும்படி கடல்நீர் பெருகி வந்த சமயம்)
அன—அவ்விதமாக
வாய்விட—ஓலமிட்டழும்படி
செய்—கைவேலைவிட்டு வற்றச்செய்த
சிறுவிரல்—அழகிய சிறிய கையுடைய
ஆதி·முதன்மைப் பொருளே
கை—துதிக்கையுடைய
அத்தியா-யானையின் துணைவரே
தம்—தொண்டுசெய்யும் எங்களது
சேந்த·முருகப்பெருமானே
வினை—தீயவினைகள்
திகைய·திகைத்தோடுமாறு
தியானங்கள்—செப தவங்களை
செய்வார்—செய்யும் அன்பர்கள்
மிகு·அதிகமாக விளங்கும்
செந்தில்—திருச்செந் தூரில் விளங்கும்
செல்வ·குமாரக்கடவுளே
வெண்தந்தி·வெண்ணிற ஐராவத யானை
கை·கையாலெடுத்து வளர்த்த
அத்தி·தெய்வயானைக்கும்
ஆனங்கன்—அனங்கன் என்ற மன்மதனுக்கும்
மைத்துந·மைத்துன னானவரே

கலி-வறுமை முதலிய துன்பம்
தீர-அறவே நீங்கும் வண்ணம்
வந்து-சரவணத்தடாகத்தில் உதித்து
உயர்-வளர்ந்துசிறப்புற்ற
வேதத்து-வேதங்களின் அந்தம்-முடிவான
உண்மையை
சொல்-சொல்லியருள
வேண்டும்
ஏ. மு. ஏ. அசை 27

தொங் கவலைக் கடற்சீர்ச்செந் தூர தெரியவரும்
தொங் கவலை யெறிகூற் றுவனைத் தினம்நினைக்கும்
தொங் கவலைக் கிளையாம லாண்டு செனனவித்தைத்
தொங் கவலைக் குறித்துரற் குத்துந் தியக்கருத்தே

இ-ள்

தீ-வடவாமுகநெருப்பை
தாங்கு-தன்பாற்கொண்டுள்ள
அவ்-அப்பெரிய
அலைக்கடல்-அலைகளையுடைய கடற்கரையில் விளங்கும்
சீர்-சிறப்புவாய்ந்த
செந்தூர-திருச்செந்திலாண்டவரே
தெரியவரும்-எளிதிலறிய முடியாமல்
அதீத-புலனறிவுக்கடங்காதுள்ள
அங்க-திருவுருவமுடையவரே!
வலை-பாசமான வலையை
எறி-உயிர்கள்மீது வீசுகின்ற
கூற்றுவனை-எமனை
தீது ஆம்-கொடுமையாகிய
கவலைக்கு-வருத்தத்துக்கு ஆளாகி
இளையாமல்-மனம் சலியாவாறு
ஆண்டு-என்னை ஆளாக்கி
செனன-பிறவிக்கு ஆதாரமான
வித்தை-ஆசையான விதைகளை
தீ-அளித்தருள்வதோடு
தாங்கு-என்னைக் காத்தருளவும் வேண்டும்
அவலை-அவலைப்பெற
குறித்த-எண்ணமுற்று
உரலை-வெறும் உரலை
குத்தும்-குத்தியினைப்பது போன்

| | |
|---|---|
| தினம்-எப்போதும் | தியக்கு-உலகமயக்கத்தை |
| நினைக்கும்-எண்ணி அஞ்சுகின்ற | அறுத்து-முற்றும்நீக்கி |
| | எ. று. ஏ. அசை |

அவலை நினைத்து உரலைக்குத்துவது போல என்பது பழமொழி. இறந்து பிறவாத முத்தியைப் பெற விரும்புகிறேன். ஆனால் பிறவிக்கு விதையான ஆசையுடையேன். அதை அறச்செய் என்றதாம். "அவாவென்பது" என்ற குறளை ஒப்புநோக்குக. 28

தியக்க மறமகள் பாற்கொண்டு கெஞ்சிச் சிறுபதமேந்
தியக்க மறமறி சென்னியிற் சேர்த்தவன் சீறரவத்
தியக்க மறலணி வார்மைந்தன் வாழ்திருச் செந்திலையேத்
தியக்க மறணிந்த தென்னவுந் தோருஞ் சிலருளரே

இ-ள்

| | |
|---|---|
| தியக்கம்-மயக்கத்தை | அக்கம்-உருத்திராக்கமும் |
| மறமகள்பால்-வள்ளி நாயகியிடம் | அறல்-கங்கை நீரையும் |
| கொண்டு-அமையப்பெற்று | அணிவார்-புனைந்த சிவபிரானது |
| கெஞ்சி-அவளன்பை வேண்டி | மைந்தன்-திருக்குமாரர் |
| சிறுபதம்-அவளது சிற்றடியை | வாழ்-எழுந்தருளியுள்ள |
| ஏந்தி-கைகளில்தாங்கியும் | திருச்செந்திலை-திருச்செந் தூரை |
| அக்கு-கண்களிடத்தில் | ஏத்தி-வணங்கியதனால் |
| அமர-பொருந்த ஒற்றியும் | அக்க-ஐம்பொறிகளின் |
| மறி-பல திசையிலும் திரும்பியுள்ள | மல்-மாறுபட்டசெயல் |
| சென்னியில்-சிரசினிடத்து | தணிந்தது-மாறி ஒருமைப் பட்டது |
| சேர்த்தவன்-சூடியு பெருமான் | என்ன-என்பதாக |
| சீறு-கோபித்தெழுகின்ற | உயர்ந்துளோரும்-இன்பப் பேறுபெற்ற அன்பர்களும் |
| அரவு-பாம்புகளையும் | சிலர்-ஒருசிலர் |
| அத்தி-எலும்புகளையும் | உளர்-வாழ்கின்றார்கள் |
| | எ. று. ஏ. அசை 29 |

சிலவா கனத்தவங் கையன் மருகன் சிகிமுதலாம்
சிலவா கனத்தவன் செந்தூர்க் குருபரன் தெள்ளருவி
சிலவா கனத்தவ ளஞ்சேர்பல் கோடி சிலம்பனென்னெஞ்
சிலவா கனத்தவஞ் செய்யவொட் டாதுறும் சேவகனே

இ—ள்

சில-தன்னுடையதாக பதினாறு விதமான
ஆகன்-திருவுருக்கொண்டவர்
தத்த-சங்கைப் புனைந்த
அம்கையன்-அழகிய கையுடைய திருமாலின்
மருகன்-மருகனானவர்
சிகிமுதலாம்-மயில்முதல்
சில-யானை, ஆடு, இடபம் ஆகிய
வாகனத்தவன்-ஊர்தியுடையவர்
செந்தூர்-திருச்செந்திலில் உள்ள
குருபரன்-குருநாதர்
தென்-தெளிந்த
அருவி-ஊற்று அருவிகள்
சிலவா-ஓசையுடன் விழுகின்ற
கனத்த-மிகுதியான
வளம்சேர்-செழிப்புடைய
பல்கோடி-எண்ணில்லாத
சிலம்பன்-மலைகளுடையவர்
என்-அடியேனது
நெஞ்சில்-மனதில்
அவா-ஆசையானது
கனத்து-அதிகப்பட்டு
அவம்-தீச்செயல்களை
செய்யஒட்டாது-புரிய விடாமல்
உறும்-என் மனத்தே பொருந்தியிருக்கும்
சேவகனே-முருகப்பெருமானே
எ. று. ஏ. அசை 30

சேவகப் பாவலர் தோன்,இருச் சந்நிதித் தேவரைஒர்
சேவகப் பாவலஞ் சோர உதவிமுன் செய்தவன்,போர்ச்
சேவகப் பாவல கத்தொன் பதின்மர் திறற்றுணைவன்
சேவகப் பாவலர் கண்டேத்தும் செந்திற் சிறுவனன்றே

இ—ள்.

சே-செம்மையான
அக-உள்ளமுடைய
செய்தவன்-அடக்கிய தீரமுடையவன்

பாவலர்-புலவர்களது
கோன்-தலைமையானவர்
திருச்சந்நிதி-கொலுமண்ட
பத்திலிருந்துவணங்கும்
தேவரை-தேவர்கள்பலரை
ஓர்-ஒப்பற்ற
சேவு-யாகத்தில்வந்த
ஆடானது
அக-ஆணவத்துடன்
பாவு-தாவிச்சென்றதால்
அலம்-வந்த அச்சத்தை

சோர-தேவர்கள்அடை
யாதபடி
உதவி-வாகனமாகஊர்ந்து
முன்-முன்னொருசமயம்

போர்-போர்ச்செயலில்
சேவக-வீரமுடையவராய்
பாவல்-பாவுமியல்பை
அகத்து-மனத்துட் கொண்ட
ஒன்பதின்மர்-நவவீரர்களுக்கு
திறல்-வல்லமை மமிக்க
துணைவன்-சகோதர
ரானவர்
சேவக-அடியவர்களும்
பாவல்லர்-தூயதவத்தவர்
களும்
கண்டு-தெரிசித்து
ஏத்தும்-போற்றுகின்ற
செந்தில்-திருச்செந்தூர்
தலைவரான
சிறுவன்-குமரக்கடவுளா
வார்

ஏ. று. அன்று ஏ. அசை 31

செந்திற் சிறுவ நிலையாளர் மெச்செழிற் சேந்த!விடச்
செந்திற் சிறுவன்பர் தேடருஞ் சண்முக செங்கதிர்நேர்
செந்திற் சிறுவளர் சீர்த்துணை யென்கலர் தேவ!திருச்
செந்திற் சிறுவ!நின் பொற்றுளை யென்றன் சிரத்தில்வையே

இ-ள்

செந்தில்-அணுவைவிடக்
குறுகிய
சிறுவ-பிரமாணுவானவரே
நிலையாளர்-உண்மை
ஞானிகள்
மெச்சு-போற்றுகின்ற
எழில்-அழகிற்சிறந்த
சேந்த-முருகப்பெருமானே!
விட-விடத்தையுடைய
செந்தில்-உயிர்களைவிட

சில்-தலைப்பணி
(சடையில்லைபூண்டு)
துவளர்-தளர்நடை
யுடைய (மகளிரை)
சீர்-சிறந்த
துணை-பற்றுக்கோடாவார்
என்கலர்-எனக்கருதாத
தவசிகளது
தேவ-தெய்வமானவரே
திரு-அழகுபெற்ற

சிறுவன்பர்-கொடியவர்கள்
தேடரும்-நாடிக் காண
முடியாத
சண்முக-ஆறுமுகப்
பரமனே!
செம்-செந்நிறமான
கதிர்தேர்-சூரியனை ஒத்த
செம்-ஒளிசெய்வதும்
தில்-விரும்பப்படுவதும்
ஆகிய
செந்தில்-திருச்செந்
தூரினையுடைய
சிறுவ-குமரக் கடவுளே
நின்-உமது
பொற்றாளை-திருவடிகளை
என்றன்-அடியேனது
சிரத்தில்-தலைமீது
வை-சூட்டியருள்வீராக
ஏ. று, ஏ. அசை 32

சிரத்தில கந்தைச் சுமைகொண்டு ளேற்குத் திறல்மிகுவச்
சிரத்தில கந்தைய கோன்புகழ் பேரருட் சீரருள்வாய்
சிரத்தில கந்தையங் கும்புவி கொண்டது தீர்க்கச்செந்திற்
சிரத்தில கந்தைய லார்மோகிக் கும்புயச் சின்மயனே

இ-ள்

சிரத்தில்-தலையினிடம்
அகந்தை-ஆணவமாகிய
சுமை-கனத்தை
கொண்டுளேற்கு-ஏற்
றுள்ள எனக்கு
திறல்மிகு-வலிமை மிகுந்த
வச்சிர-குலிசப்படையை
திலகம்-மேலான ஆயுதமாக
தைய-வைத்திருக்கின்ற
கோன்-தேவேந்திரன்
புகழ்-பாராட்டத்தக்க
பேரருள்-தெய்வீக அருளின்
சீர்-சிறப்பை
அருள்வாய்-கொடுத்தருள
வேண்டும்
சில்-அற்பமாகிய சில
தத்தில்-ஆபத்துக்களால்
அகம்-மனம்
தயங்கும்-தத்தளிக்கின்ற
புவி-உலகத்தார்
கொண்டது-அடைந்
துள்ள துன்பத்தை
தீர்க்க-நீக்குவதற்காக
செந்தில்-திருச்செந்
தூராகிய
சிரத்து-தலைமையான
தலத்து
இலகு-எழுந்தருளியுள்ள
அம்-அழகு நிறைந்த
தையலார்-வள்ளி தெய்வ
யானையாகிய தேவிகள்
மோகிக்கும்-விரும்புகின்ற
புய-தோள்வலிமையுற்ற
சின்மயனே-ஞானவடி
வினனே
ஏ. று 33

சின்மயங் கண்டங்கு மேலோர் பிரானென் சிறியபுன்னெஞ்
சின்மயங் கண்ட திருவடி யான்அயிற் றிண்புயச்சேய்
சின்மயங் கண்டரும் சோலைச்செந் தூரன்,பல் தேவரும்பி
சின்மயங் கண்டசம் போலாதற் றீர்த்த சிகாமணியே

இ-ள்

சின்மயம்கண்-மோன நிலையினிடத்து
தங்கும்-நிலைத்துள்ள
மேலோர்-ஞானிகளுடைய
பிரான்-தலைவனுமிருப்பவன்
என்-அடியேனுடைய
சிறிய-சாதாரணமான
புன்நெஞ்சின்-அற்ப மனத்தின்
மையம்-நடுவிடத்தில்
கண்ட-காணுமாறு நிற்கும்
திருவடியான்-பாதக மலத்தினர்
அயில்-வேலாயுதம் அணிந்த
திண்-லவிமையான
புய-தோள்களையுடைய
சேய்-முருகப்பெருமான்
சில்-சிலவாகிய
மை-மேகங்கள்
அங்கு அண்டு-வந்து பொருந்துமாறு
அரும்-அருமையாக உயர்ந்துள்ள
சோலை-மரக்கூட்டம் விளங்கும்
செந்தூரன்-திருச்செந்தூர்ப் பரமன்
பல்தேவரும்-பலவானவர்களும்
பிசின்-ஒட்டும் பசையில்
மயங்கு-சிக்கித் தவிக்கின்ற
அண்டசம்போல்-பறவைகளைப்போல
ஆதல்-சூரனிடம் வருந்தியதை
தீர்த்த-நீக்கியருளிய
சிகாமணியே-முதன்மைக் கடவுளாக இருப்பவ[ராகும்
எ. று.

34

சிகாவள மேறிய சேவக தாரகச் சீர்தருதே
சிகாவள மேநிகர் கொங்கைக் கவுரிகைச் செல்வ!மைவ
சிகாவள மேவிய செந்திற் குமார நினமெனையா
சிகாவள மேகமொல் சிகைத் தொழிற்கைத் திரந்தெரியே

இ—ள்.

சிகாவள-மயிலின் மீது ஏறிய-இவர்ந்து செல்கின்ற சேவக-வீரமிககவரே தாரக-பிரணவத்தின் சீர்தரு-பொருளைக் கூறி யருளும் தேசிகா—குருநாதரே வ(ன்)னமே—சிறு கின்னங் களை நிகர்—ஒப்பாகிய கொங்கை-தனங்களை யுடைய கவுரி—உமாதேவியின் கை-கையிலேந்தி மகிழும் செல்வ—பிள்ளைப் பெருமானே மை மேகங்கள் வசி—தங்குதற்கிடமான கா-சோலையின் அழகும் அளம்-உப்பளங்களும் மேவிய-பொருந்தியுள்ள செந்தில்—திருச்செந் தூரில் விளங்கும் குமார—குமாரக்கடவுளே தினம்—எப்பொழுதும் எனை-அடியேனை ஆகி—விருப்பமுடன் கா-காத்தருள்வது வேண்டும் வள-சகல சிறப்புந் தருகின்ற மேகம்-மேகமுங்கூட ஒல்கு-நாணும்படியான ஈகை—கொடைத் தன்மை யின் தொழில்-செயலையுடைய கை-உமது கைகளின் திறம்—வள்ளன்மையினை தெரி-யான் காணச் செய்வீராக ஏ. று. ஏ. அசை 35

திரத்த வரச னெனச்செந்தி லாள்குக செல்வெனவே
திரத்த வரச மிவர்ந்தாய்!வை வேலிற் செறிதருமு
திரத்த வரசண் முகா!எழு கோடி திருப்பெருமந்
திரத்த வாச மறியேற்குன் அன்பென்று தித்திக்குமே

இ—ள்.

திரத்த-என்றும் நிலையான அரசன்என—தலைமைக் கடவுளாக செந்தில்—திருச்செந்திற் பதியில் வர—மேன்மையமைந்த சண்முகா-ஆறுமுகக் கடவுளே எழுகோடி-ஏழுவித முடிவினையுள்ள

ஆள்-ஆட்சி செலுத்தும்
குக-குகப்பெருமானே
செல்எள-மேகத்தின் இடி
ஒலிபோல
அதிர்-முழங்கி
அத்த-சிவப்பு நிறமுடைய
அசம்-ஆட்டுக்கடாவை
இவர்ந்தாய்-ஏறிச்செலுத்
தியவரே
வை-கூர்மையான
வேலில்-வேற்படையில்
செறிதரும்-நிறையப்
பெற்ற
உதிரத்த-அசுரரது இரத்
தம் தோயப்பெற்றவரே

திரு-தெய்வத்தன்மையும்
பெரு-பெருமையும் உடைய
மந்திரத்தவ-மந்திரங்
களைக் கொண்டவரே
ரசம்-இனிய உண்மைப்
பொருளை
அறியேற்கு-உணராத
அடியேற்கு
உன்-தேவரீரது
அன்பு-பத்திச்செல்வம்

என்று-எப்போது
தித்திக்கும்-இனிமையைக்
கொடுக்கவல்லதாகும்
எ. று. ஏ. அசை 36

தித்திக்கு மாரனை யந்தவிர்த் தொன்றைச் சிவனுக்குப்போ
தித்திக்கு மாரனை வெல்லச்செய் தோன்செந்திற் செல்வன்;நிரு
தித்திக்கு மார வயமுங்கொள் வெற்பினர் சித்தத்துக்குந்
தித்திக்கு மாரனை யாதென்னை யாளிற் செகமுய்யுமே.

இ-ள்.

தித்தி-குரவமலரையணிந்த
குமாரன்-குமாரக்கடவுள்
ஐயம்-சந்தேகத்தை
தவிர்த்து-நீங்கச்செய்து
ஒன்றை-பிரவணப்
பொருளை
சிவனுக்கு-பரமசிவனுக்கு
போதித்து-உபதேசித்து
இக்கு-கரும்புவில்லுடைய
மாரனை-மன்மதனை
வெல்ல-வெற்றிபெறும்படி
செய்தோன்-அருளியவர்

ஆரல்-சந்தனமரச்செறிவின்
நயமும்-இனிமையும்
கொள்-கொண்ட
பொதிகை என்ற
வெற்பினர்-மலையினரான
அகத்தியர்
சித்தத்துக்கு-மனதுக்கு
தித்திக்கும்-ஆனந்த
இன்பமான
ஆரன்-கடம்பமாலையுடைய
எம் தலைவன்
நையாது-வருந்தாவாறு

செந்தில்—திருச்செந்
தூருடைய
செல்வன்-முருகப்
பெருமான்
நிருதி-தென்மேற்கா
யுள்ள
திக்கும்—திசையில்
விளங்கும்

என்னை—அடியேனை
ஆளில்—ஆண்டு
கொண்டால்
செகம்-இவ்வுலகம்
உய்யும்-நல்லநிலையடையும்
எ. று. ஏ. அசை

37

செகமுத வாவென நீத்தவல் லோர்தினம் செய்தவத்தைச்
செகமுத வாரியொப் பாம்விழி யார்க்கஞ்சிச்
சிந்தைநொந்தேன்
செகமுத வாவரும் உய்யுஞ்செந் தூர சிவன்விரும்போர்
செகமுத வாண்மைய புள்ளர சஞ்சச் சினத்தவனே

இ—ள்

செகம்-இவ்வுலகவாழ்க்கை
உதவா-பயனற்றது
என—என்பதாயறிந்து
நீத்த-வெறுத்துத் தவம்
புரியும்
வல்லோர்—ஞானவான்கள்
தினம்-சதா காலமும்
செய்தவத்தை-புரியும்
தவமுயற்சியை
செரு-அழிக்கவல்லதாய்

அமுதவாரி—இனிய கடலை
ஒப்பாம்-ஒத்தமைந்த

விழியார்க்கு-கண்ணுடைய
மாதர்கட்கு
அஞ்சி-பயந்து
சிந்தை-மனம்

அமுது—ஊனை (யாக
அவியை)
அவாவரும்-விரும்பும் தேவ
ரும்
உய்யும்-வணங்கிப் பய
னுறும்
செந்தூர—திருச்செந்தூர்ப்
பரமனே
சிவன்-சிவபிரானால்
விரும்பு—விரும்பக்கூடிய
ஓர்-ஒப்பற்ற
செகம்-பிரணவப்பொருளை
உதவு-உபதேசித்தருளிய
ஆண்மைய—பெருமை
யுடையவரே
புள்ளரசு—சக்கரவாக
மென்ற வெற்றிப் பறவை
அஞ்ச-பயமுறும்படி

நொந்தேன்–மிகவருந்தினேன்
செகு-உயிர்க்கொலையால் வரும்
சினத்தவனே-கோபித்துப் போரிட்டவரே
எ. று.

சூரன்-சக்கரவாகப்பறவை வடிவுற்று, ஒவ்வோரண்டமாகிச் சென்றபோது இந்திரனை மயிலாக்கி முருகன் பின்தொடர்ந்து வென்றனன் என்க. 38

*சினத்த வரவணி வார்மைந்த யாருந் தெரிவருமெய்ச்*
*சினத்த வரவச்செஞ் சிரடி யார்நடஞ் சேர்செந்திலாய்!*
*சினத்த வரவர்தஞ் சிற்றின மாயெனைச் செப்புமுன் உன்*
*சினத்த வரவ கடந்தீர் நலம்பெறச் செய்தருளே*

இ—ள்

சினத்த சீறிக்கோபிக்கின்ற
அரவு-பாம்புகளை
அணிவார்–பலவகையிற் பூண்ட சிவனது
மைந்த–திருக்குமாரரே
யாரும்–எத்தகையோராலும்
தெரிவரும்–அறியமுடியாத
மெய்-உண்மையான
சி(ன்)னத்த–அடையாளங்களையுடையவரே
அரவ–காற்பணிகளின் ஒலியால்
செம் சிறப்பமைய
சிறு அடியார்–சிறியபாதமுடைய மாதரது
நடம்சேர்–நாட்டியச் சிறப்புடைய
செந்திலாய்–திருச்செந்தூரின் தலைவரே
சின்னத்தவர்–சிறுதவமுடையவர்
அவர்தம்–தங்களின்
சிற்றினமாய்-இனமென்ற நிலையில்
எனை-அடியேனை
செப்புமுன்–கூறுதற்கு முன்னரே
உன்–உம்முடைய
சின்–ஞானநுபவத்தை
நத்த–விரும்பிப்பெறவும்
வரு–வந்துசேர்ந்துள்ள
அவகடம்·இந்தஊனுடம்பு
தீர்-நீங்கப்பெறும்
நலம்–முத்தியாகிய நன்மையை
பெற–நானடையும்படி
செய்தருள்–உதவியருள்வீராக
எ. று. ஏ. அசை 39

சின்னம் – சிவசாதனமான திருநீறு, உருத்திராக்க முதலியவை.

செய்தவஞ் சற்றுளத் திச்சைபல் கோடிநின் சீரருள்மஞ்
செய்தவஞ் சற்றுய்ந்து ளாருடன் சேர்வன்கொல் தீமலரஞ்
செய்தவஞ் சற்றுதி யார்வாழ்செந் தூர செழும்பவளச்
செய்தவஞ் சற்றுணைக் கையால்முன் னல்கினை தெம்புற்றதே

இ-ள்

செய்தவம்-யானியற்றிய தவம்
சற்று-மிகவும் குறைவானது
உளத்து-மனதில் உள்ள
இச்சை-விருப்பங்களோ
பல்கோடி-மிகப்பலவாகும்
நின்-தேவரீரது
சீர் அருள்-திருவருளாகிய
மஞ்சு-கருணைமேகம்
எய்த-அருள் பொழிந்ததனால்
அஞ்சு-ஐம்புலவாதனை
அற்று-நீங்கப்பெற்று
உய்ந்துளாருடன்-ஞானமடைந்த பெரியோரோடு
சேர்வன்கொல்-யான் சேரப்பெறுவேனோ
தீமலர்-கொடிய பூங்கணைகள்
அஞ்சு-ஐந்தினையும்
எய்த-விடுக்கின்றவனான
வஞ்சன்-கபட மன்மதனை
துதியார்-புகழாத தவசிகள்
வாழ்-வாழ்கின்ற
செந்தூர-திருச்செந்திலாண்டவரே
செழும்-வளமான
பவள-பவளம்போன்று
செய்த-சிவந்த
துணைக்கையால்-இரு கரங்களாலும்
அஞ்சல்-அபயக்குறிப்பை
முன்-அன்றொரு சமயம்
நல்கினை-காட்டியருளினீர் (அதனால்)
தெம்பு-ஊக்கம்
உற்றது-மனதில் அமைந்தது
எ. று. ஏ. அசை 40

தெம்பல வாவிறல் காட்டவென் றுடிய சேய்,கமலத்
தெம்பல வாவி பொரும்பணைச் செந்திற் சிவகுரு வந்
தெம்பல வாவி மறுகாதன் றம்படிச் செப்பவுண்டாம்
தெம்பல வாவியிற் றீயிற் புனலின் சிதறியதே

இ-ள்

தெம்பு-செருக்கினால்
அலவா-நீதிக்கு மாறுபட்ட
விறல்-வலிய செயல்களை
காட்ட-அசுரர்கள்
செய்தபோது
வென்று-அவற்றைச்
செயித்து
ஆடிய-திருவிளையாட்
டியற்றிய
சேய்-முருகப்பெருமான்
கமல-தாமரை வளர்தற்கு
இடமான
தெம்பல்-சேறும்
அ-அழகும்பொருந்திய
வாவி-நீர்த்தடாகங்களை
பொரும்-ஒப்பாயுள்ள
பணை-வயற்சிறப்பமைந்த
செந்தில்-திருச்செந்திலில்
உள்ள
சிவகுரு-சாமிநாதக்கடவுள்
வந்து-எழுந்தருளி
எம்-அடியேனுடைய
பல-பயனுள்ள
ஆவி-உயிர்
மறுகாது-தவியாவாறு
அன்று-முன்னொரு சமயம்
அப்படி-அந்த விதமாக
செப்ப-மொழிந்த
அருளுரையால்
உண்டாம்-ஏற்பட்ட
தெம்புஅலவா-உற்சாக
மன்றோ
இயல்-தமிழ்ப் பாடல்களை
தீயில்-நெருப்பிலும்
புனலில்-நீர்நிலைகளிலும்
சிதறியது-அழிய இட்ட
காரணமாகும்
எ. று. ஏ. அசை

சுவாமிகள் தமது பாடற் சுவடிகள் பலவற்றை தீயிலும் நெருப்பிலும் இட்டுச் சேதித்தனர். முருகனருளிய அருள்மொழியே துணிவு தந்ததென்பதாம். அநுபவக் குறிப்பு. 41

சிதறிய வேண படியாட லெங்கணும் செய்யமுன்னாட்
சிதறிய பாடல் பெறநாடி வாடிய சேரறிவாய்!
சிதறிய தாமென நல்குநர் வாழ்திருச் செந்திற்கந்தா!
சிதறியங் கிவ்வுடல் தின்னுமுன் வீந்தருள் சேவையையே

இ-ள்

சித்-ஞான அநுபவத்தை
அறிய-உணர்ந்துபெறவும்
ஆமென-ஒப்பென்னும்படி
நல்குநர்-ஈகைபுரிபவர்கள்

வேணபடி–விரும்பியவாறு
ஆடல்-சித்தாடலே
எங்கணும்-எல்லா இடங்களிலும்
செய்ய-சென்று நடத்தவும்
முன்னாள்– அககாலத்தில்
சிதறிய-என்னால் அழிக்கப்பட்ட
பாடல்-தமிழ்ப்பனுவல்களை
பெற-மீண்டு உம்மாற் பெறவும்
நாடி–விருப்பமுற்று
வாடிய-மனம் வருந்துகின்ற
சீர்-என் உள்ளப்பண்பை
அறிவாய்-நீர் அறிவீர்
சிதறி அது–பரவிப்பெய்யும் மழையை
வாழ்-நிறைந்துவசிக்கின்ற
திருச்செந்தில்-திருச்செந்தூரில் விளங்கும்
கந்தா–கந்தக் கடவுளே
சிதல்-கறையான்களும்
தீ–நெருப்பும்
அங்கு-ஈமத்தினிடமாக
இவ்வுடல்-இச்சரீரத்தை
தின்னுமுன்-உண்ணுமுன்பே
சேவையை-உமது காட்சியை
ஈந்து-யான் காண உதவி
அருள்-திருவருள் புரிவீராக
எ. று. ஏ. அசை 42

சேவை யினியதெண் ணீர்த்தென்றல் வெற்பிற் சிறுமுனிவன்
சேவை யினியங்கும் வேலொடு சென்றனை செந்திலுக்கச்
சேவை யினியமம் வைத்துவந் தேன்,கொடுஞ் சித்தசனஞ்
சேவை யினியடி யேன்மீதெய் யாது செறுத்தருளே.

இ–ள்.

சேவு–இடப வாகனராகிய
ஐ-சிவபிரானுக்கும்
இனிய-இனிமையான
தெள்நீர்-தெளிநீர் அருவியும்
தென்றல்-தென்றற் காற்றையுமுள்ள
வெற்பின்-பொதியமலைக்குரிய
அ–அத்தகைய
சேவையின்-காட்சியைப் பெறவிரும்பி
நியமம்–வழிபாட்டு முறைகளை
வைத்து–மனதிற்கொண்டு
வந்தேன்–யான் வந்துள்ளேன்
கொடும்-கொடியவனான

சிறுமுனிவன்-குறுமுனி வருக்கும்
சேசிவப்பு நிறமும்
வையின்-கூர்மையும் கொண்டு
இயங்கும்-விளங்குகின்ற
வேலொடு-வேற்படையுடன்
சென்றனை-அருள்புரியச் சென்றீர்
செந்திலுக்கு-திருச்செந்தூருக்கு
சித்தசன்-மன்மதன்
அஞ்சு-ஐந்தாகிய
ஏவை-மலரம்புகளை
இனி-இனிமேலாவது
அடியேன்மீது-என்னிடம்
எய்யாது-தொடுக்காதபடி
செறுத்து-அவனைக் கோபித்து
அருள்-என்னைக் காக்க வேண்டும்
ஏ. று. ஏ. அசை 43

செறுத்தலை வாளைத் திரளுந்தி வானிடைச் சென்றுடுக்கட்
செறுத்தலை வாளைக் கடலேங்க விழ்திருச் செந்திற்கந்தா!
செறுத்தலை வாளைவெல் கண்ணுரைக் கொள்மலைத் தேவ!தென்னுர்ச்
செறுத்தலை வாளைய கோர்வெனக் குத்தினன் சேர்க்கைநல்கே

இ-ள்

செறுத்தலை-வயல்களிடத்து
வாளைத்திரள்-வாளைமீன் கூட்டம்
உந்தி-மேலெழுந்து
வானிடை-ஆகாயத்தின் பால்
சென்று-பாயந்து
உடுக்கள்-மீனென்ற பெயருடைய நட்சத்திரங்களை
செறுத்து-கோபித்து மீளவும்
அலை-அலைகளையும்
வாள்-ஒளியையும்
ஐ-அழகையுமுடைய
கடல்-சமுத்திரமானது
வாளை-கூரிய வாளையும்
வெல்-வெல்லத்தக்க
கண்ணுரை-கண்களுடைய
இரண்டு தேவிமார்களை
கொள்-கொண்டு விளங்குகின்ற
மலைத்தேவ-மலைநிலத் தெய்வமே
ஒன்னுர்-பகைவர்களை
செறுத்து-கொன்று
அலைவாள்-போர்க்களத்தில் உலாவிய காளியை
ஐயகோஎன-ஐயோ என் றலறும்படி

ஏங்க-புலம்பும்படி
வீழ்-மேலிருந்து
குதிக்கின்ற
திருச்செந்தில்-திருச்செந்
தூரில் எழுந்தருளிய
கந்த-கந்தக்கடவுளே
செல்-மேகம்
துய்த்தலை-உண்பதான
கடலையும்
குத்தினன்-குத்திய வீர
வாகுவை ஒத்த
சேர்க்கை-வீரர் கூட்டத்
தில் வாழும் சிறப்பை
நல்கு-கொடுத்தருள்வீராக
எ. று. ஏ. அசை
வீரவாகுவுடன் கூடும்
சிறப்பை எனவும் கொள்ள
லாம். 44

சேர்க்கைய தாகக் கவுமா ரரைத்தந்து செங்கடப்பஞ்
சேர்க்கைய தாகப் பயனல்கு வாய்புனச் சேயிழைதன்
சேர்க்கைய தாகருங் கோட்டுச்செம் மாவல சீறவுணர்
சேர்க்கைய தா!கவின் செந்தூர எங்குந் திரிபவனே

இ-ள்

சேர்க்கையதாக-யான்
சேரும் இடமாக
கவுமாரரை-உனது அடிய
வர்களை
தந்து-அடியேனுக்கு உதவி
செம்-செம்மையான
கடப்பம்-கடப்ப மலர்களை
சேர்-சேரத்தொடுக்கும்
பணி
கையது-என் கைக்கு உரி
யது
ஆக-ஆகும்படி உதவி
பயன்-விரும்பிய வரங்களை
நல்குவாய்-கொடுத்தருள்
வீராக
புன-தினைப்புனைத்திருந்த
தா-தாவுகின்ற
கரும்-கருமை நிறமான
கோட்டு-கொம்புடையதாய்
செம்-செம்மை நிறமமைந்த
மா-ஆட்டைச் செலுத்தும்
வல-வல்லபமுடையவரே
சீறு-கோபித்தெழுகின்ற
அவுணர்-அசுரர்கள்
சேர்க்கை-கூட்டத்தை
அதா-அழித்தவரே
கவின்-அழகுமிக்க
செந்தூர-திருச்செந்தி
லாண்டவரே
எங்கும்-அன்பர்கள்
உள்ள இடமெலாம்

சேயிழைதன்–வள்ளி நாயகியின்
சேர்க்கைய–கூட்டுற வுடையவரே
திரிபவனே–சென்றருள் பவரே
எ. று. 45

திரியுங் கருமருப் பாடேறித் தொண்டர் திகைப்பொழியத்
திரியுங் கருமன் றிருச்செந்தில் வாழ்குகன் தேவர்தம்மெ
திரியுங் கருமறை யோன்மாலைச் செய்துயர் தீர்த்தவன்,அத்
திரியுங் கருமற் றவிர்த்தாள்நன் னீருங்கொள் சிற்பரனே

இ–ள்

திரியும்–திருகி வளைந் துள்ள
கருமருப்பு–கருங்கொம் புடைய
ஆடுஏறி–ஆட்டில் இவர்ந்து
தொண்டர்–அடியவர் களது
திகைப்பு–சஞ்சலங்கள்
ஒழிய–நீங்கும்படி
திரியும்–பவனிசெய்த
கருமன்–தொழிலுடையவர்
திருச்செந்தில்–திருச்செந் தூரில்
வாழ்–எழுந்தருளியுள்ள
குகன்–குகக்கடவுள்
தேவர்தம்–வானவர் களுடைய
எதிரி–பகைவனான சூரனுவான்
உங்கு–மேலிடத்துள்ள
அருமறையோன்–பிர மனையும்
மாலை–திருமாலையும்
செய்துயர்–படுத்திய கொடுமை
தீர்த்தவன்–நீக்கியருளியவர்
அத்திரியும்–மலைபோன்ற
கரு–பிறவியிலாகிய
மல்–துயரங்களை
தவிர்த்து–அடியருக்கில் லாமல் செய்து
ஆள்–ஆண்டருளுகின்ற
நல்நீர்–நல்ல கருணைப் பண்பை
கொள்–பெற்றுவிளங்கும்
சிற்பரன்–ஞான வடிவானவர்
எ. று. ஏ. அசை 46

சிற்பரன் றன்புடன் செய்யும் உருவினும் சேர்ந்தொளிரும்
சிற்பரன் றன்ம மலிசெந்தில் வாழருட் டேசிகனெஞ்
சிற்பரன் றன்விழிச் சேயென நாடுஞ் சிலருக்குள்மா
ஒற்பரன் றன்றெனும் நீதிக்கு மொத்துச் சிறந்தவனே

இ-ள்.

சிற்பர்-சிற்பக் கலைஞர்கள்.
அன்று-முற்காலத்தில்
அன்புடன்-பத்தியுடன
செய்யும்-செதுக்கிய
உருவினும்-வடிவங்களிலும்
சேர்ந்து-கலந்து நின்று
ஒளிரும்-விளங்குகின்ற
சிற்பரன்-பரம்பொருளாவர்
தன்மம்-அறச்செயல்கள்
மலி-நிறைந்துள்ள
செந்தில்-திருச்செந்தூரில்
வாழ்-எழுந்தருளியுள்ள
அருள்-திருவருட் சிறப்புடைய
தேசிகன்-சற்குரு நாதர்
நெஞ்சில்-மனத்தினிடமாக
பரன்றன்-பரமசிவனது
விழி-நெருப்புக்கண்வழி யுதித்த
சேய்என-குமாரக் கடவுளென்று
நாடும்-தியானிக்கின்ற
சிலருக்கும்-ஒருசில பேர்களுக்கும்
உள்-நினைக்கத்தக்கதாயும்
மாசு இல்-குற்றமற்றதாயுமுள்ள
பரு-சகளவடிவம்(உருவம்)
அன்று அன்று-உடையதல்ல
எனும்-(அருவமே) என்று கூறும்
நீதிக்கும்-உண்மைக்கும்
ஒத்து-இருவிதமாயும்
இணங்கி நின்றருளும்
சிறந்தவன்-திருவருளுடையவன் 47

உருவாய் அருவாய் உளதாய் இலதாய் என்ற அநுபூதிப் பாடலை ஒப்பு நோக்குக.

சிறப்பன வாயிரம் சேரார்செந் தூர்வளர் சேய்;கொடுஞ்சூர்ச்
சிறப்பன வாயிரம் போன்றபல் பாடல்கட் சிந்தல்முதற்
சிறப்பன வாயிரங் கெற்றற்கும் நேயன்,கை சேர்உளுந்திற்
சிறப்பன வாயிர மாகவிட் டானைத் தெளித்தவனே

இ—ள்.

சிறப்பன-மேலான அருட்செயல்
ஆயிரம்-மிகுதியாகவும்
சீர்-சிறப்பாகவும்
அனவாய்-அதுபோன்ற
வேறுசில தவற்றினையும்
இரங்கு-எண்ணி ஏங்குகின்ற

ஆர்-அமையப்பெற்ற
செந்தூர்-திருச்செந்தூரில்
வளர்-கோயில்கொண்டுள்ள
சேய்-முருகக் கடவுள்
கொடும்-கொடியவனான
சூர்-சூரனை
சிறு-கோபித்த
அப்பன்-தந்தையாவர்
அ-அந்த
ஆயிரம்போன்ற-ஆயிரக் கணக்கான
பல்பாடல்கள்-பலபாட்டுக்களை
சிந்தல்முதல்-அடியேன் சிதைத்தது முதலாகிய
சில்தப்பு-சில தவறுகளையும்
என்றற்கும்-அடியேனுக்கும்
நேயன்-அன்புள்ள கடவுள்
கைசேர்-உள்ளங்கையிடம் உள்ள
உளுந்தில்-உளுந்தைப் போன்ற
சிறு-சிற்றளவில்
அப்பு-கடல்நீரை உண்டு
அன்ன-அதுபோற்குறுகிய
வாய்-தனது வாய்வழி
இரமாக-மகிழ்வுடன்
விட்டானை-உண்டவரான குறுமுனியை
தெளித்தவன்-உபதேசித்தருள்புரிந்த முருகப் பெருமானுவர்
எ. று. ஏ. அசை 48

தெளித்தவித் தாரக் கவிவாணர் சூழ்திருச் செந்திலிறை
தெளித்தவித் தாரவ் வனத்தேனல் காத்த சிறுமியெதிர்
தெளித்தவித் தார மணிமார்பிற் சேரச் செலுத்தியசேய்
தெளித்தவித் தாரரு ளாளெனில் மாயுமென் சிற்றனமே

இ-ள்

தெளித்த-தெளிவினை உடைய
வித்தார-விரிந்த புலமையுள்ள
கவிவாணர்-பெரும் புலவர்கள்
சூழ்-நெருங்கி வாழ்கின்ற
திருச்செந்தில்-திருச்செந்தூரின்
அவித்து-இப்பிறப்பின் இழிவை மாற்றி
ஆரம்- மலர்மாலைகளை
அணி-புனைந்துள்ள
மார்பில்-தனது மார்பிடத்தில்
சேர-தழுவும்படி
செலுத்திய-கருணை செய்த
சேய்-முருகப் பெருமான்.

இறை-தலைமையுடையவர்
தெளித்த-விதைக்கப்பட்ட
வித்து ஆர்-விதைகளைக் கொண்ட
அவ்வனத்து-அக்காட்டி லிருந்து
ஏனல்-தினைப்பயிர்களை
காத்த-காவல்புரிந்த
சிறுமி-வள்ளிநாயகியின்
எதிர்-முன்சென்று
தெளித்து-அவன் முன் னிலைமையை விளக்கி
தெளித்த-தேனைச் சிதறுகின்ற
வி-சிறப்பு மிக்க
தார்-அவனதுமலர் மாலையை
அருளான் எனில்-தாரா திருந்தால்
என்-எனது
சிற்றன்னம்-சிறிய பேதை மகள்
மாயும்-அவன் விருப்பத் தால் உயிர்விட நேரும்
எ. று. ஏ. அசை 49

சிற்றர மானனை யார்மயல் வாதனை தீர்த்தருள்மெய்ச்
சிற்றர மான வடிவேலோ டென்முற் றிகழ்வதென்றோ
சிற்றர மான விழிவள்ளி கேள்வ!செந் திற்செல்வ!மிஞ்
சிற்றர மானருள் மங்கைபங் காபல் சிலம்பினனே

இ—ள்

சில்-தலைப்பணியை
தர-தரித்துள்ள
மான் அனையர்-மான் போன்ற மாதரது
மயல்-காமமாகிய
வாதனை-ஆசைத் துயரை
தீர்த்தருள்-நீக்குதல் வேண்டும்
மெய்ச்சில்-உண்மையான புகழில்
தரமான-தகுதியுடைய
வேடி-கூர்மை மிக்க
வேலொடு-வேலாயுதத் துடன்
விழி-கண்களைக் கொண்ட
வள்ளி-வள்ளிநாயகியின்
கேள்வ-கணவரே
செந்தில்-திருச்செந் தூரின்
செல்வ-செல்வமாயுள்ள வரே
மிஞ்சு இல்-தனக்குமேல் இல்லாத
தரு-கற்பகத்தருவினனை
அ(ம்)மான் மாமனாகிய இந்திரன்
அருள்-வளர்த்துதவிய
மங்கை-தெய்வயானையின்

என்முன்-அடியேனெதிரில்
திகழ்வது-காட்சி தருவது
என்ரே-எக்காலமோ
சிற்று அர-சிறியஅரத்தினை
மான-ஒத்ததான
பங்கா-நாயகரே
பல்-பலவாகிய
சிலம்பினனே-மலைக்குரிய
வரே
எ. று. 50

சிலம்பணித் தாளத்தர் தந்தகந் தா!எழிற் செந்திலுள்ளாய்!
சிலம்பணித் தாளத் தனிச்சீர் குலாவத் திகழ்ந்தபல
சிலம்பணித் தாளத்த ஆடல்செய் வாய்!நின் திருப்புகழ்பே
சிலம்பணித் தாளத் ததியிது காண்!அருட் சித்தருளே

இ-ள்

சிலம்பு-காற்சிலம்பை
அணி-தரித்திருக்கின்ற
தாள்-திருவடிகளையுடைய
அத்தர்-சிவபிரான்
தந்த-தோற்றுவித்தருளிய
கந்தா-கந்தக் கடவுளே
எழில்-அழகுவாய்ந்த
செந்தில்-திருச்செந்தூரில்
உள்ளாய்-கோயில்கொண்
டிருப்பவரே
சில்அம்பு-சில நீர்நிலைகளை
அணித்து-அருகில்
உறும்படி
ஆள்-கொண்டுவிளங்கும்
அத்தனிச்சீர்-இனியசிறப்பு
குலாவத்திகழ்ந்த-அமைந்
துள்ள
பல-பலவாகிய
சிலம்பு-மலைகளில்
அ(ண்)ணி-பொருந்தி
யிருந்து
தாளத்த-தாளவரிசை
யுடன்
ஆடல்-திருநடனத்தை
செய்வாய்-புரிந்தருள்
பவரே
நின்-உம்முடைய
திருப்புகழ்-இனியசிறப்பை
பேசிலம்-கூறுதிருக்கின்
றேன் (ஆயினும்)
பணித்து-பணியாளனுக
ஏற்று
ஆள-ஆட்கொள்வதற்கு
ததி-ஏற்றசமயம்
இதுகாண்-இதுவேயாகும்
அருட்சித்து-திருவருளா
டல்களைச் செய்யும்
ஆற்றலை
அருள்-வளங்கியருள்
வீராக
எ. று. ஏ. அசை 51

சித்தத்தை யானனத் தானுணர் தேசிகன் செந்திலில்வ
சித்தத்தை யானனங் கைக்குரித் தாங்குகன், செந்தமிழா
சித்தத்தை யானனத் தானைச் சிறைப்படச் செய்தவனெண்
சித்தத்தை யானன விற்செயக் காட்டுந் திறத்தினனே

இ—ள்

சித்தத்து-தனது திருவுளத்தில்
ஐ-ஐந்தாகிய
ஆனனத்தான்-முகமுடைய சிவன்
உணர்-மதித்தறிந்துள்ள
தேசிகன்-குருநாதரானவர்
செந்திலில்-திருச்செந்தூரில்
வசித்து-எழுந்தருளியிருந்து
அத்த-செல்வத்துக்கு
ஐ ஆன-தலைமையான திருமகளை ஒத்த
தங்கைக்கு-தெய்வயானைக்கு
உரித்து ஆம்-உரிமை மிக்கவர்
செம்-செம்மையான
தமிழ்-தமிழ்ப் பாடல்களை
ஆசி-விரும்பிப்பாடிய
தத்தையான்-அருணகிரிநாதராகிய கிளியினையுடையவர்
அனத்தானை-பிரமனை
சிறைப்பட-சிறையிலிருக்கும்படி
செய்தவன்-தண்டம் செய்தவர்
எண்-எட்டு விதமான
சித்து அத்தை-சித்திவகைகளை
யான்-அடியேன்
நனவில்-சாக்கிரத்தில்
செய-பலரறியும்படிச்செய்ய
காட்டும்-திருவருள் புரிகின்ற
திறத்தினன்-வல்லமையுடையவரேயாம்
எ. று. ஏ. அசை 52

திறக்கும் பகம்பக் களிறன்ன கொங்கைச் சிறுமியர்தம்
திறக்கும் பகம்பகற் போதினுங் காண்பவர் சேர்க்கை கொள்ளாத்
திறக்கும் பகம்பரிந் தீந்தருள் வாய்!செந்திற் சீர்பகரும்
திறக்கும் பகம்பக டூர்க்கைப்புந் தந்த சிவகுருவே

இ—ள்

திற-வலிமையான
கும்ப-மத்தகத்தையும்
பரிந்து-என்மீது இரங்கி
ஈந்து-பெறஉதவி

கம்ப-அசைதலையுமுடைய
களிறு அன்ன-யானை
மத்தகம் போன்ற
கொங்கை-தனங்களைக்
கொண்ட
சிறுமியர் தம்-மாதர்களது
திறக்கும்-வெளிப்படவிருக்
கும்
பகம்-மறைவிடத்தை
பகற்போதினும்-நண்பகலி
லும்
காண்பவர்-காணவிழை
பவரது
சேர்க்கை-கூட்டுறவை
கொள்ளா-மேற்கொள்
ளாத
திற-மனவுறுதி பெற்ற
கும்பு-மேலோர்கூட்டத்தை
அகம்-உமது திருவுள்ளம்
அருள்வாய்-கருணை
புரிவீராக.
செந்தில்-திருச்செந்தூர்ப்
பதியின்
சீர்-தெய்வச்சிறப்பை
பகரும்-பாராட்டுகின்ற
திறக்கு-தன்மையுள்ள
எனக்கு
உம்பஅகம்-தேவலோகத்
துள்ள
பகடு-ஐராவத யானைமீது
ஊர்-ஏறிச்செல்லும்
இந்திர போகத்தின்
கைப்பும்-வெறுப்பை
தந்த-இயல்பாகவே
உதவிய
சிவகுருவே-சிவகுரு
நாதரே
எ. று 53

சிவகுரு வேதண்ட வாணனும் அன்பொடு தெண்டனிடும்
சிவகுரு வேசெந்தி லாதிப னே!அறு திங்கள்முகச்
சிவகுரு வேர்களை ஆறெழுத் தாய்!பரும் செம்மலர்வா
சிவகுரு வேபொரு ளென்றுமெய் ஞானச் செயலருளே

இ—ள்.

சிவ-உயர்வாயும்
குரு-ஒளிஉள்ளதாயும்
உள்ள
வேதண்ட-கயிலைமலையில்
வாணனும்-வாழ்பவரான
சிவனும்
அன்பொடு-பக்தியுடன்
தெண்டனிடும்-வணங்கு
கின்ற
குரு-துன்பங்களின்
வேர்-மூலத்தை
களை-அறச்செய்கின்ற
ஆறெழுத்தாய்-சடாக்கர
முடையவரே
பரும்-பெரிதான
செம்-செந்நிறமான
மலர்-தாமரைப்பூவில்
வாசி-வசிப்பவனான பிரமன்

சிவகுருவே-சாமிநாதக் கடவுளே
செந்தில்-திருச்செந்தூரின்
ஆதியனே-தலைவனே
அறு-ஆறு என்ற எண் ணுள்ள
திங்கள்-சந்திரனை ஒத்த
முக-முகங்களைக் கொண்ட
சிவ-மங்களப் பொருளானவரே
வரு-வினைக்கேற்ப தருவதான
உருவே-சரீரங்களே
பொருள்-உண்மையான ஆன்மா
என்னு-என்று கூறுத
மெய்-சத்தியமான
ஞான-இறையறிவின்பாற்பட்ட
செயல்-தவச்செயலை
அருள்-தந்தருள்வீராக
ஏ, நு. ஏ. அசை

தேகமே உயிரென்பவர் உலோகாயதர் என்க. 54

செயலைத் தருநிழற் போற்றுந ராதியர்ச் செற்றுமகிழ்
செயலைத் தருவதுன் பாரங்கண் டாய்!பல சேல்உகளும்
செயலைத் தரும்வயற் செந்திலெந் தாய்!வெஞ் செருக்களத்தின்
செயலைத் தருக்குடைப் பேயின மும்புகழ் திண்புயனே

இ-ள்

செயலைத்தரு-அசோக மரத்தின்
நிழல்-நிழலிலுள்ள அருகதேவனை
போற்றுநர்-வணங்கும் சமணர்
ஆதியர்-முதலிய புறச் சமயிகளை
செற்று-வென்று
மகிழ்-களிக்கின்ற
செயலை-அருட்சித்தியை
தருவது-அடியேனுக்கு உதவுவது
உன்-தேவரீருடைய
ஐதரும்-அழகுதருகின்ற
வயல்-வயற்சிறப்புடைய
செந்தில்-திருச்செந்தூரிலுள்ள
எந்தாய்-எமது தந்தையே
வெம்-கொடிய
செருக்களத்தின்-போர்க் களத்தின்
செயலை-உமது வெற்றிப் பண்பை
தருக்குஉடை-இறுமாப் புடைய

பாரம்கண்டாய்-கடமை யாகும் பலபலவிதமான சேல்-மீன்வகைகள் உகளும் உலாவுகின்றதும் செயல்-சேற்றின் வளமுடையதுமான பேயினமும்-அலகைக் கூட்டமும் புகழ்-பாராட்டக்கூடிய திண்-வலிமை மிக்க புயனே-தோள்களுடையவரே எ. று. 55

திண்ண வயனம் பறித்தாண்டு ளார்க்குப தேசஞ்சொல்லும்
திண்ண னயனம்பு விட்டழ நான்கு சிரத்துங்குட்டும்
திண்ண னயனம்பு காதருள் வான்,திருச் செந்திலில்வாழ்
திண்ண னயனம்ப வல்லாரை யாளுந் திருக்கண்ணனே

இ–ள்

திண்ணன்-கண்ணப்ப நாயனாரது நயனம்-கண்களை பறித்து-பெயர்க்கச்செய்து ஆண்டுளார்க்கு–அருளிய சிவனுக்கு உபதேசம்–பிரணவப் பொருளை சொல்லும்-கூறிய திண்ணன்-உண்மைப் பொருளானவர் அயன்–பிரமதேவன் அம்புவிட்டு-கண்களில் நீர்கசிந்து அழ–அழும்படி நான்கு-நான்காயுள்ள சிரத்தும்–தலைகளிலும் குட்டும்-மோதியருளிய திண்ணன்-வலிமையுடையவர் அயனம்-பிறப்பை புகாது–அடியவர் பெறுதபடி அருள்வான்-திருவருள் புரிபவர் திருச்செந்திலில்-திருச்செந்தூரில் வாழ்-எழுந்தருளியுள்ள திண்-உறுதியான அனையன்–தாய் போன்ற கருணையினர் நம்ப–தன்னை உறுதியாக எண்ண வல்லாரை–வல்லவர்களை ஆளும்-ஆட்கொள்ளுகின்ற திரு–கருணை நிறைந்த கண்ணன்–திருக்கண்களுடையவராகும் எ. று. ஏ. அசை 56

திருக்கண்ண னும்நந்தன் மைந்தன் மருமகன் செந்திலென்றும்
திருக்கண்ண னனந்த மாறிரண் டாறு சினம்பொருந்தும்
திருக்கண்ண னனந்த வொட்டான் அழலுடற் றெவ்வையுணத்
திருக்கண்ண னனந்தம் ஆதி நடுவறுஞ் செஞ்சடரே

இ-ள்

திரு-அழகிய
கண்ணன் ஆம்-கண்ணபிரானாகி
நந்தன்-நந்தகோபனிடத்து
மைந்தன்-குமாரனாக வளர்ந்த மாயனது
மருமகன்-மருகனானவர்
செந்தில்-திருச்செந்தூர்
என்னும்-என்று வழங்குகின்ற
திரு-செல்வமிக்க
கண்ணன்-இடத்தையுடையவர்
ஆனந்தம்-அருளை வழங்குவதான
ஆறிரண்டு-பன்னிரண்டும்
ஆறு-ஆறாகிய
சினம்-கோபமுடையதும் ஆகி
பொருந்தும்-அமையப்பெற்ற
திரு-தெய்வீகச் சிறப்பான
கண்ணன்-18 கண்களுடையவர்
நான்-அடியேன்
நந்த-துன்பத்தில் கெடும்படி
ஒட்டான்-செய்யாதவர்
அழல்-நெருப்பான
உடல்-சரீரம்பெற்ற
தெவ்வை-பகையான அனலாசுரனை
உண்-விழுங்கிய
அத்தி-யானையான
ருக்கு-வேத முதல்வரான கணபதியை
அண்ணனன்-தமையனாகப் பெற்றவர்
அந்தம்-முடிவும்
ஆதி-முதலும்
நடு-இடையும்
அறும்-இல்லாத
செம்-செந்நிறமான
சுடர்-ஒளிவடிவமுற்ற முருகக்கடவுள் ஆவர்
ஏ. று. ஏ. அசை 57

செஞ்சதங் கைப்பிறப் பெய்தலொட் டாமற்இச் செந்திலில்நிற்
செஞ்சதங் கைப்பதம் சூட்டுவை யோமறை செப்பறியாச்
செஞ்சதங் கைக்கனி போனல்கு வாய்கடற் றீயர்பவுஞ்
செஞ்சதங் கைப்படை யிற்புரி வீரருட் சிரியனே

இ—ள்

செஞ்ச-செய்தனவான
தம்-அவரவர் வினைக்கேற்ப
கை-வரிசையாகவருகின்ற
பிறப்பு-பிறப்பானது
எய்தஒட்டாமல்-என்னைச் சேராதபடி
இச்செந்திலில்-இந்தத் திருச்செந்தூரில்
நின்-உம்முடைய
செம்-தாமரை மலர்போற் சிவந்து
சதங்கை-சிலம்பணியப் பெற்ற
பதம்-திருவடிகளை
சூட்டுவையோ-தலைமீது அணிவீரோ
மறை-வேதங்கள்
செப்பறியா-கூறமுடியாததும்
செம்-உறுதியானதும்
சதம்-நிலைபேறுடையதுமான முத்தியை
கை-கையிடமுற்ற
கனிபோல்-நெல்லிக்கனி போல
நல்குவாய்-கொடுத்தருளவேண்டும்
கடல்-சமுத்திரம்போற் பெருகிய
தீயர்-அசுரர்களது
பவுஞ்சு-படைகளை
எஞ்சு-குறைந்தொழியும்படி
அதம்-நாசமாவதை
கை-திருக்கரத்தணிந்த
படையில்-வேலாயுதத்தால்
புரி-செய்தருளிய
நவவீரருள்-ஒன்பது வீரர்களுக்கும்
சீரியனே-தலைவராகிய முருகப்பெருமானே
எ. று. 58

*சீரிய மானன்ன கண்ணுர்க ளாடற் றிரமிவற்ருற்*
*சீரிய மானன்ன லஞ்சேருங் கோயிற்செந் திற்குகனென்*
*சீரிய மானன்ன ருட்பேறு பெற்றுயச் செய்குதியேற்*
*சீரிய மானன் னணுகாப் பவங்களுந் தீர்தருமே*

இ—ள்

சீரிய-அழகுவாய்ந்த
மான் அன்ன-மானினை ஒத்த
குக-குகக்கடவுளே
என்-அடியேனது
சீர்-சிறந்த

கண்ணார்கள்-கண்களு
டைய மாதர்கள்
ஆடல்-நாட்டியத்தின்
திரம்-ஆடற்சிறப்பு
இவற்றால்-முதலியவை
யாலும்
சீர்—ஒலியையுடைய
இயம்—இசைக்கருவி
களாலும்
மா—மாண்புமிகுந்து
தன் நலம்—நல்ல இனிமை
சேரும்-சேரச்செய்கின்ற
கோயில்—திருக்கோயி
லுடைய
செந்தில்—திருச்செந்திற்
பதியின்
இயமானன்-ஆன்மா
அருட்பேறு-திருவருட்
பேற்றை
பெற்று-எய்தி
உய-கடைத்தேறும்படி
செய்குதியேல்-அருள்
வீராயின்
சீர்-தண்டத்தைக்கொண்ட
இயம-எமனால் வரும்
இறப்பும்
அனன்-அன்னவாகனப்
பிரமனால் வரும் பிறப்பும்
அணுகா—நெருங்கமாட்டா
பவங்களும்-இருவினை
களும்
தீர்தரும்—நீங்கிவிடும்
ஏ. று. ஏ. அசை 59

தீராத வஞ்சயி லம்பரன் மைந்த! திகழயிற்கைத்
தீராத வஞ்சயி லந்திதென் பாருணர் செந்திற்கந்தா
தீராத வஞ்சயி லம்போற்கொள் வாளுயிர்த் தின்பதென்றே
[illegible]ராத வஞ்சயி லம்பேவு மாரன் செருக்குன்றவே

இ—ள்

தீர்-தீர்த்து அருளவேண்
டும்
ஆத-தீமை மிகுந்த
நஞ்சு-ஆலகாலவிடத்தை
அயில்-உண்டவரான
அம்பரன்-சிவபிரானது
மைந்த-திருக்குமாரரே
திகழ்—ஒளிமிகுந்த
அயில்—வேலாயுதத்தை
கை—கையிலேந்திய
தீ—தீமை தருகின்ற
ரா—இராக்காலமானது
தனம்-கொங்கைகளை
சயிலம்போல்—மலைகளைப்
போல
கொள்வாள்—கொண்ட
மகளின்
உயிர்—ஆவி
தின்பது-துன்புறுத்து
வதை

தீரா—வீரமிக்கவரே
தனம்-பொருளும்
ச. இலம்-சேர்ந்த வீடும்
தீது-பந்தம் தருவனவே
என்பார்—என்றறிந்த
ஞானிகள்
உணர்—அறியத்தக்க
செந்தில்—திருச்செந்தூரை
யுடைய
கந்தா—கந்தக்கடவுளே

என்னோ—நீர் அறியாதது
ஏனோ
தீரா—இடைவிடாமல்
தன்-தன்னுடைய
அஞ்சு-ஐந்தாயுள்ள
அயில்-கூர்மையுடைய
அம்பு-பூக்கணைகளை
ஏவும்-விடுகின்ற
மாரன்-மன்மதனது
செரு-போரின் வலிமை
குன்ற-குறையும்படி

(குன்றவே தீர் எனக் கொண்டு முடிக்கவும்) 60

செருக்கு மதனன் மலர்வாளி யுந்தென்றற் றேருங்கொண்டு
செருக்கு மதனக மாம்இரு ளாலஞ்சச் செய்யும்அடற்
செருக்கு மதனசொற் சேனைக்கும் எய்த்தனன் செந்திற்குகா
செருக்கு மதனடி யார்மோன வாழ்விற் சிறிதருளே

இ—ள்

செருக்கும்—இறுமாப்
புடைய
மதனன்—மன்மதன்
மலர்—பூக்களால் ஆகிய
வாளியும்—அம்புகளும்
தென்றல்—தென்றலாகிய
தேரும்-தேரினையும்
கொண்டு—உடையவனாய்
செருக்கும்-மயங்கச்
செய்கின்றான்
அதன் அகமாம்-அதன்
வினைவினால்
இருளால்-அஞ்ஞான
மிகுந்து
அஞ்ச—அச்சமடையும்படி

சொல்-சொற்களையுடைய
சேனைக்கும்-படையான
மாதர்கட்கு
எய்த்தனன்—இளைப்புற்
றேன்
செந்தில்-திருச்செந்
தூரையுடைய
குகா-குகப்பெருமானே
செருக்கு-அருட்பெரு
மிதத்தால்
மதன்-வலிமைமிக்க
அடியார்-அன்பர்கள்
பெற்ற
மோன—மவுன அநுபவ
மான

செயும்-செய்கின்ற
அடல்-வலிமையான
செருக்கும்-போரினுக்கும்
மது அன-தேன் போன்ற
இனிய
வாழ்வில்-பெரும்பேற்றில்
சிறிது-ஒரு சற்றுவது
அருள்-கொடுத்தருள்
வீராக
எ. று. ஏ. அசை 61

சிறிக்கும் பனிச்சை வழியாடல் செய்குகன் செந்திற்பிரான்
சிறிக்கும் பனிமல ரும்கொண்டு ளான்வெட்கும்
செவ்வியன்சொற்
சிறிக்கும் பனிய திருப்புக ழான்கலைச் சேயிழைக்கும்
சிறிக்கும் பனிவரைச் செல்விக்கும் ஆவற் செறிப்பவனே

இ—ன்

சிறி-சிறிய வடிவினரான
கும்பன்-அகத்திய முனிவர்
இச்சைவழி-விரும்பியபடி)
ஆடல்செய்-திருவிளை
யாடல் புரிகின்ற
குகன்-குகப்பெருமான்
செந்தில்-திருச்செந்தூ
ரினது
பிரான்-பெருமானுவார்
சிறு-சிறுமையைத் தருவ
தான
இக்கும்-கரும்பு வில்லும்
பனி-குளிர்ந்துள்ள
மலரும்-மலரம்புகளையும்
கொண்டுளான்-பெற்ற
மன்மதன்
வெட்கும்-கண்டு நாணும்
செவ்வியன்-அழகிய மேனி
யினர்
சொல்-சொல்லப்படுகின்ற
சில்-சிலவாகிய
திக்கும்-திசைகளில் இருப்
பவர்கள்
ப(ன்)னிய-புகழ்ந்து பேசு
கின்ற
திரு-தெய்விகமான
புகழான்-கீர்த்தியுடைய
வன்
கலை-எல்லாக்கலைகளுக்கு
மூரிய
சேயிழைக்கும்-கலைமகட்
கும்
சிறிக்கும்-திருமகட்கும்
பனிவரை-இமவரையின
வான
சேயிழைக்கும்-உமையவட்கும்
ஆவல்-பெருமகிழ்வை
செறிப்பவன்-உண்டாகச்
செய்யும் பெருமானுகும்
எ. று. ஏ. அசை 62

செறிகைக் களப மிகுங்கோயி லாய்அலைச் சிந்துழக்கும்
செறிகைக் களபத் திரளார்செந் தூர திறலவுணர்
செறிகைக் களபச்சை மாவேற்கச் சென்றவ செய்யமயில்
செறிகைக் களபகர்ந் திட்டமை செய்யுந் தினமெதுவே

இ-ள்

செறி-நெருங்கிவரும்அன்பர்கள்
கை-கையிடத்துப்பெறுகின்ற
களபம்-சந்தனமணச்சிறப்பு
மிகும்-என்றும் மிகுந்துள்ள
கோயிலாய்-திருக்கோயிலுடையவரே
அலை-பெரிய அலைகள்
சிந்து-கடலின் நீரை
உழக்கும்-கலக்குகின்றதும்
செறி-திரட்சியான
கை-துதிக்கையுடைய
களப-யானைகளின்
திரள்-கூட்டமும்
ஆர்-பொருந்தி விளங்கும்
செந்தூர-செந்திலாண்டவரே
திறல்-வலிமையுள்ள
அவுணர்-அசுரர்களை
செறி-அழிக்கின்ற
கை-ஆற்றலமைந்த
கள-போர்க்களத்தினரே
பச்சைமா-பசியதினைமாவை
ஏற்க-வள்ளியிடம் பெற விரும்பி
சென்றவ-வேடனாகச் சென்றவரே
செய்ய-அழகிய
மயில்-மயிற் கூட்டங்கள்
செல்-சென்று உலாவும்
திகை-திசையெல்லாம்
கள-இடமாக உடையவரே
பகர்ந்திட்டமை-என்பாற் கூறியவாறு
செய்யும்-பயனுறச் செய்கின்ற
தினம்-நல்லநாள்
எது-என்றோ
ஏ. ஏ. ஏ. அசை 63

தினந்தினம் வாழும்நெற் போல மதனன் செயும்சமரத்
தினந்தினம் வாகை வடிவே லெடுத்துச் சிகியிவர்ந்து
தினந்தினம் வாவெனக் கூவுதல் கேட்கச் செவியிலையோ
தினந்தினம் வார்கர மால்புகழ் செந்திற் றிருமன்னனே

இ-ள்

தின்-அரிக்கின்ற
அந்துஇனம்-அந்துப் பூச்சிகள்
வாழும்-சேர்ந்துள்ள
நெல்போல்-நெல்லைப்போல (உள்வலிமை இழந்து)
மதனன்-மன்மதனாவான்
செயும்-புரிகின்ற
சமரத்தில்-போரினால்
நந்தினம்-அழிவுற்றோம்
வாகை-வெற்றிமிக்கதும்
வடி-கூர்மையுள்ளதுமான
வேல்-வேலாயுதத்தை
எடுத்து-கையிலேந்தி
சிகி-மயில்வாகனத்தில்
இவர்ந்து-ஏறியமர்ந்து
தினம்தினம்-நாள்தோறும்
வாஎன-வரவேண்டுமென்பதாக
கூவும்-உரத்து நான் அழைப்பதை
கேட்க-கேட்டருள்வதற்கு
செவி-காதுகள்
இல்லையோ-செயலிழந்தனவோ
தில்-விரும்புகின்ற
நந்தின்-சங்கினைக் கொண்டு
அம்-அழகுடன்
வல்கர-நீண்ட கைகளுடைய
மால்-திருமால்
புகழ்-புகழ்ந்துகூறும்
செந்தில்-திருச்செந்தின்
திரு-சிறப்புக்குரிய
மன்னனே-தலைவரே
எ.-று. 64

திருமன்ன னாக முகனாதி மூவரைச் செற்றுச் செந்தூர்த்
திருமன்ன னாகநின் றுய்வணங் காதுளத் தெம்புடன்எ
திருமன்ன னாகம் நடுங்கப் புடைத்துச் சிறையில்வைத்தாய்
திருமன்ன னாகப் பணித்தோகை மீது திகழ்ந்தருளே

இ-ள்

திரு-திருவருட்பேற்றை
மன்னு-அமையப்பெற்ற
அ-அந்த
நாகமுகன்-யானைமுகத் தாருகன்
ஆதி-சிங்கமுகன் முதலியவரோடு
தெம்புடன்-கர்வத்தோடு
எதிரும்-முன்புநின்ற
அன்னன்-அன்னவாகனப் பிரமன்
ஆகம்-தனது உடல்
நடுங்க-பதறும்படி
புடைத்து-சிரசிற் குட்டி

மூவரை-மூன்றுவதாகிய சூரனையும்
செற்று-போரிற்கொன்று
செந்தூர்-திருச்செந் தூரில்
திரு-தெய்வீக மிக்க
மன்னனுக-தலைமைக் கடவுளாக
நின்ருய்-எழுந்தருளிய வரே
வணங்காது-வழிபடாமல்
உள-மனத்தின்
சிறையில்லைத்தாய்-தளை பூட்டியவரே
திரு-அழகானது
மன்ன-நிலைத்திருக் குமாறு
நாகப்பணி-பாம்பாபரண முடைய
தோகைமீது-மயிலினமீது
திகழ்ந்து-காட்சி வழங்கி
அருள்-திருவருள் புரிவீராக
எ. று ஏ அசை 65

திகழா லனந்தலை நீழலுற் ருர்விழித் தீப்பொறியாய்த்
திகழா னனங்களோர் ஆறுடை யான்,புனச் செவ்வியைக்கைத்
திகழா னனங்கனெல் குஞ்செவ்வி யான்சமண் தீயர்தஞ்ச
திகழா னனலம் விளைத்தோன்செந் தூரிற் சிவக்கொழுந்தே

இ-ள்

திகழ்-விளங்குகின்ற
ஆல்-கல்லாலமரத்தின்
தனந்தலை-நடுவிடத்தில்
நீழல்-நிழலில்
உற்ருர்-அமர்ந்துள்ள பரமனது
விழி-நெற்றிக்கண்ணின்
தீப்பொறியா-நெருப்புப் பொறியாக
திகழ்-தோன்றி ஒளி செய் கின்ற
ஆனனங்கள்-திருமுகங் கள்
ஓர் ஆறு-ஒப்பற்றஆருக
இகழான் பிறப்பிழிவு கருதாமல் ஏற்பவர்
அனங்கன்-மன்மதன்
ஒல்கும்-நாணமடைகின்ற
செவ்வியான்-பேரழகுடை யவர்
சமண்-சமணர்களாகிய
தீயர்தம்-கொடியவர்களது
சதி-வஞ்சகத்தை எண்ணி
கழால்-கழுமரத்தேற்றி
நன்நலம்-சைவ வளர்ச்சியை
விளைத்தோன்-சம்பந்தராக வந்து செய்தவர்

உடையான்—அமையப் பெற்றவர் செந்தூரில்-திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள புன-தினைக்காவல்செய்கின்ற சிவக்கொழுந்தே-சிவ செல்வியை—வள்ளி நாயகியை குமாரரான முருகப்பெருமானேயாம் கைத்து—வெறுத்து எ. று. 6

சிவந்த கமலத் திருக்குல வத்தண்டல் தீரவந்தாள்
சிவந்த கமலத் திருக்குல வத்தண்டம் செந்திலில்வ
சிவந்த கமலத் திருக்குல வத்தண்டம் சேரச்செய்தாய்
சிவந்த கமலத் திருக்குல வத்தண்டர் சேனையனே

இ—ள்

சிவம்—முத்திநெறியை தக—பொருந்தும்படியும் மல—ஆணவாதியவற்றின் திருக்கு—குற்றங்கள் உலவு—என்னைச்சேர்வதான அ.தண்டல்-அந்தக் கெடுதல் தீர—நீங்கும்பொருட்டும் வந்து-என்முன் தோன்றி ஆள்—ஆண்டருளவேண்டும் சிவந்த-செந்நிறமுள்ள கமல—தாமரையிலிருக்கும் திரு—இலக்குமி குலவ—மகிழ்ந்திருப்பதால் தண்டம்-பெருமைமிகுந்த செந்திலில்—திருச்செந்தூரில் வசிவு—எழுந்தருளியுள்ள அந்த—அழகுக் கடவுளே கம்—பிரமன் அலத்து—துன்பம்அடையும்படியும் ருக்கு—வேதத்தின் பொருளை உலவ—தெரியச் செய்யுமாறும் தண்டம்-சிறைத்தண்டனையை சேரச்செய்தாய்-அடையச் செய்தவரே சிவம்—மங்களச் செயல் தகு-தக்கபடிஅமைந்துள்ள அமல-குற்றமற்றவரே திருக்குல—தெய்வ மரபினரான அத்து-துணைப்பற்றுயுள்ள அண்டர்—தேவர்களது சேனையனே—சேனபதியே

சேனை யவாவி யருகார்செந் தூர்க்குக தேவர்பெறும்
சேனை யவாவியற் றிண்டோள் முருக செழுஞ்சுடர்வேற்
சேனை யவாவிய னந்தத்தின் நாயக சேயிழையார்
சேனை யவாவிய கண்ணல்கு மோகம் சிதைத்தருளே

இ-ள்

சேல்—மீன்களால் நய-அழகமைந்த வாவி—நீர் நிலைகளை அருகு ஆர்-அணைமையில் அமையக்கொண்ட செந்தூர்-திருச்செந்தூரில் உள்ள குக-குகக்கடவுளே தேவர்-அமரர்களால் பெறும்-செல்வமாக வளர்க்கப்பெற்ற சேனை—தெய்வயானையம்மை அவாவு-விரும்புகின்ற இயல்—தகுதிவாய்ந்த திண்தோள்—புயவலிமை மிக்க முருக-முருகப் பெருமானே செழும்—செம்மையான சுடர்-ஒளிசெய்கின்ற வேல்-வேலாகிய சேனைய—படையை உடையவரே ஆவி-உயிர்கள் அனந்தத்தின்-பலவற்றுக்கும் நாயக—தலைவரே சேயிழையார்-மாதர்களது சேனைய—கூட்டத்தின் வாவிய-தாவுகின்ற கண்—விழிகள் நல்கும்—தருகின்ற மோகம்-இச்சையை சிதைத்து—அறச்செய்து அருள்-ஆண்டருள வேண்டும் எ. று 68

சிதைக்குங் கலியுகத் திமைக்கும் அஞ்சிநின் சேவடித்தா
சிதைக்குங் கலினத் தவாவடைந் தேன்,நல்ல சிந்தையினைச்
சிதைக்குங் கலிமுதற் றீர்த்தருள் வாய்!செந் திலாய்தில்லைவாழ்
சிதைக்குங் கலின்மெய்ப் பொருளோதி வைத்தருள் சீலத்தனே

இ—ள்

சிதைக்கும்-என் கீழ்மைக்கும்
கலியுக-கலியுகத்தினது
தீமைக்கும்-கொடுமைகட்கும்
அஞ்சி-உள்ளம் அச்சமுற்று
நின்-தேவரீரது
சேவடி—திருவடிகளின்
தூசி-துகள்களானவை
தைக்கும்-பொருந்தியுள்ள
கல் இனத்து-மலைகளிற் சென்று
அவா-வணங்கும் ஆசையை
அடைந்தேன்-பெற்றுள்ளேன்
நல்ல-நன்மை மிக்க
சிந்தையினை-என் மனத்தை
சிதைக்கும்-தீவழியிற் செலுத்தும்
கலிமுதல்-வறுமை முதலியவற்றை
தீர்த்து-அடியோடு ஒளித்து
அருள்வாய்-கருணை புரிவீராக
செந்திலாய்-திருச்செந்திலாண்டவரே
தில்லை-சிதம்பரத்தலத்தில்
வாழ்-எழுந்தருளியுள்ள
சித்-ஞானசபையின்
ஐக்கும்-தலைவரான சிவனுக்கும்
உங்கு-அவ்விடத்தில்
அல் இல்-ஐயமற்ற
மெய்ப்பொருள்-தாரகப் பொருளை
ஓதிவைத்து-உபதேசித்து
அருள்-விளக்கிய
சீலத்தனே-மேன்மையுள்ளவரே
எ. று. 69

சீலத் தருக்குல நீழல்கொள் வாசவன் சீர்வெறுக்கும்
சீலத் தருக்குல கம்புகழ் சித்தியும் செய்தவமெய்ச்
சீலத் தருக்குல வாமையும் நல்கும் திருச்செந்திலாய் —
சீலத் தருக்குல வந்திரைக் கொண்டெனைத் தேற்றுதியே

இ-ள்

சீல-அழகுள்ள
தருக்குல-கற்பக மரங்களின்
நீழல்கொள்-நிழலில் இருக்கின்ற
உலவாமையும்-குறைவு வராமையும்
நல்கும்-கொடுத்தருள்கின்ற

இ-ள்

வாசன்—தேவேந்திரனுடைய
சீர்-சொர்க்கபோகத்தையும்
வெறுக்கும்-அருவருக்கின்ற
சீலத்தருக்கு—நற்குண மேலோர்கட்கு
உலகம்—எவ்வுலகத்துள்ள வரும்
புகழ்-போற்றத்தக்க
சித்தியும்-எண் வகைச் சித்திகளையும்
செய்தவ-தவஞ்செய்கின்ற
மெய்—உண்மையான
சீலத்தருக்கு—நல்ஒழுக்கத்தோடு
திரு-தெய்வத்தன்மையுள்ள
செந்திலாய்-திருச்செந்தூரண்ணலே
சீல- இயல்பாகவுள்ள
தருக்கு—ஆணவத்தை
உலவம்—பொருந்த மாட்டோம்
தீர்கை-(இருப்பினும்) அறவே அது நீங்க
எனே—அடியேனை
கொண்டு-ஏற்றுக்கொண்டு
தேற—தெளிவடையும்படி
செய்-திருவருள் செய்ய வேண்டும்
எ. று. ஏ அசை 70

தேரு மனத்தைக் கரத்தான் அயன்முதற் றேவர்கட்கும்
தேரு மனத்தைத் தியானிக்கை கொண்டறத் தேற்றும்விதைத்
தேரு மனத்தைத் திருமேனி யாய்திருச் செந்திலின்கண்
தேரு மனத்தயில் வேலா!என் வாய்க்குன் செவிதஞ்சமே

இ—ள்.

தேறு—புனிதமான
ஆ—இடபவாகனமுடைய
மன்-தலைவரானசிவபிரான்
நத்தை—சங்கைக்கொண்ட
கரத்தான்—கையினரான திருமால்
அயன்முதல்-பிரமன் முதலிய
மன்-நிலைபெற்ற
அத்து-சிவப்பு நிறமான
ஐ-அழகுடைய
திருமேனியாய்—திருவுருவுடையவரே
திருச்செந்திலின்கண்—திருச்செந்தூரில்
தே-தெய்வமாயுள்ளவரே

தேவர்கட்கும்-தெய்வங்களாலும்
தேறு-தெளிவிக்கமுடியாத
மனத்தை என் ஊன மனத்தை
தியானிக்கைகொண்டு-உமது திருவுருவை நாடுதல் மூலம்
அற-நன்றாக
தேற்றும்-தெளிய வைக்க உதவும்
விதைத்தேரு-தேற்றான் விதையை ஒப்பானவரே
ராமன்-இராமனாக வந்த திருமாலா
நத்து-விரும்பப் படுகின்ற
அயில்-கூர்மையான
வேலா-வேலாயுதக் கடவுளே
என்-அடியேனுடைய
வாய்க்கு-வாய்த் துதிக்கு
உன்செவி-உமது காதுகள்
தஞ்சம்-அடைக்கலமுதவுமாக
ஏ. று. ஏ. அசை

மூவராலும் தெளிவிக்க முடியாத மனம் என்றது மனதின் வலிமை நோக்கி என்க. காதுகள் மூலம் விண்ணப்பத்தை ஏற்று அருள்க என்பதாம். 71

செவிக்குஞ் சரவண மந்திரங் கொண்டுன் றிருவுருவச்
செவிக்குஞ் சரவணம் போற்கூர்த்த நெஞ்சைச் செலுத்துகின்றேன்
செவிக்குஞ் சரவணப் பூவுங்கொள் வான்சமர் செய்தனன்தாழ்
செவிக்குஞ் சரவணங் கார்ச்செந்தில் வேல செயந்தந்திடே

இ-ள்

செவிக்கும்-வாயாற் செபிக்கின்ற
சரவண-ஆறெழுத்தாகிய
மந்திரம்-மந்திரமொழியை
கொண்டு-ஆதரவாகக் கொண்டு
(மேலும்)
உன்-உம்முடைய
திருவுருவ-சகளவடிவத்தின்
வ(ண்)ண-அழகுடைய
பூவும்-மலர்அம்புகளையும்
கொள்வான்-கொண்ட மன்மதன்
சமர்செய்தனன்-போர் புரிவதானுன்
தாழ்-தொங்கியுள்ள
செவி-பெரிய காதுடைய
குஞ்சர-யானைபோன்ற
வண்ணம்-கருநிறமுடைய

செ(வ்)விக்கும்-அழகையும் நாடி
சரவணம்போல்-தருப்பை ஒத்த
கூர்த்த-கூர்மையான
நெஞ்சை-என் மனத்தை
செலுத்துகிறேன்-உம் மிடம் செலுத்துகின்றேன்
செவ்-செவ்வியதான
இக்கும்-கரும்புவில்லும்
சர-அம்புகளாயுள்ள
கார்-மேகத்தைக்கொண்ட (சோலையுடைய)
செந்தில்-திருச்செந் தூரில் உள்ள
வேல-வேலாயுதப் பெருமானே
செயம்-அந்த மன்மதனை வெல்லும் ஆற்றலை
தந்திடு-கொடுத்தருள் வீராக
ஏ. று. ஏ. அசை 72

செயங்கொண்ட லார்க்கு மலர்ச்சோலை சூழ்திருச் செந்திலன்பு
செயங்கொண்டல் வேட்ட மடவாரைக் கெஞ்சித் தினமுமவர்
செயங்கொண்ட நெற்றன்ன அல்குற் குருகுவம் சீர்திருத்தாய்
செயங்கொண்ட வேற்குக னே!உமை பாகச் சிவன்மகனே

இ-ள்

செய்-வயல்களின்
அம்-அழகிய தோற்றமும்
கொண்டல்-மேகங்கள் தங்கி
ஆர்க்கும்-முழங்குகின்ற
மலர்ச்சோலை-பூமரப் பொழில்களும்
சூழ்-சூழப்பெற்ற (உம்து)
திருச்செந்தில்-திருச்செந் தூரிலிடத்து
அன்புசெயம்-உரிமை கொள்ளாதுள்ளோம்

கொண்டல்-கொண்ட லென்ற ஆடலை
வேட்ட-விரும்புகின்ற
செய்-செந்நிறமான
அம்கொண்ட-தன்மை யுடைய
நெற்றன்ன-நெற்றுப் போன்ற
அல்குற்கு-நிதம்பத்துக்கு
உருகுவம்-மனம் உடை கின்றோம்
சீர்-இந்நிலை நீங்கிச் சிறப்படைய
திருத்தாய்-செம்மை புரிவீராக
செயம்-வெற்றியையே
கொண்ட-மிகவுமுடைய
வேல்-வேலாயுதமணிந்த
குகனே-குகக்கடவுளே

மடவாரை-மாதர்களை
கெஞ்சி-அவரன்பை வேண்டி
தினமும்-நாள்தோறும்
அவர்-அம்மாதரது
உமை-உமையவளை
பாக-ஒருபுறம்கொண்ட
சிவன்மகனே-சிவபிரானின் குமாரனே
எ. று.— 73

சிவனந் தரங்க வயன்றேறு மாறணித் திங்கள்முகச்
சிவனந் தரங்கண்டு சீர்திருத் துங்குகன் செந்துவர்ப்பா
சிவனந் தரங்கந் தருங்கடற் போற்றுசெந் திற்பதிவா
சிவனந் தரங்கத்தில் உள்ளா னெமக்கோர் திடுக்கமின்றே

## இ—ள்

சிவன்-சிவபிரானும்
நந்து-சங்கைப்புனைந்த
அரங்கன்—திருமாலும்
அயன்—பிரமனும்
தேறும்-நிச்சயித்தறிகின்ற
ஆறு—ஆருகிய
அணி—அழகுடைய
திங்கள்-முழுமதிபோன்ற
முக-திருமுகங்களையுள்ள
சிவன்—மங்கலப்பொருளானவர்
நம்-எம்முடைய
தரம்கண்டு—தகுதியறிந்து
சீர்திருத்தும்—நன்னெறிப்படுத்தும்
குகன்-குகக்கடவுள்
செம்துவர்—சிவந்த பவளத்தையும்
பாசிவனம்-நீர்ப்பாசிக்கூட்டத்தையும்
தரங்கம்—அலைகளையும்
தரும்-உதவுகின்ற
கடல்-சமுத்திரத்தையுடையதாய்
போற்று—பலராலும் புகழ்கின்ற
செந்திற்பதி-திருச்செந்திற்பதியில்
வாசி-எழுந்தருளியிருப்பவர்
வன்—உறுதியான
அந்தரங்கத்தில்-எனது மனதில்
உள்ளான்-குடியாயிருக்கின்றார்
எமக்கு—(ஆதலால்) எங்கட்கு
ஓர்—எவ்விதமான
திடுக்கம்—அச்சமும்
இன்று—உண்டாவதில்லை
எ. று. ஏ. அசை 74

திடுக்கந் தவிரதந் கொள்வார் விருப்பருள் சேந்த! திடு
திடுக்கந் தவிரப்பில் சந்தவெற் பாள சினத்தொடுமோ
திடுக்கந் தவிரடல் மாவார்செந் தூரஎன் சிந்தைகொண்ட
திடுக்கந் தவிர வரவேண்டும் தோகைச் சிகியிவர்ந்தே

இ-ள்

திடு-உறுதியான உள்ளத்துடன் கந்தவிரதம்-சட்டி, விசாகம் வெள்ளி முதலிய நாள் நோன்புகளை கொள்வார்-கைக்கொண்ட அன்பரது விருப்பு-எண்ணங்களை அருள்-நிறைவுபெற உதவும் சேந்த-முருகப்பெருமானே திடுதிடு-திடுதிடென இடிக்கின்ற கம்-மேகக்கூட்டங்கள் தவு-தவழுகின்ற இரு-விசாலமான அப்பில்-நீர் நிறைந்த கடலுள்ள சந்த-சந்தனுசலமென்ற வெற்பாள-மலைக்கு உரியவரே சினத்தொடு-கோபத்துடன் மோதிடு-முட்டி இடிப்பதாய் கந்து அவிர்-கட்டுத்தறியிலுள்ள அடல்-வலிமை மிக்க மா ஆர்-யானைகளையுடைய செந்தூர-திருச்செந்தூரண்ணலே என்-அடியேனது சிந்தை-மனமானது கொண்ட-அடையக் கொண்ட திடுக்கம்-பல அச்சங்களும் தவிர-நீங்கும்படி வரவேண்டும்-காட்சியருளவேண்டும் தோகை-நீண்ட தோகையுள்ள சிகி-மயில்மீது இவர்ந்து-ஏறிவந்து ஏ. று. ஏ, அசை 75

சிகிக்கார னேய மகள்கண வாகுறச் செல்விஉண்கட்
சிகிக்கார னேய மகள்வளர்த் திட்டசெந் தேகம்விற்றுச்
சிகிக்கார னேரத் தனைவென்ற வாதிருச் செந்தில்வாழ்
சிசிக்கார னேயுனை அல்லா தெனக்கொரு தெய்வன்றே

இ-ள்

சிகிக்காரன்—உச்சைச்
சரவமென்ற குதிரை
யுள்ள இந்திரனது
நேய-அன்புக்குரிய
மகள்-தெய்வயானையின்
கணவர்-நாயகரானவரே
குறச்செல்வி-வள்ளி
நாயகியின்
உண்கண்-மைதீட்டிய
கண்களான
சிகிக்கு-அம்புக்கு லட்சிய
மாக
ஆரல்-கார்த்திகையென்ற
நேரிழையார்-ஆறு மாதா
களால்
வளர்த்திட்ட-வளர்க்கப்
பெற்ற
செம்-செம்மையான
தேகம்-உமது திரு
மேனியை
விற்று-உரிமையாக
விற்றதுபோல்உதவி
சிகு-சிக்கவைக்கின்ற
இக்கு-வில்லாகியகரும்பை
ஆர்-கையிலேந்திய
அல்நேர்-இரவுநேரத்துக்
குரியவனாக வருகின்ற
அத்தனை-மன்மதனைப்
(போரில்)
வென்றவா-வெற்றி
பெற்றவரே (பேரின்ப
வடிவானவரே)
திருச்செந்திலில்-திருச்
செந்தூரில்
வாழ்-எழுந்தருளியுள்ள
சிகிக்காரனே-மயில்
வாகனக் கடவுளே
உன்னை-தேவரீரை
அல்லாது-தவிர
எனக்கு-அடியேனுக்கு
ஒருதெய்வம்-வேறொரு
கடவுள்
இன்று-இல்லவேயில்லை
எ. று. ஏ. அசை 76

தெய்வத் தலைமைப் புலவலின் மால்முதற் செப்புபல
தெய்வத் தலைமைப் புலவனைக் காத்தசெந் திற்குக!வா
தெய்வத் தலைமைப் புலவர் கழுவிற் செறித்தவனோர்
தெய்வத் தலைமைப் புலவர்பல் லோர்தம் சிரோமணியே

இ—ள்

தெய்வத்தலை-யாகத்தி
னிடம்வந்த
மை-ஆட்டுக்கடா
புலவனின்-எதிர்த்தபோது
எய்-தோற்றவர்களாய்
வத்து-உண்மையறியாமல்
அலை-உழன்ற
மை-கரிய நிறமுடைய

மால்முதல்-திருமால் முதலாக
செப்பு-உடனிருந்தவராகக் கூறும்
பலதெய்வ-பல தேவ கணத்தின்
தலைமை-அரசனாகிய
புலவனை-இந்திரனையும்
காத்த-அச்சத்தினின்றும் காப்பாற்றிய
செந்தில்-திருச்செந் தூரினையுடைய
குக-குகக்கடவுளே
வாது-அனல், புனல் என்ற இரு வாதத்தில்
பு(ல்)லவர்-அற்பர்களான சமணர்களை
கழுவில்-கழுமரத்தினிடம்
செறிந்தவன்-ஏற்றிய ஞானசம்பந்தரை
நேர்-ஒப்பாக (உமது)
தெய்வ-திருவருளைப் பெற்ற
தலைமை-மேலான
புலவர்-ஞானவான்கள்
பல்லோர்தம்-பல பேர்களுக்கு
சிரோமணியே-நாயகமான பெருமானே
எ. று.— 77

சிரகர மாறுடன் பன்னிரண் டாக்கொளும் சேந்தன்,எண்கட்
சிரகர னேகரைக் குட்டிப் பிணித்துச் சிறையிலிட்டோன்.
சிரகர முண்டவன் போற்றுஞ்செந் தூரன்முற் சிந்தெறிதண்
சிரகர வத்தைவென் றனந்த வாழ்வுறும் சிட்டர்களே

இ-ள்

சிரகரம்-தலைகளும் கைகளும்
ஆறுடன்-ஆறுகவும்
பன்னிரண்டா-பன்னிரண் டாகவும்
கொளும்-முறையே பெற்றுள்ள
சேந்தன்-முருகக்கடவுள்
எண்கண்-எட்டுக் கண் களுள்ள
போற்றும்-வணங்கப் பெற்றவர்
செந்தூரன்-திருச்செந் திற்பெருமான்
முன்-அவரது சந்நிதி எதிரில்
சிந்து-கடலின் அலை
எறி-மோதுகின்றதாய்
தண்-குளிர்ந்துள்ள
சிரகர்-அலைநீர்த்துளிகள் பட்டதால்

சிரகர்-கமண்டலப் பிரமர்கள்
அனேகரை-பலபேர்களை
குட்டி-சிரசில்மோதியும்
பிணித்து-கைகளைக் கட்டியும்
சிறையில்-மலைக்குகையில்
இட்டோன்-அடைத்தவர்
கிர-கொடுமையிற்சிறந்த
கரம்-ஆலகாலவிடத்தை
உண்டவன்-உண்ட சிவபிரானும்
அவத்தை-பல இன்னல் களை
வென்று-அறவே நீங்கப் பெற்று
ஆனந்த-பேரின்பமாகிய
வாழ்வு-திருவருட் பேற்றை
உறும்-பெற்றுள்ளவராவர்
சிட்டர்கள்-பலபெரி யோர்கள்
ஏ. று. ஏ. அசை 78

சிட்டனை யாண்டரைப் பாடலிற் போக்கிடும் சீலனும்வி
சிட்டனை யாண்டருள் சீர்படைத் தோன்எனற் றேர்ந்தனன்,வ
சிட்டனை யாண்டலம் செய்தோன் சுகன்முதற் சீரியர்நெஞ்
சிட்டனை யாண்டலை யான்றிருச் செந்திலைத் தெண்டவிட்டே

இ-ள்

சிட்டன்-அன்பனொருவன்
ஐ ஆண்டு-ஐந்து வருட முயன்றும்
அரைப்பாடலில்-அரைப் பாட்டுப்பாடி
போக்கிடும்-மேல் அரை யும் பாடமுடியாமல் காலம் கடத்தும்
சீலனும் நல்லொழுக்க முடையவனையும்
விசிட்டன்-மேலான அன்பன் என எண்ணி
ஐ-பெரும் புலவர் தலைவ னாகும்படி
ஆண்டு-திருவருள்புரியும்
சீர்-சிறந்த கருணையை
ஆண்டு-அவ்விடத்தில்
அலம்-துன்பமடையும்படி
செய்தோன்-செய்த விசு வாமித்திரரையும்
சுகன்-சுகப்பிரமமுனியை யும்
முதல்-மற்றும் பலவான
சீரியர்-தவமும் ஞானமு முடையவரது
நெஞ்சு-மனதுக்கு
இட்டன்-உவப்பான கடவுளாயும்
ஐ-அழகுடைய
ஆண்டலையான்-சேவற் கொடியினனாகவும்
உள்ள முருகப்பிரானை

படைத்தோன்-உடையவன் நமது முருகன் எனல்-என்ற பெருண்மையை
தேர்ந்தனன்-அறிந்துள்ளேன், எவ்வாறெனில்
வசிட்டனை-வசிட்ட முனிவரை
திருச்செந்திலை-திருச்செந்தூரை அடைந்து
தெண்டனிட்டு-கண்டு வணங்கிய தவப்பயனால்
எ. று. ஏ. அசை
தெண்டனிட்டுத் தேர்ந்தனன் என இயைத்துக் கொள்க.

"ஐயாண்டு சென்று ஓர் அரைக்கவி கூறினும் தெய்வம் சாராப் புலமையின்றே" என்பது அறுவகை இலக்கணம். ஐந்து ஆண்டு முயன்றும் அரைப்பாட்டு பாடியவனையும் அன்பனாக ஏற்றுப் பெரும் புலவனுக்கும் கருணையினன் செந்திற் பிரானென்பது கருத்து. தெய்வ அருளில்லாவிடின் அவ்வளவுக்குப் பாடும் புலமை வராதென்பதாம்.

தெண்டனைக் கஞ்சிக் கருளப் புடைத்தசெந் திற்குகன்கைத்
தெண்டனைக் கஞ்சிவத் தோடருள் வான்,தமிழ் செய்தமுனி
தெண்டனைக் கஞ்சி யறம்வளர்த் தாள்மகன் சீறும்எம
தெண்டனைக் கஞ்சி வருந்தாது சூட்டுந் திருப்பதமே

இ—ள்

தெண்தனை-ஞானத் தெளிவை
கம்-தலையிடத்துப்பெற்ற
சிக்கர்-குடுமித்தலைப் பிரமன்
உள்ள-உண்மையறியும்படி
புடைத்த-குட்டியருளிய
செந்தில்-திருச்செந்தூரினனாகிய
குகன்-குகக்கடவுளானவர்
முனி-அகத்திய முனிவரது
தெண்டன்-வணக்கமுடையவர்
ஐ-தலைமையான (அழகிய)
கஞ்சி-கச்சிப்பதியில்
அறம்-முப்பத்திரண்டு அறங்களையும்
வளர்த்தாள்-புரிந்த உமாதேவியின்
மகன்-குமாரராகியவர்

கை-திருக்கரத்தணிந்த
தெண்டன்-தண்டாயுத
முடையவர்
ஐக்கம்-ஒன்றிப்பான
முத்தியை
சிவத்தோடு-பரத்தோடு
பொருந்த
அருள்வான்-நல்கியருள்
பவர்,
தமிழ்-தமிழ்மொழிக்கு
செய்த-இலக்கண வரம்
பமைத்த
சீறும்-கோபித்து வருகின்ற
எம-எமனது
தெண்டனைக்கு-தாக்குத
லுக்கு
அஞ்சி-மனம் அச்சமுற்று
வருந்தாது-துன்ப
மடையாதபடி
திருப்பதம்-தனது
திருவடிகளை
சூட்டும்-என்சிரசில்
அணிவான்
எ. று. ஏ. அசை 80

திருப்பாத பங்கயம் சேர்தினைக் காட்டிடை சென்றுவரும்
திருப்பாத பங்கயம் ஈவதென் றோ?செந் திலாய்!சிலம்ப
திருப்பாத பங்கயங் குற்றேன் கரிமுகத் தேவனிடம்
திருப்பாத பங்கை யடியேன தென்றின்று செப்பிவிடே

## இ-ள்

திரு-அழகிய
பாதபம்-மரக்கூட்டமும்
கயம்-யானைகளும்
சேர்-நிறைந்துள்ள
தினைக்காட்டிடை-தினைப்
புனத்தில்
சென்று-வள்ளியின்
பொருட்டுச்சென்று
வரும்-அவளன்பைப்
பெற்றுவந்த
திரு-புனிதமாகிய
பாத-திருவடியான
பங்கயம்-தாமரைகளை
ஈவது-யான்பெறத்தருவது
கயங்குற்றேன்-பலிதம்
காணாது வருந்தி
யுள்ளேன்
கரிமுக-யானைமுகமுடைய
தேவனிடம்-கணபதியின்
பால்
திருப்பாத-உமக்கென்று
தராத
பங்கை-கனியின் பாகத்தை
அடியேனது-எனக்குத்
தரவேண்டும்
என்று-என்பதாகக்கூறி
இன்று-இப்போது அதைத்
தருமாறு

என்றோ-எந்தக்காலமோ
செந்திலாய்-திருச்செந்தி
லாண்டவரே
சிலம்பது-மலைக்கூட்டமே
இருப்பா-வசிப்பிடமான
வரே
தபம்-தவம்செய்யும்
முயற்சியில்
செப்பிவிடு-சொல்லி
யருள்வீராக
எ. று. ஏ. அசை
நீர் பங்குப்பழம் பெறுது விட்டாலும், இப்போது உமது அன்பனாகிய எனக்குத் தர உதவுமாறு கேட்டருள்க என்பதாம். 81

செப்பியற் சந்த முலையார் மயலிற் றிளைத்தும்நின்மேற்
செப்பியற் சந்தம் பழுதுகொ லோதிருச் செந்திலில்வாழ்
செப்பியற் சந்தறை வார்க்குநல் லாய்!நின்பொற் சீறடிக்குச்
செப்பியற் சந்தத் தளிராதி சாத்துகை தீண்டுதியே

இ—ள்

செப்பு-சிமிழ்போன்ற
இயல்-இயல்பையும்
சந்த-அழகையும்உடைய
முலையார்-தனங்களுள்ள
மாதரது
மயலில்-ஆசையில்
திளைத்தும்-மூழ்கிய நிலையிலும்கூட
நின்மேல்-உம்மீது
செப்பு-பாடப்பெறுவதான
இயல்-இயல்புடைய
சந்தம்-வண்ணப்
பாடல்கள்
பழுதுகொலோ-தவறுடையனவா?
திரு-தெய்வீகமிக்க
செந்திலில்-செந்திற்
பதியில்
வாழ்-எழுந்தருளியிருக்கும் இனியவரே
செப்பி-(சுந்தரர் சொல்லுக்கு) இணங்கி
அல்-இரவு நேரத்தில்
(பரவையிடம்)
சந்து-தூது சென்று
அறைவார்க்கு-சமாதானம்
சொன்ன சிவனுக்கு
நல்லாய்-இனியவரே
நின்-உம்முடைய
சீறடிக்கு-சிறிய திரு
வடிகட்கு
செப்பு-செந்நிறம்
இயல்-பொருந்தி
சந்த-அழகுடையதான
தளிர்-இளந்தழை
ஆதி-பூ முதலியவற்றை
சாத்துகை-அடியேன்
அணிவதை
தீண்டுதி-ஏற்றருள்வீராக
எ. று. ஏ. அசை 82

தீண்டல கம்பலைக் கஞ்சாது மங்கையர் சிந்தித்தொல்கும்
தீண்டல கம்படிந் தேங்குகின் றேன்நின் செழுமலர்க்கை
தீண்டல கம்பவந் தீர்க்குமென் றேதிருச் செந்திவில்வந்
தீண்டல கம்பந் தவிர்திரு வோலக்கஞ் சேவிப்பதே

இ-ள்

தீண்டு-என்பால் வருகின்ற
அல்-குற்றமிக்க
அ-அவ்விதமான
கம்பலைக்கு-துன்பங்கட்கு
அஞ்சாது-அச்சப்படாமல்
மங்கையர்-மாதர்களை
சிந்தித்து-எண்ணம் கொண்டு
ஒல்கும்-உள்ளம் தளர்கின்ற
தீண்டல்-குற்றமானது
அகம்-மனத்தினிடம்
படிந்து-ஊன்றி நின்றதால்
ஏங்குகின்றேன்-சோர்வடைந்துள்ளேன்
நின்-உம்முடைய
செழும்-வளமிருந்த
மலர்க்கை-மலர்போன்ற கைகள்
தீண்டல்-தொட்டருள்வதனால்
அகம்-எனது ஆணவத்தையும்
பவம்-பாவவினையையும்
தீர்க்கும்-தீரச்செய்யும்
என்றே-என்பதற்காகவே
திருச்செந்திவில்-திருச்செந்தூரிடம்
வந்து-நம்பிவந்து
ஈண்டு அல-நெருங்கியுள்ளதல்லாமல்
கம்பம்-மனநடுக்கத்தை
தவிர்-நீக்குவதாகிய
திருஓலக்கம்-உமது கொலுக் காட்சியை
சேவிப்பது-கண்டு வணங்கிப் போற்றுவதாகும்

எ. று. ஏ அசை 83

சேவின ராதர மென்னத் தொலைகயிற் றிகழங்கதா
சேவின ராதரச் சண்முக னேதிருச் செந்தில்அர
சேவின ராதரந் தைக்காட்பட் டேன்உனைத் தேடிவந்து
சேவின ராதரந் தந்திலை யேல்மிகத் தேங்குவனே

இ—ள்.

சே-செந்நிறமான
இனர்-சூரியர்களே
ஆதரம்-ஒப்பாவார்கள்
அரசே-தலைமைக் கடவுளே
இனர் ஆது-எமது இனமான நற்றவரது

என்-என்றுகூறும்படி
அத்தொகையில்-பன்னிரு
சூரியர்போல பன்னிரு
தோளகளில்
திகழ்-பேரொளிசெய்கின்ற
அங்கதா-தோளணி
யுடையவரே
சேவினர்-இடபவாகனரான
சிவன்
ஆதர-அன்புசெய்கின்ற
சண்முகனே-ஆறுமுகப்
பரமனே
திருச்செந்தில்-திருச்செந்
தூரின்

அரந்தைக்கு-மனவருத்தத்
துக்கு
ஆள்பட்டேன்-ஆளாயிருக்
கின்றேன்
உன்னை-தேவரீரை
தேடிவந்து-நாடிவந்து
சேவ்னா-வணங்கும்
அன்பரது
ஆதாம்-அத் தகுதியை
ஈந்திலேயேல்-வழங்கா
திருந்தால்
மிக-அதிகமாக
தேம்புவன்-வருந்துவேன்
எ. று, ஏ அசை

84

தேம்பா கனைய தமிழ்பாடிச் சூட்டநின் செந்திலில்வந்
தேம்பா கனைய மிகநல்கு வாய்!பல் சிலம்பினமாம்
தேம்பா கனையர் வாழ்வான் தடத்தோர் சிறுகுருந்தாய்த்
தேம்பா கனையன மும்மூன்று விதங்கொள் செய்முகனே

இ-ள்.

தேம்-இனிமை மிகுந்த
பாகுஅனைய-பாகு போன்ற
தமிழ்-தமிழ்ப் பாடல்களை
பாடி-மாலைபோல இயற்றி
சூட்ட-அணிவதற்கு
நின்-உமக்கு உரித்தான
செந்திலில்-திருச்செந்
தூரில்
வந்தேம்-வந்திருக்கின்
றோம்
பாகநயம்-நல்லசொற்
பொருளை

ஐயர்-தேவர்களானோர்
வாழ்வான்-உய்யும்
பொருட்டு
தடத்து-சரவணவாவியில்
ஓர்-ஒப்பற்ற
சிறுகுருந்தாய்-குழந்தை
வடிவாய்
தேம்பு-அழுதருளிய
ஆக-திருமேனியுடை
யவரே
நயனம்-விழிகள்
மும்மூன்றுவிதம்-ஒரு முகத்

மிகநல்குவாய்-மிகவும் உதவ வேண்டும்
பல்சிலம்பு-பல மலைகளின்
இனமாம்-கூட்டமானதை
தேம்பா-இடமாக உடைய வரே
களை-மிகுதியான
துக்கு மூன்றென்ற முறையில்
கொள்-ஆறுமுகத்துக்கும் 18ஆக உடைய
செம்முகனே-அழகிய திரு முகங்களைக் கொண்டவரே
எ. று. 85

செம்மு கனகம் நிகர்முலைக் குஞ்சரி சிந்தைகவர்
செம்மு கனகத்தி னாற்பொரு சேவல சீர்ப்பெருக்காற்
செம்மு கனகனைக் கீன்றான் மருக திருச்செந்திலாய்
செம்மு கனக மணிப்பூணிற் றாழ்ச்சிகொல் செந்தமிழே

இ-ள்

செம்மு-பொலிவுடைய
கனகம்நிகர்-பொன் போன்ற
முலை-தனங்களையுடைய
குஞ்சரி-தெய்வயானையின்
சிந்தைகவர்-மனதை வச மாக்கும்
செம்முக-அழகிய திரு முகத்தினரே
நகத்தினால்-கால் நகத்தால்
பொரு-போர்புரிகின்ற
சேவல-சேவற் கொடி யினரே
சீர்-தான் பெற்ற வரத்தின்
பெருக்கால் மிகுதியால்
செம்மு-இறுமாப்படைந்த
கனகனை-இரணியனை
கீன்றான்-பிளந்த திருமாலின்
மருக-மருகரே
திருச்செந்திலாய்-திருச் செந்தூரரே
செம்-செந்நிறத்தை
உகு-வெளிப்படுத்துகின்ற
அனக-மாசில்லாத
மணி-இரத்தினங்களை யுடைய
பூணில்-ஆபரணத்தைவிட
தாழ்ச்சிகொல்-தரங் குறைவினதா
செம்-செம்மைபெற்ற
தமிழ்-எனது துதிப்பாடல் கள்
எ. று. ஏ. அசை 86

செந்தமி ழாகர மாதரன் னார்கொழிச் சித்திரத்திற்
செந்தமி ழாகர ணங்களைக் கண்கொடு சீர்திருத்தாய்
செந்தமி ழாக ரவிகோடி சூழ்திருச் செந்திற்கந்தா
செந்தமி ழாகர மாமுனி போற்றிய சின்னவனே

இ—ள்

செம்—செம்மையும் செம்-சிவந்த
தமிழ்-இனிமையும் தமிழ்-தன்மையுடன் கூடிய
ஆகு-ஒன்றுனதுபோன்ற ஆக-திருமேனியினரே
அரமாதர்-தேவமாதர்களை ரவி-சூரியர்கள்
அன்னார்-ஒத்த பொது கோடி-பலர் கூடி
மாதரது சூழ்-நிறைந்திருப்பது
மொழி—சொற்களின் போன்று
சித்திரத்தில்-சாலத்தில் திருச்செந்தில்—திருச்செந்
செத்து—மனம் சென்று தூரில் விளங்கும்
அமிழா-இன்பில் மூழ்கு கந்தா-கந்தப் பெருமானே
கின்ற செந்தமிழ்-சிறந்த தமிழ்
கரணங்களை-பொறிபுலன் மொழிக்கு
களை ஆகர-உறைவிடமாயுள்ள
கண்கொடு-உமது கண் மாமுனி-அகத்தியமுனிவர்
ணோக்கினுல் போற்றிய-வணங்கிய
சீர்—சிறப்படையும்படி சின்னவனே-குழந்தை
திருத்தாய்—நன்னெறிப் வடிவினரே
படுத்தல் வேண்டும் எ. று 87

சின்னம் பயிலமண் குண்டரை முத்துச் சிவிகையிற்போய்ச்
சின்னம் பயிலவென் ருனிகர் வானவர்ச் செய்குவையோ
சின்னம் பயிலமை நீறேயென் பார்மிகும் செந்திலில்நெஞ்
சின்னம் பயிலருள் கூர்கந்த னேஅதி சீதளனே

இ—ள்

சின்—அருகதேவனை சின்னம்—சமயக்குறியாக
நம்பு—வழிபடுகின்ற அணிவது
ஐஇல்—அழகற்ற (கரிய பையில்—கைப்பையிடம்
நிறத்தவர்) அமை—பொதிந்து
அமண்குண்டரை-சமணர் வைத்துள்ள
களை நீறே—திருவெண்ணீறே
முத்து-முத்துக்களாலாக்கிய என்பார்—என்றுகொள்ளும்
சிவிகையில்-பல்லக்கில் சைவர்கள்

போய்-தலந்தோறுஞ் சென்று
சின்னம்-காகளமுதலிய இசைக் கருவிகள்
பயில-வெற்றிமுழக்கம் செய்ய
வென்றான்-வாதில் வென்ற சம்பந்தரை
நிகர்-ஒப்பான
வானவர்- அருட்செல்வர்களை
செய்குவையோ-இப்போது வரச்செய்வீரோ
மிகும்-அதிகமாக வாழ்கின்ற
செந்திலில்-செந்தூரில் வந்து
நெஞ்சில்-மனத்தில்
நம்ப-நம்பிப் போற்றினால்
இல்-பேரின்ப வீட்டை
அருள்கூர்-அன்பருக்குதவுகின்ற
கந்தனே-கந்தக்கடவுளே
அதி-மிகவும் கருணையில்
சீதளனே-குளிர்ந்த பெருமானே
எ. று.

சினன் என்ற அருகன் பெயர் இடைக்குறையாய் ன-கரம் கெட்டது 88

சீதை யிலக்குமி ழிக்கும்பி யால்அஞ்சல் தீர்த்ததுண்டேல்
சீதை யிலக்குமிழ் சங்குல வும்பணைச் செந்திலில்ஆள்
சீதை யிலக்குமி ணன்போற்றக் கானிடைச் சென்றரக்கர்
சீதை யிலக்குமி யாய்ச்செற்ற மால்புகழ் தென்னவனே

இ-ள்

சீத்தை-கீழ்மக்களின் நிலைக்கு
இலக்கும்-ஒப்பாகும்படி
இழி-கேவலமான
கும்பி-வயிற்றுள் கருவாதற்கு
அஞ்சல்-அச்சப்படுவதை
தீர்த்து-நீக்கியருளியது
உண்டேல்-உண்மையானால்
சீதையில்-உழுபடைச்சாலில்
இலக்குமணன்-இலக்குமணனும்
போற்ற-பணிபுரியும்படி
கானிடை-வனத்தில்
சென்று-சென்றபோது
அரக்கர்-அசுரர்களையெல்லாம்
சீ-சீதம்
து-சேர்ந்ததான
ஐ-கோழையில்
இலக்கும்-இலக்காகி விழுந்த

அக்கு-முத்துக்களை
உமிழ்-சொரிகின்ற
சங்கு-சங்குக்கூட்டங்கள்
உலவும்-சஞ்சரிக்கின்ற
பணை-வயற்சிறப்புற்ற
செந்திலில்-திருச்செந்தூரில்
ஆள்-என்னை ஏற்றருள வேண்டும்
சீதை-சீதாபிராட்டியுடன்
ஈயாய்-ஈயினைப்போல
செற்ற-அழித்தருளிய
மால்-இராமனாகிய திருமால்
புகழ்-போற்றுகின்ற
தென்னவனே-அழகுடையவனே
உக்கிரகுமார பாண்டியனாக வந்தவனே எனவும் கொள்க.
எ. று.

கோழையில் ஈ தானே வந்து வீழ்ந்து இறப்பது போல வம்பில் போர் செய்து இறத்தலைக் குறிக்கும் 89

தென்னனங் கத்திருக் கைகொண்ட நீபத்தில் தேன்பயிலும்
தென்னனங் கத்திருக் கைக்குட்டி னேர்செந்
திலான்மதுரைத்
தென்னனங் கத்திருக் கைத்தவிர்த் தாற்குமுன் செய்நலமெய்த்
தென்னனங் கத்திருக் கையாரி னும்சிற் சிலர்சொல்வதே

இ-ள்

தென்-அழகுபொருந்த
நன்-நல்ல வண்ணமாக
அங்கத்து-திருமேனியில்
இருக்கை-அமையும்படி
கொண்ட-தரித்துள்ள
நீபத்தில்-கடப்பமாலையில்
தேன்-வண்டுகளிருந்து
பயிலும்-இசைபாடுகின்ற
தென்னன்-இனிமையுடையவன்
அம்-அழகிய
கத்து-தலையிடத்து
இருக்கை-வேதப்பிரமனை
குட்டினோன்-குட்டியவர்
செந்திலான்-திருச்செந்தூருடையவர்
தென்னன்-பாண்டியனது
அங்க-உடலிலமைந்த
திருக்கை-முதுகின்கூனை
தவிர்த்தாற்கு-நீக்கிய சம்பந்தருக்கு
முன்செய்-அன்று உதவிய
நலம்-உமது கலாமிசமானது
மெய்த்து-உண்மையானதே
என்-என்பதாக
அனங்க-மன்மதனுடைய
திரு-செல்வமான பெண்ணாசையை
கையாரினும்-வெறுக்காத உலகத்தாரிலும்கூட

மதுரை-மதுரையை ஆட்சிசெய்த சிலர்-ஒருசில அறிஞர்கள் சொல்வதே-கூறுமதகுதி ஏ. று.

உலகர் கூறுவதென்றதால், ஞானிகள் கூறுவது சிறப்பென்பதாம். 90

சிலமா தரைபுகழ் சீர்ச்சந்த வெற்புடைச் செந்திற்பிரான்
சிலமா தரைமுன் விழைந்தான்என் பேதை மண் தெள்ளியமுச்
சிலமா தரைமெலி யக்கண்டு ளான்,அவன் சீர்த்திகள்பே
சில்மா தரைமகள் மான்மக ளோடிவட் சேர்த்திலனே

இ-ள்

சி(ல்)ல-ஆரவாரமாக மா-மாண்பமைந்த தரைபுகழ்-உலகம் போற்றும் சீர்-சிறப்புவாய்ந்த கந்தவெற்பு-சந்தனு சலத்தை உடை-தனதாகவுள்ள செந்தில்-திருச்செந்தூரின் பிரான்-தலைமையானவர் சில-ஒருசிலவான மாதரை-அழகுப்பெண்களை முன்-அந்நாளில் விழைந்தான்-விரும்பி ஏற்றான் என்பேதை-எனது சிறு பருவப்பெண் மண்-வீதிமண்ணை தெள்ளிய-கொழித்து விளையாடும் முச்சில்-சிறுசுளகை யுடையாள் அ(ம்)மாது-அந்தப் பேதைமகள் அரை-அரையுடம்பாக மெலிய-மெலியும்படி கண்டுளான்-மையல் தந்துளான் அவன்-அப்பெருமானுடைய சீர்த்திகள்-சிறப்பியல்புகளை பேசிலமா-பேசாதுள்ளோமா தரு-கற்பக மரத்தின் ஐ-தலைவனான இந்திரனது மகன்-மகளான தெய்வயானை மான்மகள்-வள்ளிநாயகி ஒடு-இவர்களுடன்ஒப்பாக இவள்-இச்சிறுமகளையும் சேர்த்திலன்-ஏற்றுக் கொள்ளவில்லையே ஏ. று. ஏ. அசை 91

சேரங்க மாயரு நான்மறைத் தாரகம் செப்புமெந்தாய்
சேரங்க மாயன் மருகா!நன் ஞாஞ்சிற் சிறப்புடனெற்
சேரங்க மாய குடிவாழ்செந் தூர,பொய்த் தேவர்களைச்
சேரங்க மாய வலாரியும் நாணுந் திடமருளே

இ-ள்

சேர் அங்கம் ஆய்-அங்கம் ஆறுடன்கூடிய
அரும்-அருமையான
நான்மறை-நால்வேதங்களின்
தாரகம்-உண்மையான முடிவை
செப்பும்-உபதேசிக்கின்ற
எந்தாய்-எமது தந்தையே
சே-உயர்ச்சிபெற்ற
ரங்க-திருவரங்கத்தமர்ந்த
மாயன்-திருமாலின்
மருகா-திருமருகரே
நன்-நன்மையுள்ள
நாஞ்சில்-மதிலானது
சிறப்புடன்-மேன்மையுடன்
எல்சேர்-சூரியன் தங்குதற்கு
அங்கம்-ஏற்றபடி உயர்வாய்
ஆய-அமைந்த கோயிலில்
குடிவாழ்-சிலையாக அமர்ந்துள்ள
செந்தூர-திருச்செந்தூரண்ணலே
பொய்-உண்மையற்ற
தேவர்களை-சிறுதெய்வங்களை
சேரம்-சேர்ந்து வழிபடோம்
கம் ஆய-மேகத்துக்குரியவனாகிய
வலாரியும்-தேவேந்திரனும்
நாணும்-நாணும்படியான
திடம்-ஞானச்செல்வத்தை
அருள்-உதவியருள வேண்டும்
ஏ. று. ஏ அசை 92

திடமரு ளேயெனச் சிந்தைசெய் யாது தெளிவறுஞ்சோ
திடமரு ளேடணை யாதியிற் சிக்கித் திகைத்தனன்,மோ
திடமரு ளேறன்ன சூர்ச்செகுத் தாய்!திருச் செந்திலிந்நத்
திடமரு ளேதந் தவிர்த்துன தன்பிற் றிளைக்கவையே

இ-ள்

திடம்-உறுதியாயுள்ளது
அநனே-திருவருட் செல்வமே
என-என்பதாக
சிந்தைசெய்யாது-எண்ணமல்
தெளிவு அரும்-விளக்க மற்ற
சோதிடம்-சோதிடத்தையும்
மருள்-மயக்கம் தருவதான
எடணை-மூன்ருசைகள்
ஆதியில்-முதலியவற்றில்
சிக்கி-அகப்பட்டு
திகைத்தனன்-தவித்துள்ளேன்
மோதிடு-தாக்குதலையுடைய
அமருள்-போரில்
ஏறு அன்ன-ஆண் சிங்கம் ஒத்த
சூர்-சூரபன்மனை
செகுத்தாய்-கொன்றருளியவரே
திருச்செந்திலில-திருச்செந்தூரில் வந்து
நத்திடம்-விரும்பிப் பணிந்தேனில்லை
அருள்-கருணையினல்
ஏதம்-இடர்ப்பாடுகளை
தவிர்த்து-அறவே நீக்கி
உனது-தேவரீரது
அன்பில்-வழிபாட்டில்
திளைக்க-பேரின்பமுண்டாக்க
வை-அமைத்தருள்வீராக
எ. று. 93

திளைக்குங் கனதனத் தார்பலர் வாழ்க்கைக்கும் சீரியம
திளைக்குங் கனத னதிவாரிக் குந்தகுஞ் செந்திலெந்தை
திளைக்குங் கனதன மாதருள் ளங்கவர் திண்புயன்வந்
திளைக்குங் கனதனம் நீடச்செய் கின்றதென் சிந்தனையே

இ-ள்

திளைக்கும்-நிறைந்த
கன-பெருமையுடைய
தனத்தார்-செல்வர்கள்
பலர்-அனேகரது
வாழ்க்கைக்கும்-வசிப்புக்கும்
சீரிய-சிறப்புவாய்ந்த
மதில்-சுற்றுச்சுவரின்
திளைக்கும்-அநுபவிக்கவுள்ள
கனதன-பெரிய கொங்கைகளையுடைய
மாதர்-பெண்களது
உள்ளம்-மனதை
கவர்-தன்வசமாக்கும்
திண்-வலிமையுள்ள

ஐக்கும்-அழகினுக்கும்
கல்-மலையிடத்துவருகின்ற
நத-ஆண் ஆறும்
நதி-பெண் ஆறும்
கூடுகின்ற
வாரிக்கும்-கடலின்
சிறப்புக்கும்
தகும்-தகுதியுற்ற
செந்தில்-திருச்செந்தூரி
லுள்ள
எந்தை-முருகப்பெருமான்
புயன்-தோள்களை
யுடையவர்
வந்து-என்னிடம் எய்தி
இளைக்கும்-மெலிவைத்
தருகின்ற
கனத்தனம்-வன்மைச்
செயலை
நீட-மிகவும்(பலகாலம்)
செய்கின்றது-கையாள்வது
என்-என்னகாரணம்
சிந்தனையே-எனது மனமே
எ. று. 94

*சிந்தனையவிழி மாதர் மயலிற் றிகைத்தறிவைச்*
*சிந்தனையவிழி வெய்தேன்,செந் தூரனைச் செய்யதமிழ்ச்*
*சிந்தனையவிழிக் கார்நீப னைச்சிவன் செய்தவத்தின்*
*சிந்தனையவிழித் தெற்பாரென் றேத்தியுந் தேடுவனே*

இ—ள்

சிந்து-கடலினை
அனைய-ஒப்பாகிய
விழி-கண்களையுடைய
மாதர்-மடவார்களது
மயலில்-மோகத்தில்
திகைத்து-மயக்கமுற்று
அறிவை-மனத்தெளிவை
சிந்தன்-இழக்கமாட்டேன்
நைய-அதனால்வருந்தும்
இழிவு-கீழ்மையை [படி
எய்தேன்-பொருந்த
மாட்டேன்
செந்தூரனை-திருச்செந்
தூர்ப்பெருமானை
செய்ய-செம்மையான
அவிழ்-இதழ்விரித்து
இக்குஆர்-தேன்
பொருந்திய
நீபனை-கடப்பமாலை
யுடையவனை
சிவன்செய்-சிவபிரான்
புரிந்த
தவத்தின்-தவமாகத்
தோன்றிய
சிந்தனை-பிள்ளையான
கடவுளை
அ-சம்மதமுடன்
விழித்து-கண்களால்
என்-அடியேனை
பார்என்று-சிறப்பாக
நோக்கும்படி

தமிழ்-தமிழ்மொழியில் உள்ள
சிந்தனை-சிந்து முதலான இசைப்பாட்டுக்குரியவனை
ஏத்தியும்-துதிசெய்தும்
தேடுவன்-மனத்தாலும் நாடுவேன்
எ. று. ஏ. அசை

(இக்கவியில் ஒவ்வோரடியிலும் இரண்டாவது சீர்களில் முதற்கண் உள்ள ஐகாரத்தைக் குறுக்கமாகக் கொள்க.) 95

தேடுஞ் சரணஞ் செயுங்கொடுஞ் சொல்லினர் தீயுறவைத்
தேடுஞ் சரணம்ப லென்றொழி வேன் திதி செய்யும்அரி
தேடுஞ் சரணர் குருநாதன் வாழ்திருச் செந்திலினத்
தேடுஞ் சரணத்தின் காட்சியுங் கொள்வதிற் சிக்கிதுவே

இ-ள்

தேன்-தேனும்கூட
துஞ்ச-கொடுமையில் தோற்கும்படி
ரணம்-துன்பத்தை
செயும்-அடுத்தவருக்குப் புரிகின்ற
கொடும்-கடுமையான
சொல்லினர்-மொழி கூறுபவரது
தீஉறவை-கொடியநட்பை
தேடும்-நாடிப்பெற்று
சரண்-தஞ்சமென் றடைகின்ற
அம்பல்-பழிச்செயலை
என்று-எக்காலத்தில்
ஒழிவேன்-நீங்கப்பெறுவேன்
திதி-காத்தற்றொழிலை
செய்யும்-புரிகின்ற
அரி-திருமால்
தேடும்-தேடிச்சென்ற
சரணர்-திருவடியுள்ள பரமனது
குருநாதன்-குருநாதரான முருகப்பெருமான்
வாழ்-எழுந்தருளியுள்ள
திருச்செந்திலில்-செந்திலம்பதியில்
நத்து-விருப்பமுற்று
(என்றால் முன்பு)
ஏடும்-கடலில் எறிந்த ஏட்டுச்சுவடிகளும்
சரணத்தின்-பாததாமரைகளின்
காட்சியும்-தெரிசனத்தையும்
கொள்வதில்-பெற இருப்பதில் உள்ள
சிக்கு-தடையாயிருப்பது
இதுவே-இப்பழிச்செயலொன்றேயாம்
எ. று. 96

சிக்க மயிலப்ப னுஞ்செந்தி லான்அன்பு சேர்தவத்தோர்ச்
சிக்க மயிலப்ப ரன்றனை யேதுதி செய்தலை நே
சிக்க மயிலப்ப தாம்விழிக் கஞ்சலம் சித்திமுத்தி
சிக்க மயிலப்ப னீரிலை நீற்றினைத் தின்பதுண்டே

இ-ள்.

சிக்க-சிரசில் கொண்டையுடைய
மயில்-மயிலை வாகனமாகக் கொண்ட
அப்பனும்-தந்தையாகிய
செந்திலான்-செந்திலாண்டவன் மீது
அன்புசேர்-பக்தியமையைப் பெற்ற
தவத்தோர்-தவசிகளுடன்
சிக்கம்-சேராதிருக்கின்றேம்
மையில்-அஞ்ஞான மயக்கத்தால்
அ-அத்தகைய
பரன்றனையே-முருகப் பெருமானையே
துதிசெய்தலை-போற்றும் செயலை
நேசிக்கம்-விரும்பாதுள்ளேம்
அயில்-வேலையும்
அப்பு-அம்பையும்
அதுஆம்-அனையதாயுள்ள
விழிக்கு-மாதர் கண்பார்வைக்கு
அஞ்சலம்-அச்சமுற்றேமில்லை, ஆனால்
சித்தி-எண்வகை சித்துகளையும்
முத்தி-ஐக்கமுத்தினையும
சிக்க-எய்துவதற்கு விரும்பி
மைஇல்-குற்றமற்றதாய்
அ-அவ்விடத்தில் உதவுகின்ற
பன்னீர் இலை-பன்னீரிலையுட் பொதிந்த
நீற்றினை-திருநீற்றுப் பிரசாதத்தை
தின்பது-அருந்துதல் மட்டும்
உண்டு-வழக்கத்தில் உள்ளதாகும்
எ. று. ஏ அசை

திருச்செந்தூர் முருகன் சந்நிதியில் எப்போதும் தருவது பன்னீரிலை விபூதி. அதை உண்பதால் வினையும் நோயும் தீருமென்பர் 97

தின்மைக் குமருந்து நல்கித் தவிர்ப்பவன் செய்யபுனத்
தின்மைக் குமருந்து யர்தீரக் கொண்டவன் சிட்டர்உயிர்த்
தின்மைக் குமருந்து ணைப்பதம் சூட்டினன் செந்திலிற்சேய்
தின்மைக் குமருந்து பல்கோடி வெற்புடைத் தேவனன்றே

தின்-கடல்நீரைப் புசிக்கின்ற
மைக்கு-மேகத்தலைவனை இந்திரனுக்கு
மருந்து-தேவாமுதத்தை
நல்கி-உண்ணுமாறு உதவி
தவிர்ப்பவன்-அசுர பயத்தை மாற்றியவர்
செய்ய-செழுமையான
புனத்தின்-தினைக் காட்டிலிருந்த
மைக்கும்-கருமையான வள்ளிக்கு
அரும்துயர்-தன்னைப்பெற முடியாமலிருந்த துன்பம்
தீர-மாறும்படி
கொண்டவர்-திருமணமேற்றவர்
சிட்டர்-தேவராதிய மேலோரது
உயிர்-உயிர்வாழ்வை
தின்-உண்ணுமுறையில் எதிர்த்த
மைக்கும்-ஆட்டுக் கடாவிற்கும்
அரும்-பெறமுடியாமல்
துணை-இரண்டாயுள்ள
பதம்-திருவடிகள்
சூட்டினன்-பொருந்த ஊர்ந்தவர்
செந்திலில்-திருச்செந்தூரில் விளங்கும்
சேய்-முருகப் பெருமானவர்
தின்மைக்கு-பாவவினைத் தீமைக்கு
மருந்து-தரும் அரிய மருந்தாவர் அவர்
பல்கோடி-பலகோடிக் கணக்கான
வெற்பு-மலைநிலங்களை
உடை-தனக்கிடமாகக் கொண்ட
தேவன்-தெய்வமாவார்
ஏ, று அன்றே-அசை 98

தேவ ரதிபதி நான்முகன் மால்முதற் செப்புநர்சேர்ந்
தேவ ரதிபங்கன் போய்மாண்ட நாளிற் சிவன்றனக்கத்
தேவ ரதிபலச் செவ்வேள்செந் தூர்க்குகன் சேவடிப்போ
தேவ ரதிப மரிச்சிம்புள் நேர்பெருஞ் சித்தரதே

இ-ள்

தேவர்-வானவர்களுக்கு
அதிபதி-அரசனான இந்திரன்
நான்முகன்-பிரமதேவன்
மால்-திருமால்
அதிபல-மிக்கவீரமுடைய
செவ்வேள்-முருகப் பெருமான்
செந்தூர்-திருச்செந்தூரில் விளங்கும்

முதல்-மற்றுமுள்ளவராகிய
செப்புநர்-தேவர்பலர்
சேர்ந்து-ஒன்றுகூடி
ஏவ-சொல்லும்படிவிட்ட
தனால்
ரதிபங்கன்-ரதிகணவனான
மன்மதன்
மாண்ட-சிவன் தீவிழியா
லிறந்த
நாளில்-அத்தினத்தில்
சிவன்தன்-சிவபிரா
னுடைய
அக்கத்தே-தீக்கண்
மூலமாக
வரு-பொறியாக வந்
தருளிய

குகன்-குகக்கடவுள்
சேவடிப்போது-திருவடித்
தாமரைகள்
ஏவரது-யாருக்கு உரிய
தென்றால்
இபம்-மதயானையையும்
அரி-சிங்கத்தையும்
சிம்புள்-சரபப்பறவைகளை
யும்
நேர்-ஒப்பாயுள்ள
பெரும்-வீரமும் தவமும்
மிக்க
சித்தரது-அருட்செல்வர்
களுக்குச்சொந்தமாகும்
எ. று. ஏ. அசை 99

சித்தனந் தத்தைத் தருந்திருச் செந்தின்மெய்ச் சீருள்ளதே
சித்தனந் தத்தைத் தருந்திருச் செந்தின்மெய்ச் சீருள்ளதே
சித்தனந் தத்தைத் தருந்திருச் செந்தின்மெய்ச் சீருள்ளதே
சித்தனந் தத்தைத் தருந்திருச் செந்தின்மெய்ச் சீருள்ளதே

இ-ள்

சித்தன்-திருவருளாட
லுடையவரும்
நத்தத்து-சங்கினையணிந்த
ஐ-தலைவனாகிய திருமால்
தரும்-உதவிய
திரு-தேவிகளிருவரும்
செம்-செம்மையான
தில்-விருப்புடன்

மெய்ச்சு-பாராட்டுகின்ற
சீர்-கவர்ச்சி (அழகு)
உள்ள-நிலைபெற்ற

தேசி-எலுமிச்சங்கனி
ஒத்த
தனம்-கொங்கைகள்
தத்தை-ஆபத்தை
தரும்-கொடுக்கும் (என்று
கருதி)
திருச்சு-வேறான தவநெறி
யில் புகுத்தி
எம்-நானென்னும்
அகந்தையை
தின்-அழிக்கின்ற
மெய்-நிலைபேறான

தே-தெய்வமாயுள்ளவரும்
சித்-ஞானமென்ற
தனம்-செல்வமான
தத்-அதை
ஐத்து-விரைவில்
அருந்து-நுகர்கின்ற
இரு-விசாலமான
செந்தில்-உயிர்களான
பெரியோர்களைப்போல
மெய்ச்சு-(மாதரது)உட
விடத்து
ஈர்-இரண்டாக
உள்ள-அமையப்பெற்ற
சீர்-சிறப்புடையவர்கள்
உள்ள-மனதில் நினைக்க
தே-இனிமை தருபவரும்
ஆகிய முருகப் பெருமா
னுடைய
சித்து-சித்திகள்
அனந்தத்தை-பலவற்றை
தரும்-அன்பர் பெற
உதவுகின்ற
திருச்செந்தில்-திருச்செந்
தூரானது
மெய்ச்சீர்-அழியாப்புகழை
உள்ளதே-உடையதே
எ. று. [யாம் 100

செந்தூரந் தாதியர் சூழ்வள்ளி மேவுந் தினைப்புனத்தில்
செந்தூரந் தாதிவர் பூவேங்கை யானவன் திண்கைவைவேற்
செந்தூரந் தாதிருக் கில்லாதும் வீசுதற் றேர்ந்துய்குவார்
செந்தூரந் தாதிக் கவிநாறுங் கற்றுச் சிறந்தவரே

இ-ள்.

செந்தூரம்-குங்குமமணிந்த
தாதியர்-தோழிப்பெண்கள்
சூழ் பலர்-நெருங்க
வாழ்ந்த
வள்ளி-வள்ளிநாயகி
மேவும்-தங்கியிருந்த
தினை-தினைவிதைத்திருந்த
புனத்தில்-காட்டினிடம்
செம்-செம்மையான
தூர்-அடிப்பகுதியில்
அம்தாது-அழகியமகரந்தம்
செம்-செந்நிற இரத்தத்
தின்
தூர்-சேறனது
அந்தா-பொருந்தும்படி
யாகவும்
திருக்கு-மாறுபாடு (குறி
தவறுமல்)
இல்லாதும்-இல்லாமலும்
வீசுதல்-முருகன் ஏவுவதை
தேர்ந்து-தெரிந்தவராகி
உய்குவார்-நலமடை
வார்கள் (யாரெனில்)

| | |
|---|---|
| இவர்-ஏறப்பெற்ற | செந்தூர்-திருச்செந்தூரைக் குறித்த |
| பூ-பூக்களையுடைய | அந்தாதி-யமக அந்தாதி பின் |
| வேங்கை-வேங்கைமரமாக | கவி நூறும்-நூறு பாடல்களையும் |
| ஆனவன்-உருவெடுத்த வரும் | கற்று-பொருளறிந்துகற்று |
| திண்கை-வலிய திருக்கரத்தில் | சிறந்தவர்-சிறப்புற்றவர்கள் |
| வைவேல்-கூரிய வேலாயுதத்தை | ஏ. று. ஏ. அசை |

வேல் ஏவும் சிறப்பு-பகைவர் மீது ஆகும். எனவே உயிர்ப்பகை உடற்பகை தீர வேல் துணைபுரியும் என்பது கருத்து. 101

---